## நூற்குறிப்புகள்
## Bibliographical Data

| | |
|---|---|
| நூற்பெயர் | : சல்லிக்கட்டு—மதுரை மாவட்டம் |
| **Title** | : **Challikkattu in Madurai Dist.,** |
| ஆசிரியர் | : முனைவர் ஆ.சிவக்கொழுந்து |
| **Author** | : **Dr. A.Sivakkolunthu** |
| மொழி | : தமிழ் |
| **Language** | : **Tamil** |
| பதிப்பு | : முதற்பதிப்பு |
| **Edition** | : **First** |
| பதிப்பு நாள் | : டிசம்பர் 2001 |
| **Date of Publication** | : **December 2001** |
| பக்கங்கள் | : 168 + 30 |
| **Pages** | : **168 + 30** |
| விலை | : ரூ. 60/- |
| **Price** | : **Rs. 60/-** |
| வெளியீட்டாளர் | : ராஜப்பிரியா பதிப்பகம்<br>மதுரை—6 |
| **Publisher** | : **RajaPriya Pathippakam<br>Madurai-6** |
| அச்சகம் | : தி முல்லை ஆப்செட் பிரிண்டர்,<br>வாடிப்பட்டி. |
| **Printers** | : **The Mullaii Offset Printer,<br>VadiPatti** |
| அட்டை | : கெ.சில்வஸ்டர் பென்னட் |
| **Rapper Design** | : **K. Silverster Bennet.** |

# அணிந்துரை

முனைவர் தி.நடராசன்,
பேராசிரியர் & தலைவர்,
சுவடியியல் துறை,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

பண்டைத் தமிழகத்தின் பழம் பெருந்தலை நகரங்களுள் ஒன்று மதுரை. காலங்கள் மாறினாலும் பண்பாட்டுக்கூறுகள் மாறாமல் பாதுகாக்கப்பட்டு வருவதற்கு மதுரையும் சுற்றுப்புறங்களும் தங்கச் சான்றுகளாய்த் திகழ்கின்றன. அவ்வடிப்படையில் பண்டைத் தமிழக வீர விளையாட்டுக்களுள் தலை சிறந்தாகிய காளை விளையாட்டாகிய சல்லிக்கட்டு, மதுரைமாவட்டத்தில் எவ்வாறு நிகழ்ந்து வருகிறது என்பதை மையமாகக் கொண்டதே இவ்வாய்வு நூல்.

இவ்வாய்வின் முதல் இயலில் சல்லிக்கட்டு—சொல்விளக்கம், சல்லிக்கட்டின்தோற்றம், சல்லிக்கட்டின்வளர்ச்சி, சமயவிழாக்களில் சல்லிக்கட்டு, உலகநாடுகளில் காளைவிளையாட்டு, இந்தியாவில் காளைவிளையாட்டு, என்ற செய்திகள் விளக்கமாகவும் நுணுக்கமாகவும் அமைந்துள்ளன.

அடுத்து,இரண்டாவது இயலில் சல்லிக்கட்டுக் காளையினை மக்கள் வளர்க்கின்ற முறையும் களத்தில் அக்காளை எவ்வாறு நின்று செயல்படவேண்டும் என்பதற்கான பயிற்சிமுறை குறித்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. காளைவளர்த்தல் பற்றிய செய்திகள் விரிவாகவும் விளக்கமாகவும் அமைந்திருப்பது இவ்வாய்வுக்கு மெருகூட்டுகிறது. சல்லிக்கட்டுக் காளைகுறித்து இந்நூலில் காணப்படும் செய்திகள் காளை விளையாட்டினை அறியாதவாக்கு வியப்பினை ஏற்படுத்தும் என்பதில் அய்யமில்லை. அதேபோன்று காளையினைப் பழக்குவதற்குக் காளைவளர்ப்போர் மேற்கொள்கின்ற முறைகளை ஆய்வாளர் வெளிப்படுத்தியிருப்பது சிறப்பாக அமைந்துள்ளது.

மூன்றாவது இயலில் காளைவிளையாட்டின் வகைகளாகிய சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு, எருதுகட்டு, சலக்எருது, சேசப்படியெடுத்தல் என்பவைகள் விளக்கப்பட்டு ஒவ்வொரு விளையாட்டில் இடம் பெறும்

சிறப்புக்கூறுகள் சுட்டப்பட்டிருப்பது ஆய்வாளரின் உற்றுநோக்குத்திறனை வெளிப்படுத்திநிற்கிறது என்றால் மிகையில்லை.

அடுத்து சல்லிக்கட்டு—சார்ந்தநம்பிக்கைகள் என்ற நான்காம் இயலில் சல்லிக்கட்டோடு தொடர்புடைய நம்பிக்கைகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. நம்பிக்கை என்பது மனித சமூகத்தில் தொன்றுதொட்டு இன்றுவரை நின்றுநிலவும் பண்பாட்டுக்கூறாகும். சல்லிக்கட்டுத் தொடர்பான மக்கள் நம்பிக்கைகள் பொதுமைக்கூறுகள் பலவற்றைக் கொண்டிருப்பினும் சிறப்புக்கூறுகள் சிலவற்றைக் கொண்டிருப்பது வட்டாரம் சார்ந்த பண்பாட்டுக் கூறினைப் புலப்படுத்திநிற்கின்றது.

ஆய்வின் இறுதி இயலில் சல்லிக்கட்டுத் தொடர்புடைய கதைப்பாடல்களை ஆய்வாளர் எடுத்துக்காட்டியிருப்பது பராட்டத்தக்கதாய் உள்ளது. போரில் இறந்துபட்ட வீரனுக்குத்தான் நடுகல் என்ற நிலையில்லாமல் சல்லிக்கட்டில் இறந்துபட்ட வீரனுக்கும் நடுகல் உண்டு என்பதை இவ்வாய்வு நூல் வெளிப்படுத்தியிருப்பது வரலாற்றினை மீள்பார்வை மேற்கொள்வதற்குத் துணை செய்யும். மேலும் இவ்வியலில் சல்லிக்கட்டைக் காண்போரின் மனநிலைகளைச் சுட்டிக்காட்டியிருப்பது இவ்வாய்வுநூலுக்கு உரமூட்டுவதாய் அமைந்து விளங்குகின்றது.

இந்நூல், மக்கள் வரலாற்றினை முறையாகத் தெரிந்து கொள்வதற்குப் பெரிதும் துணைநிற்கும். தமிழகத்தில் நாட்டுப்புறங்களில் எத்தனையோ வீரவிளையாட்டுக்கள் காணப்படுகின்றன. அந்த வீரவிளையாட்டுக்களில் ஆய்வு செய்வதற்கு இந்த வீரவிளையாட்டுக் குறித்தநூல் வழிகாட்டியாய் அமையும். இந்த ஆய்வுநூலை உருவாக்கிய ஆய்வாளர் இந்த ஆய்வோடு தொடர்புடைய, இந்த ஆய்வுநூலில் குறிக்கப் பெறாத செய்திகளையும் பிற விளையாட்டுக்களையும் தனித்தனியாகவும் ஒப்பிட்டும் ஆய்ந்து மேலும் பல நல்ல ஆய்வு நூல்களை ஆக்கித்தருவார் என நம்புகிறேன்.

ஆய்வாளரின் ஆய்வுப்பணி சிறக்கவும் அவரின் ஆய்வு ஆர்வம் பெருகவும் என் வாழ்த்துக்கள்.

*தி. நடராசன்.*

# முன்னுரை

பண்டைத்தமிழர்கள் 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டினைவிளையாடி வந்துள்ளனர். அவ்விளையாட்டில் காளையினை அடக்கி வெற்றிபெற்ற வீரனுக்குப் பெண்ணைத்திருமணம் செய்து கொடுக்கும் வழக்கம் அக்கால மக்களிடம் இருந்துள்ளது. பெண்ணின் திருமணத்திற்காக நடத்தப்பட்ட ஏறுதழுவல் என்னும் விளையாட்டு காலப்போக்கில் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டாக மாற்றமடைந்துள்ளது. அவ்விளையாட்டினை நாட்டுப்புறமக்கள் தங்களின் ஊர்த்தெய்வங்கள் சார்பாக நடத்தி வருகின்றனர். சல்லிக்கட்டில் கலந்து கொண்ட காளைகளைப்பிடிக்கும் வீரர்கள் சிந்தும் இரத்தம் ஊர்த்தெய்வங்களுக்குப் படையாலாகின்றது. 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டினை ஊர்த்தெய்வங்களுக்கு நடத்தினால் தங்களுக்கு நோயினால் துன்பங்கள் ஏற்படாது என்றும் தங்களின் வேளாண்மை செழிப்படையும் என்றும் நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர்.

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு இந்துமதத்தினர்க்கு மட்டுமல்லாமல் . இசுலாம், கிறித்தவம் ஆகிய மதத்தினர்க்கும் பொதுவானதாகத்திகழ்கின்றது. மதுரைக்கு அருகிலுள்ள குலமங்கலம் என்னும் ஊரிலுள்ள இந்து மதத்தினர் தங்கள் ஊரிலுள்ள ராவுத்தபட்டி என்னும் இசுலாமியச் சமாதிக்குச் சல்லிக்கட்டு நடத்துகின்றனர். இதனோடுமட்டுமல்லாமல் மதுரைக்கு அருகிலுள்ள கஸிமங்கலம் என்னும் ஊரில் முனியாண்டிசாமிக்கு இந்து மதத்தினரோடு இசுலாமிய மதத்தினைத் தழுவிய நாட்டாண்மைக்காரர் கூட்டத்தினர் பங்கு கொண்டு சல்லிக்கட்டு நடத்திவருகின்றனர். மேலும் திண்டுக்கல் மாவட்டம் கொசவபட்டியில் வசிக்கும் கிறித்தவ மதத்தினைத் தழுவியவர்கள் தங்களின் அந்தோனியார் ஆலயத்தின் சார்பாக 'சல்லிக்கட்டு நடத்துகின்றனர்.

நாட்டுப்புறமக்களிடம் ஊர்த்தெய்வ வழிபாட்டினை நடத்திவருகின்ற பழக்கம் இருக்கும்வரை 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டும் தமிழக மக்களால் விளையாடப்பட்டுக் கொண்டேயிருக்கும். 'சல்லிக்கட்டு—மதுரை மாவட்டம்' என்னும் இவ்வாய்வு நூலில் சல்லிக்கட்டினை மட்டும் மையமாக கொண்டு ஆய்வு செய்யப்பட்டுள்ளது. சல்லிக்கட்டுடோடு பிற காளைவிளையாட்டுக்களையும் ஒப்பிட்டு ஆய்வு செய்தால் மேலும்

பல உண்மைகளைக் கண்டறியலாம். நாட்டுப்புற வீர விளையாட்டுக்களில் ஆய்வு மேற்கொள்வோர்க்கு இந்நூல் வழிகாட்டியாய் அமையும் என நம்புகின்றேன்.

சல்லிக்கட்டு—மதுரை மாவட்டம் என்னும் பொருளில் ஆய்வு செய்த என்னுடைய ஆய்வேட்டினை நூலாக வெளியிட அனுமதியளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழக நிருவாகத்தினர்க்கு முதலில் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். என்னுடைய ஆய்வேட்டினை நூலாக வெளியிடுவதற்கு நிதியுதவியளித்த தமிழ்வளர்ச்சித்துறை இயக்குநர், தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன.

என்னுடைய ஆய்வுக்கு வழிகாட்டியதோடு மட்டுமல்லாமல் என்னுடைய வாழ்க்கைக்கும் வழிகாட்டியாக விளங்கும் என்னுடைய ஆசான் பேராசிரியர் தி.நடராசன் அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை எழுதி அழகு சேர்த்ததோடு மட்டுமல்லாமல் என்னை ஊக்கப் படுத்தியுள்ளார். என்னுடைய ஆய்வேடு நூலாக வெளி வந்தமைக்குக் காரணமாகத் திகழ்ந்த என்னுடைய ஆசான் பேராசிரியர் தி.நடராசன் அவர்களுக்கு இதயப்பூர்வமான நன்றினைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கின்றேன். நூலின் அட்டைக்குரிய புகைப்படத்தினைக் கொடுத்துதவிய கல்வித்தகவல் பதிவு மய்யத்தின் இயக்குநர் பேராசிரியர் க.கோவிந்தன் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். நூலின் மேலட்டையினை வடிவமைத்துத் தந்த நண்பர் சில்வஸ்டர் பென்னட் அவர்களுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அச்சுப்படியினைச் சரிபார்த்த அன்புச்சகோதரர் ப.தொல்காப்பியனுக்கும் அன்புச்சகோதரி ஆ.பாப்பா அவர்களுக்கும் என்னுடைய நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். நூலினை நல்லமுறையில் அச்சிட்டுத் தந்த வாடிப்பட்டி முல்லை அச்சகத்தார்க்கும் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆ. சிவக்கொழுந்து.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | — | அகநானூறு |
| ஆ.இ. | — | ஆண்டு இல்லை |
| ஆ.பெ.இ. | — | ஆசிரியர் பெயர் இல்லை |
| உ.ஆ. | — | உரையாசிரியர் |
| க.ஆ. | — | கட்டுரை ஆசிரியர் |
| கழக வெளியீடு. | — | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| கலி. | — | கலித்தொகை |
| தொ.ஆ. | — | தொகுப்பாசிரியர் |
| ப. | — | பக்கம் |
| ப.ஆ. | — | பதிப்பாசிரியர் |
| ப.ஆக்கள். | — | பதிப்பாசிரியர்கள் |
| ப.இ. | — | பதிப்பகம் இல்லை |
| பக். | — | பக்கங்கள் |
| பா. | — | பாடல் |
| பி.இ. | — | பின்னிணைப்பு |
| பி.இ.ப. | — | பின்னிணைப்பு பக்கம் |
| பி.இ.பக். | — | பின்னிணைப்பு பக்கங்கள் |
| புறம். | — | புறநானூறு |
| மேலது. | — | மேலே குறிப்பிடப்பட்டுள்ளது |
| மொ.பெ.ஆ. | — | மொழிபெயர்ப்பாசிரியர் |
| ed. | — | Editor |
| eds. | — | Editors |
| p. | — | page |
| pp. | — | pages. |

# பொருளடக்கம்


| | |
|---|---|
| 1. ஆய்வு அறிமுகம் | 1 |
| 2. சல்லிக்கட்டுத் தோற்றமும் வளர்ச்சியும் | 8 |
| 3. சல்லிக்கட்டுக் காளைவளர்ப்பும் பயிற்சிமுறையும் | 31 |
| 4. காளைவிளையாட்டின் வகைகள் | 51 |
| 5. சல்லிக்கட்டு – சார்ந்த நம்பிக்கைகள் | 67 |
| 6. சல்லிக்கட்டும் – மக்களும் | 90 |
| 7. முடிவுரை | 140 |
| 8. துணைநூற்பட்டியல் | 157 |


# பின்னிணைப்புகள்


1. புகைப்படங்கள்
2. தகவலாளர்கள் பட்டியல்
3. காளைவளர்ப்பவர்கள் பட்டியல்
4. வாடிஅமைப்பு வரைபடம்
5. சல்லிக்கட்டுக் குறித்த அறிக்கை

## ஆய்வு அறிமுகம்

### ஆய்வுப்பொருள்

'சல்லிக்கட்டு — மதுரை மாவட்டம்' என்பது இவ்வாய்வின் ஆய்வுப் பொருளாகக் கொள்ளப்பட்டுள்ளது.

### ஆய்வின் நோக்கம்

சங்ககாலத் தமிழர்கள் 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டினை விளையாடியுள்ளனர். அவ்விளையாட்டு பிற்காலத்தில் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டாக மாற்றம் அடைந்துள்ளது. அவ்வாறு மாற்றம் அடைந்தற்குக் காரணம் என்ன? 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு ஏன் ஊர்த்தெய்வ வழிபாட்டில் இடம்பெற்றுள்ளது? சல்லிக்கட்டு என்னும் விளையாட்டால் மனிதர்களுக்குப் பெரிய காயங்களும் உயிர் அழிவும் ஏற்படுகின்றன. இருப்பினும் தமிழ் மக்களால் ஏன் 'சல்லிக்கட்டு' என்னும் வீர விளையாட்டு விளையாடப்பட்டு வருகின்றது? 'சல்லிக்கட்டு' என்னும் வீர விளையாட்டு தமிழகத்தில் பாண்டிய நாட்டில், அதிலும் குறிப்பாக மதுரை மாவட்டத்தில் மட்டும் பெருமளவில் நடைபெறுவதற்கான காரணம் என்ன? என்பன போன்ற வினாக்களுக்கு விடைகாணும் நோக்கில் இவ்வாய்வு அமைகின்றது. மேலும் 'சல்லிக்கட்டு' என்னும் வீரவிளையாட்டு எவ்வாறு நடைபெறுகின்றது. விளையாட்டின் விதிமுறைகள், சல்லிக்கட்டுடன் தொடர்புடைய சடங்குகள், நம்பிக்கைகள், போன்றவற்றை விளக்கிக் காட்டும் நோக்கிலும் இவ்வாய்வு அமைகின்றது.

### ஆய்வின் எல்லை

மதுரை வடக்கு, மதுரை தெற்கு, வாடிப்பட்டி, உசிலம்பட்டி, பேரையூர், திருமங்கலம், மேலூர்[1] ஆகிய வட்டங்களை உள்ளடக்கிய மதுரை மாவட்டம் ஆய்வின் களமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

கி.பி.ஆயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று நான்கு முதல் கி.பி. ஆயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது வரை உள்ள அய்ந்து ஆண்டுகள் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்ட காலமாகும்.

### முன் ஆய்வுகள்

'மதுரை வட்டாரத்தில் சல்லிக்கட்டும் மஞ்சிவிரட்டும்' என்னும் பொருளில் ஆ.முத்தையா ஆய்வுசெய்துள்ளார்.[2] இவ்வாய்வில்,

சல்லிக்கட்டு பற்றிய ஆய்வு, சுருக்கமாகவும் மஞ்சிவிரட்டு பற்றிய ஆய்வு விரிவாகவும் அமைந்துள்ளன. மதுரை மாவட்ட நாட்டுப்புறக்கதைப் பாடல்கள் என்னும் பொருளில் கா.கலைச்செல்வி ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வில் சல்லிக்கட்டில் மாடுபிடித்து வீரமரணம் எய்திய மூன்று மாடுபிடிவீரர்களின் கதைப்பாடல்களும் ஆராயப்பட்டுள்ளன. இவை தவிர ஆங்காங்கே நடந்த சல்லிக்கட்டு பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் கட்டுரைகளாக வெளிவந்துள்ளன.

மேலே கூறப்பட்ட செய்திகளிலிருந்து சல்லிக்கட்டு பற்றிய விரிவான ஆய்வு நிகழவில்லை என அறியமுடிகிறது. எனவே, சல்லிக்கட்டு குறித்த முழுமையான ஆய்வு செய்யப்பட வேண்டும் என்ற நோக்கில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

**ஆதாரங்கள்**

இவ்வாய்வுக்குப் பயன்பட்ட ஆதாரங்கள், முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் என இரண்டு வகையாகப் பகுக்கப்பட்டுள்ளன.

**முதன்மை ஆதாரங்கள்**

ஆய்வாளர் சல்லிக்கட்டு நடைபெற்ற பல ஊர்களுக்குச் சென்று தகவலாளிகளிடம் களஆய்வில் சேகரித்த தரவுகளும் சல்லிக்கட்டு நடைமுறை பற்றிய நேர்காணல் செய்திகளும் இவ்வாய்விற்கு முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

**துணைமை ஆதாரங்கள்**

சல்லிக்கட்டுச் செய்திகள் அடங்கிய நூல்கள், சடங்குகள் தொடர்பான நூல்கள், நம்பிக்கைகள் தொடர்பான நூல்கள், நாட்டுப்புறவியல் தொடர்பான ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள் ஆகியன துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

களஆய்வில் சேகரித்த தரவுகளின் மூலம் கிடைத்த செய்திகளை வகைப்படுத்தி விளக்குவதால் 'விளக்கமுறை அணுகுமுறை'யும் சமுதாயத்தின் பண்பாட்டு மரபுகளை வெளிக்கொணர்தல் என்ற அடிப்படையில் 'சமுதாயவியல் அணுகுமுறை'யும் களஆய்வில் சேகரித்த தரவுகளின் மூலம் கிடைத்த செய்திகளைப் பொருளடிப்படையில் பகுத்து ஆய்வு செய்வதால் 'பகுப்பாய்வு அணுகுமுறை' யும் இவ்வாய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு ஆய்வு அறிமுகம், ஆய்வு முடிவுகள் நீங்கலாகப் பின்வரும் அய்ந்து இயல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது.

1. சல்லிக்கட்டுத் தோற்றமும் வளர்ச்சியும்,
2. சல்லிக்கட்டுக் காளைவளர்ப்பும் பயிற்சிமுறையும்,
3. காளைவிளையாட்டின் வகைகள்,
4. சல்லிக்கட்டு சார்ந்த நம்பிக்கைகள்,
5. சல்லிக்கட்டும் — மக்களும்.

### இயல்களின் விளக்கங்கள்

'ஆய்வு அறிமுகம்' என்னும் முதல் பகுதியில் ஆய்வினைப் பற்றியும் ஆய்வேட்டினைப் பற்றியும் அறிமுகம் செய்வதாக அமைந்துள்ளது. இதில் ஆய்வுப் பொருள், ஆய்வின் நோக்கம், ஆய்வின் எல்லை, முன் ஆய்வுகள், ஆதாரங்கள், முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வேட்டின் அமைப்பு, இயல்களின் விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன.

சல்லிக்கட்டுத் தோற்றமும் வளர்ச்சியும் என்னும் இயலில் 'சல்லிக்கட்டு' அறிமுகம், சல்லிக்கட்டுப் பெயர்க்காரணம், சல்லிக்கட்டின் தோற்றம், விளையாட்டுக்களம், சங்க இலக்கியத்தில் ஏறுதழுவல், சிலப்பதிகாரத்தில் ஏறுதழுவல், சல்லிக்கட்டின் வளர்ச்சி, சமயவிழாவில் சல்லிக்கட்டு, நரபலி, எருதுவிளையாட்டில் நடுகல், உலகநிலையில் காளைவிளையாட்டு, காளைச்சண்டை, சப்பானில் காளைச் சண்டை, காளைச் சவாரி, இந்திய அளவில் காளை விளையாட்டு, அசாமில் காளைச் சண்டை, கர்நாடக மாநிலத்தில் காளை விளையாட்டு, கம்பளா, கம்பளாவின் வகைகள், பசுவுல பண்டுக, எட்ல பந்தம், தமிழகத்தில் சல்லிக்கட்டு, மதுரை மாவட்டத்தில் காளை விளையாட்டு, பரிசுப்போட்டி என்பன விளக்கப்பட்டுள்ளன.

அடுத்து 'சல்லிக்கட்டுக் காளைவளர்ப்பும் பயிற்சிமுறையும்' என்னும் இயலில் கன்று தேர்வு, சுழிகள், நன்மை பயக்கும் சுழிகள், தீமை பயக்கும் சுழிகள், கன்றினை வளர்த்தல், கன்றுக்கு உணவு, பனிமேய்ச்சல், தண்ணீர் காட்டல், நீச்சல் பயிற்சி, காளைகளின் பல்லும் வயதும் மூக்கணாங்கயிறு குத்துதல், காளைக்கு உணவு, காயடிக்கப்படாமை, யானை அசைவு, காளையின் நிறங்கள், காளையின் தலை, கண்கள், கண்களின் வகைகள், காதுகள், கொம்புகள்,

கொம்புகளின் குறைகள், தொங்குதசை, திமில், தொப்புழ், வால், கால்கள், காளைகளின் கால்களிலுள்ள குறைபாடுகள், கால் குளம்பு சீரமைப்பு, குளம்பின் வகைகள், காளைக்குப் பயிற்சி கொடுத்தல், மணல் சாக்கு கட்டிப் பயிற்சி கொடுத்தல், பொம்மையைக் குத்தப் பயிற்சி கொடுத்தல், எலுமிச்சைப் பழத்தைக் குத்தப் பயிற்சி கொடுத்தல், ஒலியீட்டுப் பயிற்சி கொடுத்தல், குறியீட்டுப் பயிற்சி கொடுத்தல் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

'காளை விளையாட்டின் வகைகள்' என்னும் அடுத்த இயலில் காளை விளையாட்டின் வகைகள், சல்லிக்கட்டு நடத்தும்முறை, சல்லிக்கட்டில் காளைகளை அவிழ்த்துவிடும் முறை, வாடி—விளக்கம், சல்லிக்கட்டு விளையாட்டின் விதிமுறைகள், சாட்டிய சல்லிக்கட்டு, சாட்டாத சல்லிக்கட்டு, திடல் சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு நடைபெறும் ஊர்கள், மஞ்சுவிரட்டு நடைபெறும் விதம், தொழு, பொங்கல் மஞ்சுவிரட்டு, எருதுகட்டு, சலக் எருது, சேசப்படியெடுத்தல் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

'சல்லிக்கட்டு சார்ந்த நம்பிக்கைகள்' என்னும் இயலில் நம்பிக்கைகள், நம்பிக்கை—சொல்விளக்கம், நம்பிக்கை குறித்து அறிஞர்களின் கருத்துகள், நம்பிக்கையின் வகைகள், சல்லிக்கட்டு சார்ந்த நம்பிக்கைகள், சல்லிக்கட்டு நடத்துபவர்களின் நம்பிக்கைகள், காப்புக்கட்டுதல், பச்சை மூங்கில், தீட்டுக்கழித்தல், காளைவளர்ப்போரின் நம்பிக்கைகள், கோயில்காளை, காளைவளர்த்தல், வசிய மை முறித்தல், மாடுபிடி வீரர்களின் நம்பிக்கைகள், பல்லி நிமித்தம், பெண் தலைமுடியினை விரித்தபடியே எதிர்ப்படுதல், மூன்றுபேர் சேர்ந்து போதல், வசியம் செய்தல், கடவுள் நம்பிக்கை, பொதுமக்களின் நம்பிக்கைகள், மாட்டுப்பொங்கல், அடுப்புக்கரி, தீய ஆவிகள், முத்துக்குடை, சேத்தாண்டிவேசம், குழந்தைப்பேறு, சோதிடத்தில் நம்பிக்கை, தெய்வத்தைப் புறக்கணித்தல் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

'சல்லிக்கட்டும்—மக்களும் என்னும் இயலில், அழகத்தேவன் கதையின் சுருக்கம், ஒச்சாத்தேவர் பெண் கேட்டல், ஒய்யம்மாள் காளைகளைச் சல்லிக்கட்டில் விடுதல், அழகத்தேவன் மாடுபிடித்தல், ஒய்யம்மாளும் அழகத்தேவனும் சவால்விடுதல், காளைகளின் குணங்கள், அழகத்தேவன் சகுனம் பார்த்தல், அழகத்தேவன் காளைகளைப் பிடித்து ஒய்யம்மாளை மணம் முடித்தல், கருப்பத்தேவன் கதைச்சுருக்கம், சமீன்தார் பரிசு அறிவித்தல், கருப்பத்தேவன் ஆசிபெறல், கருப்பத்தேவன் காளைகளைப் பிடித்தல், கருப்பத்தேவன் சமீன்தாரின் மனைவியைப் பெறுதல், கருப்பத்தேவனைப் புகழ்தல், மன்னன்

சின்னாண்டி கதைச் சுருக்கம், படைக்கஞ்சாச் சின்னன் காளைகளை அடக்குதல், வாடிவாசல் நாவலின் சுருக்கம், பரிசுகளைச் சாற்றிக் காளைகளை அவிழ்த்தல், பிச்சி காளைகளைப் பிடிக்கும் முறை, சல்லிக்கட்டில் பிடிபட்ட காளையின் நிலை, காளைகளுக்குச் சிலை எடுத்தல், சல்லிக்கட்டுச் சிந்து, சல்லிக்கட்டில் முறைகேடுகள், காளை வளர்ப்பவர்களிடம் காணப்படும் முறைகேடுகள், காளைக்கு மதுகொடுத்தல், காளை வளர்ப்போர் மாடுபிடிவீரன் மோதல், மாடுபிடிவீரர்கள்—காளை வளர்ப்போரின் முறைகேடுகள், சல்லிக்கட்டு விளையாட்டில் பணிகள், பூசாரியாக இருத்தல், காவல், வாடிகட்டுதல், நிரந்தரமான வாடி, தற்காலிகமானவாடி, அறிவிப்பு செய்தல், சமூக ஒற்றுமை, தாழ்த்தப்பட்ட மக்கள் பெறுமிடம், கள்ளரும் பள்ளரும், சல்லிக்கட்டில் மரியாதைகள், சமய ஒற்றுமை, இந்து—இசுலாம் ஒற்றுமை, சல்லிக்கட்டில் கிறிஸ்தவர்களின் பங்கு, காளைவளர்ப்போரின் மனநிலை, சல்லிக்கட்டும் பெண்களும், சல்லிக்கட்டும் இன்றைய நிலையும் சல்லிக்கட்டும் பொதுமக்களும், சல்லிக்கட்டும் தனியார் நிறுவனங்களும், சல்லிக்கட்டும் எதிர்காலமும் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

அடுத்து 'ஆய்வு முடிவுகள்' என்னும் பகுதியில், இந்த ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பின்னர் துணைநூற்பட்டியல் இடம்பெற்றுள்ளது. அதில் ஆய்வுக்குத் துணையாய் அமைந்த நூற்களின் பட்டியல் அகரவரிசையில் தரப்பட்டுள்ளன. இதனைத் தொடர்ந்து பின் இணைப்புகள் இடம்பெற்றுள்ளன.

பின் இணைப்பு எண் 1—இல் 'சல்லிக்கட்டு' காளைகளை வீரர்கள் பிடித்தல், நம்பிக்கை, காளைகளுக்குச் சிலை எடுத்தல், மாடுபிடிவீரர்களுக்குச் சிலை எடுத்தல் போன்ற செய்திகளைக் கொண்ட புகைப்படங்கள் இடம் பெற்றுள்ளன.

பின் இணைப்பு எண் 2—இல் தகவலாளர்கள் பட்டியல் இடம்பெற்றுள்ளது.

பின் இணைப்பு எண் 3—இல் காளை வளர்ப்பவர்கள் பட்டியல் இடம்பெற்றுள்ளது.

பின் இணைப்பு எண் 4—இல் வாடி அமைப்பு வரைபடம் இடம்பெற்றுள்ளது.

பின் இணைப்பு எண் 5—இல் சல்லிக்கட்டுக் குறித்த அறிக்கை இடம்பெற்றுள்ளது.

## குறிப்புகள்

1. மதுரை மாவட்டத்தில் களஆய்வு செய்த சல்லிக்கட்டு நடைபெற்ற ஊர்கள்
   1. அச்சம்பட்டி
   2. அயன்பாப்பாகுடி (அவனியாபுரத்தின் ஒரு பகுதி)
   3. அவனியாபுரம்
   4. அலங்காநல்லூர்
   5. ஊத்துமேடு (சோளங்குருணிக்கு அருகில்)
   6. எழுமலை
   7. எலும்பூர்
   8. கடச்சனேந்தல்
   9. கரடிக்கல்
   10. களிமங்கலம்
   11. கல்லனை
   12. காஞ்சரம்பேட்டை
   13. கீழப்பட்டி
   14. குருவித்துறை
   15. குலமங்கலம்
   16. சக்குடி
   17. சத்திரப்பட்டி
   18. சோளங்குருணி
   19. திருவாதவூர்
   20. தொட்டப்பநாயக்கனூர்
   21. நடுவக்கோட்டை
   22. நெடுங்குளம்
   23. பனையூர்
   24. பாப்பநாயக்கன்பட்டி
   25. பாப்பிநாயக்கன்பட்டி
   26. T.பாரைப்பட்டி
   27. பாரைபத்தி
   28. பாலமேடு
   29. அ.புதுப்பட்டி
   30. கொ.புளியங்குளம்
   31. போடிநாயக்கன்பட்டி (வாடிப்பட்டியின் ஒரு பகுதி)
   32. முக்கம்பட்டி
   33. மேலூர்
   34. சௌ.வலையபட்டி
   35. விக்கிரமங்கலம்

2. ஆ.முத்தையா, 'மதுரை வட்டாரத்தில் சல்லிக்கட்டும் மஞ்சிவிரட்டும்' அச்சிடப்பெறாத எம்ஃபில் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1981.

3. கா.கலைச்செல்வி, மதுரை மாவட்ட நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், அச்சிடப் பெறாத முனைவர்ப் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1989.

## சல்லிக்கட்டுத் தோற்றமும் வளர்ச்சியும்

### சல்லிக்கட்டு—அறிமுகம்

சங்ககாலத் தமிழர்கள் விளையாடிய 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டிலிருந்து பெற்ற வளர்ச்சி நிலையாகச் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு விளங்குகின்றது. வலிமையும் முரட்டுக் குணமும் நிறைந்த காளையினை எந்தவிதமான ஆயுதமும் இல்லாமல் மாடுபிடிவீரன் தனிஒருவனாக நின்று காளையை வெற்றி பெறும் விளையாட்டே 'சல்லிக்கட்டு' எனப்பெயர் பெற்று விளங்குகின்றது. 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு மாடுபிடிவீரனின் உயிருக்கும் உடலுக்கும் சேதம் விளைவிக்கக் கூடிய விளையாட்டாகும். இவ்விளையாட்டில் மாடுபிடிவீரன் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் காளையினை அடக்க வேண்டும் என்ற விதிமுறையினை விழாக்குழுவினர் விதித்துள்ளனர். குறிப்பிட்ட எல்லைக்குள் காளையினை அடக்கிய மாடுபிடிவீரனை மட்டுமே வெற்றி பெற்றவனாக விழாக்குழுவினர் அறிவிக்கின்றனர். 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டில் வெற்றி பெற்ற மாடுபிடி வீரனுக்கு அவன் பிடித்த காளையின் திறமைக்கு ஏற்றவாறு பரிசுகளை விழாக்குழுவினர் வழங்குகின்றனர். இவ்விளையாட்டு தமிழகத்தில் தெய்வ வழிபாட்டோடு தொடர்புபடுத்தப்பட்டுள்ளது. 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டினைத் தமிழகத்தின் மற்ற மாவட்டங்களைவிட மதுரை மாவட்டத்தில் பல ஊர்களிலுள்ள மக்கள் விளையாடி வருகின்றனர்.

### சல்லிக்கட்டுப் பெயர்க்காரணம்

"சல்லி என்ற பெயருடைய யாதவ வீரன் ஒருவன் இருந்தான் எனவும் அவன் பெயராலேயே சல்லிக்கட்டு என்ற இந்தவிழா வழங்குகிறது எனவும் சிலர் கூறுகின்றார்கள்."[1] இக்கருத்துக்கு எந்த வித ஆதாரமும் இல்லை எனினும் ஒரு தனிமனிதனின் பெயரால் இவ்விளையாட்டு அமைந்திருக்காது எனக் கருதுவதற்கு இடமிருக்கிறது. "சல்லி என்பது விழாவின் போது மாட்டின் கழுத்தில் கட்டப்படுகின்ற வளையத்தின் பெயர்."[2] மாட்டின் கழுத்தில் கட்டுப்படுகின்ற வளையத்தை வைத்துக் கொண்டு இவ்விளையாட்டிற்குச் சல்லிக்கட்டு என்னும் பெயர் ஏற்பட்டிருக்காது எனக்கருத வாய்ப்புள்ளது. மேலும் சல்லி என்பதற்கு "ஆபரணத் தொங்கல், சிறிய காசு"[3] என்று வேறு பொருள்களும் இருக்கின்றன. இவற்றை வைத்துப் பார்க்கும் பொழுது காளைகளின் கழுத்தில் (சல்லியை) காசு முடிப்பைக் கட்டிவிட்டிருக்கலாம் என

எண்ணுவதற்கு இடமிருக்கிறது. இதனை அடிப்படையாக வைத்துப் பார்த்தால் இன்றும் சல்லிக்கட்டிற்குக் கொண்டுவரப்படுகின்ற காளைகளின் கழுத்தில் ஆபரணங்கள் அணியப் பட்டிருக்கின்றன. காளைகளை அடக்கிய வீரனுக்குப் பரிசாகப் பணமும் கிடைக்கின்றது. எனவே இக்கருத்து ஏற்புடையதாக உள்ளது. மேலும் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு "முரட்டு எருதுகளைக் கொட்டு முழக்குடன் வெளியில் விடுத்து அவற்றினைத் தழுவிப் பிடிக்கச் செய்யும் ஒருவிழா"[4] எனவும் கூறப்படுகின்றது. இக்கருத்தும் ஏற்றுக் கொள்ளத்தக்கதாகவே உள்ளது. நாட்டுப்புறத்தில் இன்றும் 'சல்லிக்கட்டு' கொட்டு முழக்கத்துடன் நடைபெறுகின்றது. சல்லிக்கட்டிற்குக் கொண்டுவரப்படுகின்ற காளைகளும் முரட்டுக் குணம் உடையவையாகவே இருக்கின்றன. இம்முரட்டுக் காளைகளை அடக்கிய வீரனுக்குச் சிறிய காசுகளைப் பரிசாக விழாக்குழு வழங்கியதால் 'சல்லிக்கட்டு' எனப் பெயர் பெற்றிருக்க வேண்டும் எனக் கருதப்படுகின்றது.

### *சல்லிக்கட்டின் தோற்றம்*

பழங்கால மனிதர்கள் காடுகளில் வேட்டையாடிக் கொண்டு நாடோடி போலத் திரிந்தனர். பின்னர் அவர்கள் வேளாண்மைத் தொழிலை மேற்கொண்ட பின்பு தங்களின் வேளாண்மைத் தொழிலுக்கு உதவியாகக் காடுகளில் திரிந்த காளைகளையும் பசுக்களையும் தேர்ந்தெடுத்துள்ளனர் என்பதனைச் சிந்துச் சமவெளி நாகரிகத்தில் காளைவழிபாடு சிறப்பிடம் பெற்றதின் மூலம் அறிந்து கொள்ளமுடிகின்றது. சிந்துச் சமவெளிமக்கள் திமில் பருத்த மாடுகளைப் பழக்கப்படுத்தியுள்ளனர் என்ற குறிப்புக் காணப்படுவதால் அக்கால மக்கள் வேளாண்மைத் தொழிலுக்குக் காளைகளைப் பயன்படுத்தியுள்ளனர் என்பது புலனாகின்றது. சல்லிக்கட்டிற்காக வளர்க்கப்படுகின்ற காளைகளுக்குத் திமில் பருத்திருப்பதைப் போலவே சிந்துச் சமவெளி மக்கள் பழக்கப்படுத்தியிருந்த மாடுகளுக்கும் திமில் பருத்திருக்கின்றது. எனவே சிந்துச் சமவெளிமக்கள் பழக்கப்படுத்தியிருந்த மாடுகள் சல்லிக்கட்டுக் காளைகளைப் போலவே காளைவிளையாட்டில் இடம் பெற்றிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது.

பழங்கால மக்கள் தங்களுக்கு ஓய்வு கிடைக்கும் நேரத்தில் விளையாட்டுக்களில் ஈடுபட்டிருக்கின்றனர். விளையாடுவதன் மூலம் தங்களின் உடலை வலிமைப்படுத்திக் கொள்ளலாம் என்ற நோக்கத்தில் உடல் திறன் கொண்ட விளையாட்டுக்களை அக்கால மக்கள் விளையாடியிருக்கின்றனர். சிலம்பாட்டம், குத்துச்சண்டை, கல்தூக்குதல்,

ஏறுதழுவல் போன்ற விளையாட்டுக்கள் உடல் வலிமைக்காகவும் போட்டிக்காகவும் விளையாடப்படும் விளையாட்டுக்களாகும். இவ்விளையாட்டுக்களுள் 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டு காலமாற்றத்தால் பல்வேறு மாறுதல்களைப் பெற்று 'சல்லிக்கட்டு' எனத் தற்காலத்தில் பெயர் பெற்று விளங்குகின்றது.

### விளையாட்டுக்களம்

குறிஞ்சி நிலம் மலையும் மலைசார்ந்த அமைப்புடையதாக இருப்பதாலும் நெய்தல் நிலம் கடலும் கடல் சார்ந்த அமைப்புடையதாக இருப்பதாலும் காடும் காடுசார்ந்த நிலமாகிய முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்களிடத்தில் இவ்விளையாட்டுத் தோன்றிப் பின்னர் மற்ற நிலங்களில் வாழுகின்ற மக்களிடத்திலும் பரவியுள்ளது. இவ்வாறு மற்ற நிலங்களில் வாழுகின்ற மக்களிடத்தில் இவ்விளையாட்டுப் பரவியிருந்தாலும் முல்லை நிலத்தையுடைய பாண்டிய நாட்டிலேயே இன்றும் இவ்விளையாட்டு அதிக அளவில் செல்வாக்குப் பெற்றிருப்பதைக் காண்கின்றோம். இதற்கு முக்கியக் காரணம் முல்லைநிலத்தின் அமைப்பாகும். இந்நில அமைப்பு மாடுகள் வளர்ப்பதற்கும் சல்லிக்கட்டு நடத்துவதற்கும் ஏற்ற வசதியுடையதாக இருக்கின்றது.

### சங்க இலக்கியத்தில் ஏறுதழுவல்

முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்களின் சமூக விளையாட்டாகவும் திருமண உறவோடு தொடர்புடைய விளையாட்டாகவும் 'ஏறுதழுவல்' என்னும் வீரவிளையாட்டு இடம் பெற்றிருக்கிறது என்பதனை முல்லைக் கலியின் ஏழு பாடல்கள் தெளிவாக உணர்த்துகின்றன. முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்களிடத்தில் காளையுடன் பெண்ணைக் குறித்து வளர்த்து அதனை அடக்குபவனுக்கே அப்பெண்ணை மணம் முடித்துக் கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. "குரால் நிறத்தையிடைய கண்ணினையுடைய கொடிய ஏற்றினைத் தழுவியவன் மானைப் போன்ற நோக்குடைய பெண்ணை அடைவான் எனவும் சிவந்த ஏற்றின் சினத்திற்கு அஞ்சாமல் அதனைத் தழுவியவன் மூங்கிலைப் போன்ற தோளுடைய பெண்ணை அடைவான்" (கலி. — 104) என்ற அறிவிப்பின் மூலம் காளையை அடக்கியவனே பெண்ணைத் திருமணம் செய்துள்ளான் என்பது புலனாகின்றது.

"எழுந்தது துகள்

ஏற்றனர் மார்பு

கவிழ்ந்தன மருப்புக்

கலங்கினர் பலர் (கலி. — 102)

துகள் எழுந்தது அவர்களும் மார்புகளை எதிரே கொடுத்தனர். அவற்றின் கொம்புகளும் கவிழ்ந்து குத்தின அதனால் தழுவினவர்கள் பலரும் கலங்கிப் போனார்கள்" (கலி. — 102). இக்கருத்தின் மூலம் பல வீரர்களும் அடக்குமாறு அறிவித்துப் பலகாளைகளை முல்லை நில ஆயர்கள் அவிழ்த்து விட்டுள்ளனர். அதனை வீரர்கள் அடக்க முடியாமல் தோற்றனர் என்பதனை அறிந்து கொள்ளமுடிகின்றது.

"பொருபுகல் நல்லேறு கொள்பவரல்லார்
திருமாமெய் தீண்டலர்(கலி. — 102)

பொருகின்ற புகற்சியுடைய நல்ல ஏற்றைத் தழுவுவரல்லது அழகினையுடைய மாந்தளிர் போலும் நிறத்தையுடைய மெய்யைச் சேராரென்று" (கலி. — 102). ஆற்றல் மிக்க காளையினை அடக்கிய வீரனையே ஆயர்மகள் திருமணம் செய்து கொள்வாள் என்பது தெளிவாகின்றது.

### *சிலப்பதிகாரத்தில் ஏறுதழுவல்*

சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையில் 'ஏறுதழுவல்' இடம் பெற்றுள்ளது. இதில் பெண் குறித்துக் காளை வளர்த்ததைத் தெளிவாகக் காணமுடிகின்றது.

"தொழுவிடை ஏறுகுறித்து வளர்த்தார்
எழுவரிளங் கோதையர்

என்றுதன் மகளை நோக்கி" (சிலப்பதிகாரம் ப.206).

காளையுடன் பெண்ணைக் குறித்து வளர்த்து அதனை அடக்குபவனுக்கே பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் வழக்கம் அக்காலமரபாக இருந்துள்ளது என்பதனைச் சிலப்பதிகாரத்தின் மூலமும் அறிந்து கொள்ள முடிகின்றது.

### *சல்லிக்கட்டின் வளர்ச்சி*

'ஏறுதழுவல்' என்னும் வீரவிளையாட்டு பல்வேறு மாறுதல்களைப்

பெற்றுச் 'சல்லிக்கட்டு' என்னும் பெயர் பெற்றுத் தற்காலத்தில் விளங்குகின்றது. 'வாடிவாசல்' அமைத்து ஒரு குறிப்பிட்ட தூரத்திற்குள் காளையினை மாடுபிடிவீரன் பிடிக்க வேண்டும் என்ற விதிமுறைக்கு உட்பட்ட 'சல்லிக்கட்டு' என்னும் வீரவிளையாட்டு 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டுத் திருமண உறவுக்காக நடத்தப்பட்ட நிலை மாறித் தற்பொழுது சமயச் சடங்கோடு தொடர்புபடுத்தப்பட்டு நடைபெறுகின்றது.

### சமயவிழாவில் சல்லிக்கட்டு

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு தமிழகத்தில் சமயவிழாவில் இடம் பெறுகின்றது. இவ்விளையாட்டினை நாட்டுப்புறமக்கள் ஊர்த்தெய்வங்களுக்காக நடத்துகின்றனர். சல்லிக்கட்டு நடத்தினால் ஊர்மக்களுக்கு நன்மை கிடைக்கும் என்று நம்புகின்றனர். மேலும் ஊர்த்தெய்வங்களுக்குச் சல்லிக்கட்டு நடத்தப்படாவிட்டால் ஊர்மக்களுக்குத் தீமை ஏற்படும் என்ற நம்பிக்கையிலும் நாட்டுப்புறமக்கள் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர்.

### நரபலி

பண்டைக்கால மக்களிடம் நாட்டுப்புறத் தெய்வங்களுக்கு நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்திருக்கின்றது. தனிப்பட்ட நேர்த்திக் கடனுக்காகவோ அல்லது ஊர்ப்பொது நன்மை கருதியோ நரபலி கொடுக்கும் வழக்கம் அக்கால மக்களிடம் காணப்பட்டுள்ளது. இதற்கான சான்றுகள் தொல்லெச்சங்களாகக் கிடைக்கின்றன. உலக நாடுகளிலும் நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்திருக்கின்றது. "ஆசுத்திரேலியாவில் தார்லிங்கு ஆற்றுப் பழங்குடியினர் வளைதடிகளால் ஒருவர் தலையை இன்னொருவர் காயப்படுத்தி வெளிப்படும் இரத்தத்தைச் சவக்குழிக்கருகில் கிடத்தப்பட்டுள்ள பிணத்தின் மேல்படுமாறு செய்கின்றனர். நடுஆசுத்திரேலிய அருண்டா இனக்குழுவினரிடையே சவக்குழியின் மீது பெண்டிர் தமது தலைகளிலிருந்து இரத்தத்தைச் சிந்தும் வழக்கத்தைக் காணலாம். இவ்வாறு செய்வது இறந்தவர்களுக்கு வலிமையூட்டுவதும் அவர்கள் மறு உலகிற்குச் செல்வதற்குத் துணைபுரிவதும் ஆகும்."[5] நடுஆசுத்திரேலியப் பகுதியினைப் போன்றே உலகில் பல இடங்களில் நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்துவருகின்றது. "நல்ல விளைச்சலுக்காக மனிதப் பலி கொடுக்கும் வழக்கம் உலகின் பல்வேறு பகுதிகளிலும் காணமுடிகின்றது. எடுத்துக்காட்டாக மேற்கு ஆப்பிரிக்காவில் நிலங்களில் விதையிடுவதற்கு முன்பாக ஓர் ஆணையும் பெண்ணையும்

மண்வெட்டிகளாலும் களைக்கொத்திகளாலும் அடித்துக் கொன்று அவர்களின் பிணங்களைப் புதிதாக உழுத நிலத்தின் நடுவில் புதைப்பர். இதனால் அந்த நிலம் உயிர்ப்புச் சக்தி மிக்குற்று அதிக விளைச்சலை நல்கும் என உறுதியாக நம்பினர்."[6] இக்கருத்துகளின் மூலம் இறந்த உயிர் மறுவுலகை அடைவதற்கும் விளைநிலங்களில் நல்ல விளைச்சல் விளைவதற்கும் அக்காலமக்கள் மனிதப்பலி கொடுத்திருத்தல் வேண்டும் என்பதனை ஒருவாறு அறிந்து கொள்ள முடிகின்றது. உலக நாடுகளில் மட்டுமல்லாமல் இந்திய மண்ணிலும் இறைவனுக்கு நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. ஒரிசா மாநிலத்தின் தென்பகுதியான கஞ்சம் மாவட்டத்தில் வசித்து வந்த பழங்குடியினரும் பிற இனத்தவர்களும் இறைவனுக்கு நரபலி கொடுக்கும் வழக்கத்தினைக் கடைபிடித்து வந்துள்ளனர். நரபலி என்பதனை ஒரிசா மக்கள் 'மெரிகா' என்று கூறுகின்றனர். நரபலியிடப்படும் மனிதனையும் 'மெரிகா' என்றே கூறுகின்றனர். மெரிகா மனிதனை விலைகொடுத்தே வாங்குகின்றனர். இவனைப் பலியிடும் நாள்வரை அவன் விரும்பிய பொருள்களை யெல்லாம் கொடுத்து வளர்க்கின்றனர். இறைவனுக்கு மெரிகா என்னும் நரபலியினைக் கொடுக்கும்பொழுது 6 அடி உயரமுள்ள கம்பினைத் தரையில் ஊன்றிக் கொள்வர். பின்னர் அதனருகில் குழிவெட்டி வைத்துக் கொள்வர். தரையில் ஊன்றிய கம்பின் மேல் பகுதியில் மெரிகா மனிதனை அவனின் தலைமுடியால் கம்பின் நுனியில் கட்டித் தொங்கவிடுவர். பின்னர் நான்கு உதவியாளர்கள் மெரிகா மனிதனின் கைகளையும் கால்களையும் ஆளுக்கொரு பக்கம் பிடித்து இழுத்துக்கொள்வார்கள். பின்னர் பூசாரி மெரிகாச் சடங்கினைச் செய்து மெரிகா மனிதனின் கழுத்தை வெட்டிவிடுகின்றார். உடல் குழியில் கிடத்தப்படுகின்றது. தலை கம்பின் நுனியிலே தொங்கிக் கொண்டிருக்கும். ஒரே நேரத்தில் மூன்றுபேரைப் பலிகொடுக்கலாம். இதில் ஒன்று சூரியனுக்கும் மற்றொன்று கிழக்குமேற்குத்திசைக்கும் மற்றொன்று பூமிக்கும் கொடுக்கப்படுகின்றது. மூன்று பேருக்கு மேல் பலியிடக்கூடாது என அப்பகுதி மக்கள் விதிமுறை வைத்துள்ளனர். 'மெரிகா' என்னும் நரபலிச் சடங்கினை இறைவனுக்குச் செய்தால் இறைவனருளால் மண்வளப்படும் எனவும் மன்னரின் கொடுங்கோன்மை ஆட்சிமாறும் எனவும் மக்கள் நம்புகின்றனர்.[7] ஒரிசா மக்களும் நரபலி மூலம் மண் வளப்படும் எனவும் மண் வளத்தால் விவசாயம் செழிக்கும் எனவும் மேலும் மன்னரின் கொடுங்கோன்மை ஆட்சிமாறும் என்ற நம்பிக்கையாலும் 'மெரிகா' என்ற நரபலிச் சடங்கினைச் செய்துள்ளனர் என்பது புலனாகின்றது.

ஒரிசா மாநிலத்தைப் போன்றே தமிழகத்திலும் நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது.

"மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்
பட்டின மருங்கின் படைகெழு மாக்களும்
முந்தச் சென்று முழுப்பலி பீடிகை
வெந்திறல் மன்னற்கு உற்றதை ஒழிக்க எனப்
பலிக்கொடை புரிந்தோர் வலிக்கு வரம்பு ஆக என
கல் உமிழ் கவணினர் கழிப். பிணிக் கறைத்தோல்
பல் வேல் பரப்பினர் மெய்உறத் தீண்டி
ஆர்த்து களம் கொண்டோர் ஆர் சமர் அழுவத்து
சூர்ந்து கடைசிவந்த சுடு நோக்குக் கருந்தலை
வெற்றிவேந்தன் கொற்றம் கொள்க என
நரபலி — பீடிகை நலம் கொள வைத்த ஆங்கு
உயிர்ப்பலி உண்ணும் உருமுக்குரல் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி ஊட்டி.

மருவூர்ப் பாக்கத்திலுள்ள மறத்தினைக் கொண்ட வீரரும் பட்டினப் பாக்கத்திலுள்ள படைக்கலமுடைய வீரரும் முற்படச் சென்று பெரிய பலிபீடத்தில் வெவ்விய திறலையுடைய எம் அரசற்கு உறும் இடையூற்றை யொழித்து வெற்றி தருக வெனத் தம்மைப் பலியாகக் கொடுத்தவர் வலிமைக்கு எல்லையாகக் கடவரென வஞ்சினங் கூறிக் கல்லினை வீழாங் கவணினையுடையராய் ஊண் பொருந்திய கரிய தோலால் இயற்றப்பட்ட பரிசையுடன் பலவேலின் மிகுதியையுடையராய்த் தோள்தட்டி ஆரவாரஞ்செய்து போர்க்களத்தைத் தமதாக்கிக் கொண்டோர் அரிய அமர்க்களப் பரப்பிலே அச்சத்தைச் செய்து சுடுங்கொள்ளி போலுங்கடை சிவந்த பார்வையையுடைய தமது பசுந்தலையை வேந்தன் வெற்றி கொள்கவென்று நன்றாகிய பலிபீடத்திலே நன்மை பொருந்த வைத்து அப்பொழுதே உயிர்ப்பலியுண்ணும் இடியின் குரல் போலும் முழக்கத்தையுடைய மயிர் சீவாத தோலாற்போர்த்த வீர முரசத்தால் உயிராகிய சிறந்த பலியை உண்பிக்க" (சிலப்பதிகாரம் இந்திரவிழவூரெடுத்த காதை வரி : 76 - 88).

மாமல்லபுரத்திலுள்ள திரௌபதி ரதம் மற்றும் வராக மண்டபத்திலும் காணப்படுகின்ற சிற்பங்களில் துர்க்கை அம்மனுக்குத் துர்க்கை அம்மனின் அடியவர்கள் தன் தலையை அரிந்து கொடுப்பதாக அமைந்துள்ள சிற்பமும் காணப்படுகின்றது. (கி.பி.630 — 658)[8] மேலும் புள்ளமங்கை என்னும்

வடக்குச் சுவரிலும் நவகண்டச் சிற்பம் காணப்படுகின்றது.[9] (கி.பி. 925–951) நவகண்டச் சிற்பங்கள் தவிர நவகண்டக் கல்வெட்டும் காணப்படுகின்றது. முதல் குலோத்துங்கச் சோழ மூவரையதேவன் என்பவன் மல்லல் பகுதியில் இருந்தான். இவனுக்கு வந்த வியாதியைப் போக்குவதற்காக இவன் கீழ்பணிபுரிந்த வீரன் அம்பலக் கூத்தன் என்பவன் தன் தலையை அரிந்து காளிக்குப் பலிகொடுத்தான். இதற்காக இவனது மனைவிக்கு நிலம் அளித்ததை இக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.[10] (கல்வெட்டுப் படியெடுத்தல், வேதாச்சலம்) கல்வெட்டுச் செய்தி மூலமாகவும் நவகண்டச் சிற்பங்களின் மூலமாகவும் இலக்கியச் செய்தி மூலமும் பழங்காலமக்கள் இறைவனுக்கும் மன்னனுக்கும் நரபலி கொடுத்துள்ளனர் என்பது புலனாகின்றது. இறைவனுக்கு நரபலி கொடுப்பதன் மூலம் தங்களுக்கு ஏற்படுகின்ற இன்னல்கள் தீரும் என்று பழங்கால மக்கள் நம்பியுள்ளனர் எனக் கருதப்படுகின்றது. மேலும் தான் விரும்பியவற்றைப் பெறுவதற்கு இறைவனுக்கு நரபலியிட்டால் பெற்றுவிடலாம் எனவும் நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். இதற்குச் சான்றாக நாட்டுப்புறக் கதைப்பாடலும் உள்ளது. காட்டாளம்மன் கோவில் கருவூலத்தைக் கொள்ளையடிப்பதற்கு அறுபத்தியொரு திருடர்கள் காட்டிலுள்ள காட்டாளம்மன் கோவில் பக்கம் வந்தனர். கோவில் கருவூலத்தை எடுக்க நரபலி கொடுக்க வேண்டும் எனப் பேசினர். இதற்கு நிறைசூலி பொன்னிறத்தாளைப் பலியிட்டுக் காட்டாளம்மன் கோவில் கருவூலத்தைத் திருடர்கள் எடுத்துக் கொண்டனர்''[11] எனப் பொன்னிறத்தாள் கதைப்பாடல் கூறுகின்றது. இறைவனிடமிருந்து தான் விரும்பியவற்றைப் பெறுவதற்கும் இறைவனின் தாக்குதலிலிருந்து விடுபடவும் நரபலி கொடுக்கும் வழக்கம் தமிழக மக்களிடத்தில் இருந்துள்ளது என்பதைத் தெளிவாக அறிந்துகொள்ள முடிகின்றது.

இறைவனுக்கு நரபலி கொடுப்பதற்குப் பிற்காலத்தில் மக்கள் முன்வராமல் இருந்திருக்கலாம். நரபலி கொடுக்க விருப்பமில்லாமல் இருக்கும் மக்களிடத்தில் வற்புறுத்தி இறைவனுக்கு நரபலி கொடுப்பது நல்லதல்ல என்ற நோக்கத்தின் காரணமாக 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டு 'சல்லிக்கட்டு' எனப்பெயர்பெற்றுச் சமயவிழாவில் இடம் பெற்றுள்ளது எனக் கருதலாம். 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டினால் ஏற்படும் மனித இரத்தத்தை இறைவனுக்குக் காணிக்கையாக்கியுள்ளனர் என்பது புலனாகின்றது. இதனடிப்படையில் இன்றும் 'சல்லிக்கட்டு' என்னும் வீரவிளையாட்டு இறைவனுக்குப் பலிகொடுக்க வேண்டும் என்ற

நோக்கத்தில் பல ஊர்களில் தெய்வ வழிபாட்டோடு தொடர்புடைய சமயவிழாவாக இடம்பெற்று வருகின்றது. ஊர்த்தெய்வங்களுக்குச் சல்லிக்கட்டு நடத்த வேண்டும் எனவும் 'சல்லிக்கட்டு' ஊர்மக்களால் ஊர்த்தெய்வங்களுக்கு நடத்தபடவில்லையெனில் காலரா, பஞ்சம் ஆகியவை ஊர்மக்களுக்கு ஏற்படும் என்ற நம்பிக்கையினால் ஊர்மக்கள் சல்லிக்கட்டினை நடத்தி ஊர்த்தெய்வங்களுக்கு மனிதப் பலி கொடுக்கின்றனர். இவ்வீரவிளையாட்டில் உயிர் நீத்த வீரனுக்கு அவன் நினைவாக நடுகல் எடுக்கும் வழக்கம் இருந்தது என்பதைக் கல்வெட்டு எடுத்தியம்புகின்றது.

### *எருதுவிளையாட்டில் நடுகல்*

பண்டைக் காலத்தில் போரில் இறந்த வீரனுக்கும் வேறு வீரசாகசங்கள் செய்த வீரனுக்கும் நடுகல் எடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. இதனடிப்படையில் வீரவிளையாட்டாகிய எருது விளையாட்டில் இறந்த வீரனுக்கும் எடுக்கப்பட்ட நடுகல் கிடைத்துள்ளது. சேலம் மாவட்டம் பெத்தநாயக்கன் பாளையத்தில் கிடைத்த ஒரு நடுகல் எருது விளையாட்டில் இறந்த ஒருவனைப் பற்றிக் கூறுகின்றது. எதற்காக எப்போது எருது விளையாடினான் என்ற செய்தி கல்வெட்டில் இடம் பெறவில்லை.

"கொவுரிச் சங்கன்
கருவந் துறையி
லே எருது விளை
யாடி பட்டான்
சங்கன் மகன் பெ
ரிய பயலு நட்டக
ல்லு"[12]

இக்கல்வெட்டின் மூலம் கொவுரிச் சங்கன் என்பவன் கருவந்துறை என்னுமிடத்தில் நடந்த எருது விளையாட்டில் இறந்தான் என்றும் அவனுக்குச் சங்கனுடைய மகன் பெரிய பயலு அவனுடைய வீரத்தின் நினைவாக நடுகல் எடுத்துள்ளான் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொள்ள முடிகின்றது. தர்மபுரி மாவட்டத்தில் எருது பிடிப்பது போன்றுள்ள சில எழுத்தில்லாத நடுகற்களும் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டுச் சித்திரங்களாலும் எருது விளையாட்டு ஒரு வீர விளையாட்டாக இருந்ததனை அறிந்து கொள்ள முடிகின்றது.

மதுரைப் பகுதியிலும் மாடுபிடிவீரனுக்கு நடுகல் எடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. “அழகத்தேவன் என்ற மாடுபிடிவீரன் தன்னுடைய மாமன் மகளைத் திருமணம் செய்து கொள்வதற்காக விக்கிரமங்கலத்தில் நடைபெற்ற சல்லிக்கட்டில் தன்னுடைய மாமன் அவிழ்த்துவிட்ட ஏழுகாளைகளை அடக்கிவிட்டு மேடையை நோக்கி அழகத்தேவன் செல்லும் பொழுது அவனை ஏழாவது காளை பின்புறமாக வந்து குத்திக் கொன்றுவிட்டது. அழகத்தேவனின் வீரத்தின் நினைவாகச் செக்காணூரனிக்கு அருகிலுள்ள சொரிக்கான் பட்டியில் நடுகல்[13] எடுத்து அப்பகுதிமக்கள் வழிபாடு செய்து வருகின்றனர். இதனைப்போன்றே “திருவாதவூருக்கு அருகிலுள்ள முக்கம்பட்டி என்னும் ஊரில் நடைபெற்ற சல்லிக்கட்டில் திருப்புவனத்திற்கு அருகிலுள்ள பூவந்தி என்னும் ஊரைச் சார்ந்த செல்லச்சாமி என்ற மாடுபிடி வீரன் இறந்துவிட்டான். செல்லச்சாமியின் வீரத்தின் நினைவாக முக்கம்பட்டியில் செல்லச்சாமியின் உறவினர்கள் நடுகல் எடுத்து முக்கம்பட்டியில் சல்லிக்கட்டு நடைபெறும் அன்று வழிபடுகின்றனர்”[14] மாடுபிடி வீரர்களுக்கு நடுகல் எடுத்திருப்பதன் மூலம் அக்கால மக்கள் எருது விளையாட்டினை வீர விளையாட்டாகக் கருதியுள்ளனர் என்பது புலனாகின்றது.

### *உலகநிலையில் காளைவிளையாட்டு*

காளையோடு மனிதன் விளையாடும் ‘சல்லிக்கட்டு’ என்னும் விளையாட்டு தமிழகத்தில் மட்டுமல்லாது உலக நாடுகளிலும் விளையாடப்பட்டு வருகின்றது. இவ்விளையாட்டு உலக நாடுகளில் ‘காளைச்சண்டை’*(Bull fight)* எனப் பெயர் மாற்றம் பெற்று விளங்குகின்றது. மேலும் இவ்விளையாட்டு விதிமுறைகளாலும் விளையாட்டு அமைப்பாலும் சல்லிக்கட்டிலிருந்து வேறுபட்டுள்ளது. இவ்விளையாட்டு உலக அளவில் மக்களால் விளையாடப்பட்டு வருகின்றது.

### *காளைச்சண்டை (Bull fight)*

‘காளைச்சண்டை’ என்னும் விளையாட்டு ஸ்பெயின், மெக்சிகோ, வெனிசுலா, கொலம்பியா, தெற்குப்பிரான்ஸ், லத்தீன் அமெரிக்கா, பெரு, செர்மனி, போர்த்துக்கீசு ஆகிய நாடுகளில் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. காளைச்சண்டை என்னும் வீரவிளையாட்டு ஸ்பெயின் நாட்டில் 15–ஆம் நூற்றாண்டிலிருந்து நடைபெற்று வருகின்றது. இவ்விளையாட்டு மன்னரின் முடிசூட்டுவிழா, திருமணவிழா,

வாரிசுக்குரிய ஆண்குழந்தைகளின் பிறந்தநாள்விழா ஆகியநாட்களில் சிறப்பாக நடத்தப்படுகின்றது. காளைச்சண்டை நடைபெறும் மைதானம் 'ஏரினா' எனப்பெயர் பெற்றுள்ளது. இதில் சுமார் 50,000 பேர் அமர்ந்து பார்க்கும் அளவுக்கு வசதி செய்யப்பட்டிருக்கும் பார்வையாளர்களின் கூட்டத்திற்குள் காளை புகுந்துவிடாமல் இருக்கத் தடுப்பு ஏற்படுத்தப்பட்டிருக்கும். இசைக்கருவிகளின் முழக்கத்துடன் குதிரைவீரரும் உதவியாளர்களும் அணிவகுத்து வருகின்றனர். இக்காளையினை குதிரைமீது அமர்ந்து இருக்கும் வீரன் ஒருவன் தம் கையில் வைத்திருக்கும் வேலினால் காளையின் கழுத்து, திமில் ஆகிய இடங்களில் மூன்றுமுறை குத்திக் காயப்படுத்துகின்றான். இவ்வாறு காயம்பட்ட காளை சினம் ஏற்பட்டு ஏரினா முழுவதும் ஓடுகிறது. இதனைக் காளையோடு சண்டைபோடும் வீரர்மட்டும் கவனமாகக் கவனித்து அதன் குணங்களைத் தெரிந்து கொண்டு காளையோடு சண்டையிடத் தயாராகின்றான். பின்னர் மூன்று உதவியாளர்கள் ஏரினாவிற்குள் அரைவட்ட வடிவமாக ஓடிவந்து தங்களின் கையிலுள்ள கூர்மையான மர ஈட்டிகளால் குத்திவிட்டுச் செல்கின்றனர். பின்னர் மீண்டும் இசைக்கருவிகள் மெல்லிசையை முழக்குகின்றன. இறுதியில் காளைப்போர் வீரன் சிவப்புக் கொடியினை அசைத்துக் காளையின் கவனத்தை ஈர்க்கின்றான். காளை சிவப்புக் கொடியை அசைக்கும் வீரனைத் தாக்க முற்படுகிறது. அப்பொழுது காளைச்சண்டை வீரன் விலகிக் கொள்கிறான். இவ்வாறு காளை களைப்பாகும் வரை காளைச்சண்டை வீரன் சிவப்புக் கொடியினை அசைக்கின்றான். காளை களைத்தவுடன் காளைச்சண்டைவீரன் தன் கையிலுள்ள கத்தியினால் காளையின் கொம்புகளுக்கு நடுவே குத்திக் கொன்றுவிடுகின்றான். காளைப்போரில் கொல்லப்பட்ட காளையின் இறைச்சி விழாக்குழுவினருக்கு உரிமையுடையதாகும். காளைச்சண்டையில் வெற்றி பெற்ற வீரனுக்கு அக்காளையின் ஒரு காதினையும் யாராலும் அடக்க முடியாத வண்ணம் சிறப்பாகவும் அற்புதமாகவும் வெற்றி பெற்ற வீரனுக்குக் கொல்லப்பட்ட காளையின் இரண்டு காதுகளையும் அதன் வாலையும் விழாக் குழுவினர் பரிசாகக் கொடுக்கின்றனர்."[15]

### *சப்பானில் காளைச்சண்டை (Bull fight)*

காளைச்சண்டை என்னும் இவ்விளையாட்டு சப்பானிலும் நடைபெறுகின்றது. இவ்விளையாட்டு மற்ற நாடுகளைப்போல் இல்லாமல் சப்பானில் மாறுபட்டு நடைபெறுகின்றது. சப்பானில் 'காளைச்சண்டை'

என்னும் விளையாட்டு 'டோக்யூ' எனப் பெயர் பெற்று விளங்குகின்றது. 'டோக்யூ' என்னும் விளையாட்டு சுமார் 300 ஆண்டுகளாக சப்பானியர்களால் விளையாடப்பட்டு வருகின்றது. இவ்விளையாட்டு சப்பானியர்களின் சிறப்பு வாய்ந்த பழமையான விளையாட்டாகக் கருதப்படுகின்றது. 'டோக்யூ' என்னும் விளையாட்டு ஸ்பெயினைப் போன்று இல்லாமல் காளைக்கு எதிரே காளையே சண்டையிடுகின்றது. இரண்டு காளைகளை மைதானத்தில் விழாக்குழுவினர் அவிழ்த்து விடுகின்றனர். பின்னர் இரண்டு காளைகளையும் 'செக்கோ' என்னும் தூண்டுகோலர்களின் தூண்டுதலால் சண்டையிட்டுக் கொள்ளும் காளைகளில் ஒன்று மண்டியிடப்படும் பொழுதும் அல்லது பிரண்டு ஓடும் பொழுதும் விளையாட்டு முடிவு பெறுகின்றது.[16] சப்பானில் நடைபெறும் 'டோக்யூ' என்னும் காளைச்சண்டை விளையாட்டு தமிழகத்தில் நடைபெறும் சேவல்சண்டை அல்லது சேவற்கட்டு என்னும் விளையாட்டுக்கு ஒப்பாக இருக்கின்றது. சேவல் வெற்றியடையும் பொழுது அதன் உரிமையாளருக்குப் பெருமை ஏற்படுகிறது. இதனைப் போன்றே சப்பானில் காளையோடு காளை சண்டையிட்டு வெற்றிபெறும் போது காளையின் உரிமையாளருக்குப் பெருமை ஏற்படுகின்றது.

### *காளைச்சவாரி (Bull riding)*

'காளைச்சண்டை' என்னும் விளையாட்டு மட்டுமல்லாமல் மேலை நாடுகளில் 'காளைச்சவாரி' என்னும் விளையாட்டும் நடைபெற்று வருகின்றது. காளையின் மீது சவாரியாளன் ஒரு குறிப்பிட்ட நேரம் அமர்ந்து சவாரி செய்வதே 'காளைச்சவாரி' என்னும் விளையாட்டாகின்றது. காளையின் மீது சவாரியாளன் அமர்ந்து கொள்ள ஆசனமோ அல்லது விரிப்போ பயன்படுத்தப்படவில்லை. ஆனால் காளையின் உடல் பகுதியில் கயிறு மட்டும் கட்டப்பட்டிருக்கும் சவாரியாளன் காளையின் மீது ஏறிக் கொண்டு காளையின் உடல் பகுதியில் கட்டப்பட்டிருக்கும் கயிற்றினை ஒரு கையில் பிடித்துக் கொண்டு மற்றொரு கையினை மேலே தூக்கிக் கொண்டு சவாரி செய்ய வேண்டும். சவாரியாளன் காளையின் மீது கட்டப்பட்டுள்ள கயிற்றினைத் தொட்டுவிட்டால் சவாரியாளன் விளையாட்டில் தோல்வியுற்றதாகக் கருதப்படுகின்றான். காளையின் மீது சவாரி செய்பவன் காளையினை விரைவாக ஓட்டிக் கொண்டு 8 நொடிகள் சவாரி செய்ய வேண்டும். இவ்விளையாட்டில் அதிகநேரம் சவாரி செய்தவனே வெற்றி பெற்றவனாகின்றான்.[17]

### இந்திய அளவில் – காளைவிளையாட்டு

காளைவிளையாட்டு இந்தியாவிலும் சில மாநிலங்களில் நடைபெற்று வருகின்றது. இந்தியாவில் அசாம், கர்நாடகா, ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் காளைவிளையாட்டு நடைபெறுகின்றது. தமிழ்நாட்டில் காளைவிளையாட்டு நடைபெறுவது போல் அசாம் மாநிலத்திலும் கர்நாடக மாநிலத்திலும் ஆந்திரப் பிரதேசத்திலும் நடைபெறவில்லை. மேலும் இம்மாநிலங்களில் காளை விளையாட்டின் அமைப்புமுறையும் காளைவிளையாட்டின் பெயரும் தமிழ்நாட்டில் நடைபெறும் காளைவிளையாட்டிலிருந்து வேறுபட்டுள்ளது.

### அசாமில் காளைச்சண்டை

தமிழ்நாட்டில் பொங்கல் பண்டிகையினைத் தொடர்ந்து சல்லிக்கட்டு நடைபெறுவதைப் போலவே அசாமிலும் 'மாக்பிஹூ' என்னும் பண்டிகையினைத் தொடர்ந்து காளைச்சண்டை நடைபெறுகின்றது. மாக்பிஹூ பண்டிகையின் தொடக்கமாக 'உருகா' என்ற நிகழ்ச்சி நடைபெறுகின்றது. அன்று மக்கள் வயல்களிலும் வீடுகளிலும் முற்றங்களிலும் கூடி விருந்து நடத்துவார்கள். மறுநாள் பழைய குப்பைகளைத் தீயிட்டு எரிப்பார்கள். பின்னர் அக்னிபகவானை வழிபட்டு வணக்கம் செலுத்துகின்றனர். இந்த நாளில் அசாமில் சில பகுதிகளில் கோழிச்சண்டையும் காளைச்சண்டையும் நடைபெறுகின்றன. மேலும் சிப்சாகர் பகுதியில் எருமைச்சண்டையும் நடைபெறுகின்றது. அசாம் மன்னர்களின் ஆட்சிக் காலத்திலிருந்து இப்பழக்கம் அசாம் மாநிலத்தில் தொடர்ந்து பின்பற்றப்பட்டு வருகின்றது."[18]

### கர்நாடக மாநிலத்தில் காளைவிளையாட்டு

கர்நாடக மாநிலத்தில் காளை தொடர்பான விளையாட்டு 'கம்பளா' என்னும் விளையாட்டு. கர்நாடகா மாநில மக்கள் பெரிதும் விரும்பத்தக்க விளையாட்டுகளுள் ஒன்றாக விளங்குகின்றது.

### கம்பளா – (Kambala)

கர்நாடக மாநிலத்தின் தென்பகுதியான துளுவ நாட்டில் 'கம்பளா' என்னும் விளையாட்டு நடைபெறுகின்றது. இவ்விளையாட்டு விவசாயம் செழிப்பாக வளர வேண்டும் என்பதற்காக ஊர்த்தெய்வ வழிபாட்டில் இடம்பெறுகின்றது. இவ்வாறு ஊர்த்தெய்வத்திற்குக் 'கம்பளா' என்னும் விளையாட்டினை நடத்தினால் விவசாயம் செழிப்படையும் எனத்

துளுவநாட்டு மக்கள் நம்புகின்றனர். இந்த நம்பிக்கையின் அடிப்படையில் மார்கழி மாதத்தில் (தனுர்மாதம்) 'கம்பளா' என்னும் விளையாட்டு நடைபெறுகின்றது. இவ்விளையாட்டினை ஊர்ப்பெரியவரின் நிலம் அல்லது கோவிலுக்குச் சொந்தமான நிலத்தில் ஊர்மக்கள் நடத்துகின்றனர். கர்நாடகாவில் மிகவும் புகழ்வாய்ந்த 'கம்பளா' வண்டாரு என்னும் ஊரில் நடைபெறும் கம்பளாவாகும்.[19]

### விளையாட்டுக்களம்

'கம்பளா' என்னும் விளையாட்டு நன்றாக உழவு செய்த தொழி நிலத்தில் நடைபெறுகின்றது. உழவு செய்த தொழிநிலத்தின் அளவு சுமார் 100 அடி நீளமும் 15 அடி அகலமும் கொண்டதாக அமைந்திருக்கும். சில இடங்களில் இதனைக் காட்டிலும் இன்னொரு மடங்கு பெரிய அளவுடைய நிலமும் விளையாட்டுக்களமாக அமைந்திருக்கும். இவ்விளையாட்டு நிலத்திற்கு லவகுசா, செயவிசயா, போட்டிச் சென்னயா போன்ற பெயர்களையும் அவ்வூர் மக்கள் வைத்துள்ளனர். இவ்விளையாட்டில் நுகம் பூட்டிய இரண்டு எருமைக்கடாய்களாகப் பல சோடி எருமைக்கடாய்கள் விளையாட்டுக் களத்தில் கலந்து கொள்கின்றன. இதில் ஒவ்வொரு சோடி எருமைக்கடாய்களையும் ஒருவன் ஓட்டிக் கொண்டுவருவான். இவ்வாறு ஓட்டப்படும் எருமைக்கடாய்களில் முதல் சோடி எருமைக்கடாய்களாக ஓடிவருபவைகளே வெற்றி பெற்றவையாகக் கருதப்படுகின்றது. இவ்விளையாட்டு நான்கு வகைகளில் கர்நாடக மாநிலத்தில் நடைபெறுகின்றது.

### கம்பளாவின் வகைகள்

'கம்பளா' என்னும் விளையாட்டு தென்கர்நாடகாவில் நான்கு வகைகளில் ஊர்மக்களால் விளையாடப்பட்டு வருகின்றது.

1. நேகிலா ஓட்டா,
2. ஹக்கத ஓட்டா,
3. கோருகலகே ஓட்டா,
4. ஹனேகலகே ஓட்டா,

என்று நான்கு வகைகளாக ஊர்மக்கள் பகுத்துள்ளனர்.

**1. நேகிலா ஓட்டா**

'நேகிலா ஓட்டா' என்பது தொழி நிலத்தில் கலப்பை பூட்டி உழுது கொண்டே எருமைக்கடாய்களை விரட்டிச் செல்லும் விளையாட்டாகும். பல சோடி எருமைக்கடாய்கள் கலந்து கொள்ளும் இவ்விளையாட்டில் எந்தச் சோடி எருமைக்கடாய்கள் குறைந்த நேரத்தில் எல்லையினை வந்து சேருகின்றதோ அவையே வெற்றி பெற்றவையாக விழாக் குழுவினரால் அறிவிக்கப்படுகின்றன.[21]

**2. ஹக்கத ஓட்டா**

'ஹக்கத ஓட்டா' என்னும் விளையாட்டு தொழி நிலத்தில் நடைபெறுகின்றது. ஒரு சோடி எருமைக்கடாய்களின் கழுத்தில் நுகம் பூட்டப்பட்டு அந்த நிலத்தின் நடுவில் ஒரு சிறிய இரும்புக்கம்பி இணைக்கப்பட்டிருக்கும். அந்த இரும்புக் கம்பியின் நடுவில் கயிற்றினைக் கட்டிக் கொண்டு ஒருவன் எருமைக்கடாய்களை விரட்டிக் கொண்டே ஓட வேண்டும். இவ்வாறு பல எருமைக்கடாய்கள் கலந்து கொள்ளும். இவ்விளையாட்டில் எந்தச் சோடி எருமைக்கடாய்கள் முதலாவதாக எல்லையினை வந்து சேருகின்றதோ அவையே வெற்றி பெற்றவையாக விழாக் குழுவினரால் அறிவிக்கப்படுகின்றன.[22]

**3. கோருகலகே ஓட்டா**

'கோருகலகே ஓட்டா' என்னும் விளையாட்டு தொழி நிலத்தில் எருமைக்கடாய்களின் கழுத்தில் நுகம்பூட்டி அந்த நிலத்திலிருந்து ஒரு கம்பினை இணைத்து அந்தக் கம்பியின் மறுநுனியில் நீளமான பலகை இணைக்கப்பட்டிருக்கும். இப் பலகையின் மீது ஒருவன் ஏறி நின்று கொண்டு எருமைக்கடாய்களை விரட்டிச் செல்லுவான். இவ்வாறு பல சோடி எருமைக்கடாய்கள் கலந்து கொள்ளும் இவ்விளையாட்டில் எந்தச் சோடி எருமைக்கடாய்கள் முதலாவதாக எல்லையினை வந்து சேருகின்றதோ அவையே வெற்றி பெற்றவையாக விழாக் குழுவினரால் அறிவிக்கப்படுகின்றன.[23]

**4. ஹனேகலகே ஓட்டா**

'ஹனேகலகே ஓட்டா' என்னும் விளையாட்டு உழுது தொழிப் படுத்திய நிலத்தில் ஒரு சோடி எருமைக்கடாய்களின் கழுத்தில் நுகம் பூட்டி அந்த நிகத்திலிருந்து ஒரு கம்பினை இணைத்து அந்தக் கம்பின் மறு நுனியில் ஒரு வட்ட வடிவமான பலகை இணைக்கப்பட்டிருக்கும். இப்பலகையின் மீது ஒருவன் ஏறி நின்று கொண்டு எருமைக்கடாய்களை

விரட்டிச் செல்வதாகும். இவ்வாறு பல சோடி (கடாய்கள்) கலந்து கொள்கின்றன. இவ்விளையாட்டு முடிவடையும் எல்லையில் ஒரு திரை கட்டப்பட்டிருக்கும். இத்திரைக்கு மேல் எந்தச் சோடி எருமைக்கடாய்கள் தண்ணீரை எத்தித் தள்ளுகின்றதோ அந்தச் சோடி எருமைக்கடாய்களே வெற்றி பெற்றவையாக விழாக்குழுவினரால் அறிவிக்கப்படுகின்றன. திரைக்கு மேலே ஒரு சோடி எருமைக்கடாய்கள் கூடத்தண்ணீரை எத்தித் தள்ள முடியவில்லையென்றால் விளையாட்டில் கலந்து கொண்ட சோடிகளுள் எவை அதிகமான உயரத்திற்குத் திரையில் தண்ணீரை எத்தித் தள்ளினவோ அவையே வெற்றி பெற்றவையாக விழாக் குழுவினரால் அறிவிக்கப்படுகின்றன.[24]

*பரிசுகள்*

'கம்பளா' என்னும் விளையாட்டில் வெற்றி பெற்ற எருமைக்கடாய்களுக்கு முன்னர் இளநீர்குலை, வாழைத்தார், வெற்றிலை பாக்கு ஆகியவற்றை விழாக்குழுவினர் பரிசாகத் தந்துள்ளனர். தற்காலத்தில் 'கம்பளா' என்னும் விளையாட்டில் வெற்றி பெற்ற எருமைக்கடாய்களுக்குப் பொன், வெண்கலம், கேடயம், சீல்டுகள் போன்றவைகளை விழாக்குழுவினர் பரிசாகத் தருகின்றனர்.[25]

*மக்களின் நம்பிக்கை – (கம்பளா)*

'கம்பளா' என்னும் விளையாட்டு ஊர்த்தெய்வத்திற்கு நடத்த வேண்டும் இல்லையெனில் ஊர்மக்களுக்கு விவசாயம் நன்றாக விளையாது என ஊர்மக்கள் நம்பியுள்ளனர். வீட்டில் வளர்க்கும் மாடுகளுக்கு நோய் ஏற்பட்டால் 'நான் கம்பளாவிற்கு எருமைக்கடாய் வளர்க்கின்றேன்' என ஊர்மக்கள் ஊர்த்தெய்வத்திற்கு நேர்ந்து கொள்கின்றனர். இவ்வாறு நேர்ந்து கொண்டால் மாடுகளுக்கு ஏற்பட்ட நோய் நீங்கும் என்ற நம்பிக்கையிலும் கம்பளாவிற்கு எருமைக்கடாய்கள் வளர்க்கப்படுகின்றன. 'வண்டாரக் கம்பளா' 'பசூரு கம்பளா', 'கோட்போதப கம்பளா' இம் மூன்று கம்பளாவினையும் பார்த்த ஒருவன் மோட்சம் அடைவான் என்ற நம்பிக்கையும் துளுநாட்டிலுள்ள மக்களிடம் காணப்படுகின்றது.[26]

*ஆந்திராவில் காளைவிளையாட்டு*

ஆந்திராவில் சங்கராந்திப் பண்டிகையினைத் தொடர்ந்து 'எட்ல பந்தம்' என்னும் விளையாட்டு நடைபெறுகின்றது. சங்கராந்திப் பண்டிகைக்கு அடுத்த நாள் 'பசுவுல பண்டுக' என்னும் விழா நடைபெறுகின்றது.

**பசுவுல பண்டுக**

"உழவர்கள் காலையில் நீர்நிலைகளில் தங்களின் மாடுகளைக் குளிப்பாட்டிக் கொம்புகளுக்கு வண்ணம் தீட்டுகின்றனர். பின்னர் மாடுகளின் கொம்புகளுக்குக் கம்பளிக்கயிறு கட்டுகின்றனர். உழவர்களில் ஒரு சிலர் தங்களின் மாடுகளுக்கு உடல் முழுவதும் கம்பளிக்கயிற்றினைச் சுற்றி விடுவதினையும் வழக்கமாகக் கொண்டுள்ளனர். பின்னர் உழவர்கள் தங்களின் மாடுகளுக்கு ஆரத்தி எடுத்து அரிசிமாவும் வெல்லமும் கலக்கிக் கொடுக்கின்றனர். மாலையில் 'எட்ல பந்தம்' என்னும் விளையாட்டு நடைபெறுகின்றது."[27]

**எட்ல பந்தம்**

'எட்ல பந்தம்' என்ற வார்த்தை மாட்டுப் பந்தயம் என்பதைக் குறிக்கின்றது. "ஆந்திர மாநிலம் சித்தூர் மாவட்டத்தில் 'எட்ல பந்தம்' என்னும் விளையாட்டு மாலை நேரத்தில் நடைபெறுகின்றது. காளையின் உரிமையாளர்கள் தங்களின் காளைகளைக் கொட்டுமேளத்துடன் ஊரின் புறப்பகுதியில் கொண்டுவந்து நிறுத்துகின்றனர். பின்னர் அவரவர் தங்களின் வசதிக் கேற்பப் பணத்தைப் புதுத்துணியில் முடிந்து தங்களின் காளையின் கழுத்தில் கட்டிவிடுகின்றனர். பின்னர் காளையின் உரிமையாளர்கள் ஒவ்வொரு மாடாக அவிழ்த்து விடுகின்றனர். இம்மாட்டினை மாடுபிடிவீரர்கள் சுமார் 50 அடி தூரம் கடந்த பின்னர் பிடித்து அதன் கழுத்தில் பணம் முடிந்து கட்டப்பட்டுள்ள துணியினை அவிழ்த்து விடுகின்றனர். இதுவே 'எட்ல பந்தம்' எனப்படுகின்றது.[28] இவ்விளையாட்டு தமிழகத்திலுள்ள பொங்கல் மஞ்சுவிரட்டுக்கு ஒப்பாகத் திகழ்கின்றது.

**தமிழகத்தில் சல்லிக்கட்டு**

தமிழர்களிடத்தில் சங்ககாலத்தில் 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டு செல்வாக்குப் பெற்றிருந்துள்ளது. இதனை முல்லைக்கலியில் ஏழு பாடல்கள் தெளிவாக எடுத்துக்கூறுகின்றன. ஏறுதழுவியவனையே ஆயர்மகள் திருமணம் செய்து கொண்டுள்ளாள். இதனைப் போன்றே "நீலகிரித் தோடர்களிடத்தில் எருமைகளைத் தழுவும் வீரவிளையாட்டு இருந்திருக்கின்றது. வலியஎருமையை அடக்குபவனுக்கு மகளைக் கொடுக்கும் வழக்கம் பண்டு இருந்ததாகச் சொல்லப்படுகின்றது."[29] முல்லை நில ஆயர்களைப் போன்றே தோடர்களும் திருமண முறையினைப் பின்பற்றியுள்ளனர் என்பது தெளிவாகின்றது. "மதுரை, திருநெல்வேலிப்

பகுதிகளில் வசிக்கின்ற கள்ளர் சமூகத்திலுள்ள கன்னிப்பெண்கள் வலிமைமிக்க காளையின் கொம்பில் கட்டப்பட்ட துணியை எவ்விதச் சேதமும் இல்லாமல் அவிழ்த்து எடுத்த ஆடவனையே கணவனாக ஏற்றுள்ளனர்."[30] இக்கருத்தின் மூலம் பிற்காலத்தில் கள்ளர் சமூகத்தினரிடத்திலும் ஆயர்களின் திருமணமுறை செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது.

காளைவிளையாட்டு தமிழகம் முழுவதும் பரவியிருந்தது. இதனை சேலம் மாவட்டத்தில் கிடைத்த நடுகல் ஒன்று எருது விளையாட்டில் சிறந்த வீரனின் பெருமையைக் குறிப்பதன் மூலம் உறுதி செய்ய முடிகின்றது. காளை விளையாட்டு காலப்போக்கில் சில மாவட்டங்களில் மட்டும் நடைபெறுகின்றது.

திண்டுக்கல், தேனி ஆகிய மாவட்டங்களில் சல்லிக்கட்டும் சிவகங்கை மாவட்டத்தில் மஞ்சுவிரட்டும் நடைபெறுகின்றது. இராமநாதபுரம் மாவட்டத்தில் 'எருதுகட்டு' என்ற அமைப்பில் காளைவிளையாட்டு நடைபெறுகின்றது. திருச்சி, தஞ்சாவூர் ஆகிய மாவட்டங்களில் 'மஞ்சுவிரட்டு' மாட்டுவேடிக்கை என்ற பெயரிலும் 'எருதுகட்டு' கயித்துமாடு என்ற பெயரிலும் காளைவிளையாட்டு நடைபெறுகின்றது. மதுரை மாவட்டத்தைத் தவிர மற்ற மாவட்டங்களில் குறைந்த ஊர்களில் காளை விளையாட்டு நடைபெறுகின்றது. ஆனால் மதுரை மாவட்டத்தில் அதிகமான ஊர்களில் காளைவிளையாட்டு நடைபெறுகின்றது.

### *மதுரை மாவட்டத்தில் காளைவிளையாட்டு*

காளைவிளையாட்டு மதுரை மாவட்டத்தில் 'சல்லிக்கட்டு', 'மஞ்சுவிரட்டு, 'எருதுகட்டு' என மூன்று வகைகளில் நடைபெறுகின்றன. மதுரை மாவட்டத்தில் தைப்பொங்கல் பண்டிகையிலிருந்தே 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டினை மக்கள் விளையாடத் தொடங்குகின்றனர். இவ்விளையாட்டு தெய்வவழிபாட்டோடு இணைந்து நடைபெறுவதால் வைகாசி மாதம் வரை நடைபெறுகின்றது. மதுரை மாவட்டத்தில் காளைவிளையாட்டு வகைகளில் மூன்று முறையான காளைவிளையாட்டுகள் ஊர்மக்களால் நடத்தப்பட்டு வருகின்றன. சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு, எருதுகட்டு ஆகிய மூன்று முறையான காளைவிளையாட்டுகள் இம்மாவட்டத்தில் நடைபெற்றாலும் அதிகமான ஊர்களில் 'சல்லிக்கட்டு' என்னும் பெயருடைய காளைவிளையாட்டே நடைபெற்று வருகின்றது. சல்லிக்கட்டு என்றாலே உலகம் முழுவதும்

மதுரை அலங்காநல்லூரைச் சொல்லும் அளவிற்குப் புகழ் பெற்ற சல்லிக்கட்டு மதுரை மாவட்டத்திலேயே நடைபெறுகின்றது. மதுரை மாவட்டத்தில் பல ஊர்களில் சிறப்பான முறையில் சல்லிக்கட்டு நடைபெறுகின்றது. சில ஊர்களில் எளிமையான முறையிலும் சல்லிக்கட்டு நடைபெற்று வருகின்றது. இதனோடு மட்டுமல்லாமல் குடியேறியுள்ள 'அனுப்பக்கவுண்டர்' என்னும் இனத்தினர் தங்களின் குலதெய்வமாகிய 'ஒன்னம்மாள்' தொட்டராயருக்கு 'விசேஷ சேஷ்டை' என்னும் விளையாட்டினையும் நடத்துகின்றனர். இவ்விளையாட்டு கர்நாடகத்தில் நடைபெறுகின்ற 'கம்பளா' என்னும் விளையாட்டினை அடியொற்றி நடைபெற்று வருகின்றது. சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு, எருதுகட்டு, விசேஷ சேஷ்டை என்ற விளையாட்டு வகைகளுக்கு விளக்கம் 'மாடுபிடி வகைகள்' என்ற தலைப்பில் தெளிவாக்கப்படவுள்ளது.

**பரிசுப்போட்டி**

திருமணஉறவோடு தொடர்புடைய காளைவிளையாட்டு பின்னர் பரிசுப்போட்டியாக மாறத்தொடங்கியது. பரிசுப்போட்டியாக மாறியபின் மதுரை மாவட்டத்தில் காளையை அணைகின்றவனுக்குத் தங்கநாணயம், வேட்டி, துண்டு, பணம், தொலைக்காட்சிப்பெட்டி, சைக்கிள், கடிகாரம் பாத்திரங்கள் போன்றவைகள் விழாக் குழுவினரால் பரிசாக வழங்கப்படுகின்றன. இப்பரிசுப் பொருட்கள் காளையின் விரைவாக ஓடும் தன்மை, யாராலும் அடக்கமுடியாத தன்மை, தன்னைப் பிடிக்க வருபவரைக் குத்தித்தள்ளும் தன்மை இவற்றிற்கு ஏற்றவாறு விழாக் குழுவினராலும் பொதுமக்களாலும் அறிவிக்கப்படுகின்றன. காளையை மாடுபிடிவீரன் அடக்க முடியவில்லையெனில் பரிசுப்பொருட்கள் காளைக்குக் கிடைக்கின்றன. இக்காளை விளையாட்டு சமயச் சார்பான சடங்காகத் தொடர்ந்து நடத்தப்படுகின்ற நிலையினை அடைந்துள்ளது. நேர்த்திக்கடனுக்காவும் புகழுக்காகவும் காளைவளர்ப்பதும் சல்லிக்கட்டு நடத்துவதுமான பழக்கங்கள் மதுரை மாவட்ட மக்களிடம் காணப்படுகின்றன.

சங்க காலத்திலிருந்த 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டு பல்வேறு நிலைகளைக் கடந்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு பல மாறுதல்களைப் பெற்று 'சல்லிக்கட்டு' என்னும் பெயரில் இன்றும் நாட்டுப்புறமக்கள் விரும்பும் வீரவிளையாட்டாக விளங்குகின்றது.

மேற்கூறிய கருத்துக்களின் அடிப்படையில் வலிமையும் முரட்டுக் குணமும் உடைய காளையினை எந்தவித ஆயுதமும் இல்லாமல்

மாடுபிடிவீரன் தனி ஒருவனாக நின்று காளையினை அடக்கி வெற்றி பெறும் விளையாட்டே 'சல்லிக்கட்டு' எனப் பெயர் பெற்று விளங்குகின்றது. காளைகளை அடக்கிய மாடுபிடிவீரன் காசுமுடிப்பினைப் பரிசாகப் பெற்றதனால் காளைவிளையாட்டு 'சல்லிக்கட்டு' எனப் பெயர் பெற்றுள்ளது. சங்க காலத்தில் முல்லை நிலமக்கள் விளையாடிய 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டு காலமாற்றத்தால் பல்வேறு மாறுதல்களைப் பெற்றுச் 'சல்லிக்கட்டு' எனப் பெயர் பெற்று விளங்குகின்றது. முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்கள் தங்களின் காளையை அடக்கிய ஆண்மகனுக்கே தங்களுடைய பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர் என்பதனையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

இறைவனுக்கு நரபலி கொடுப்பதன் மூலம் விவசாயம் நன்கு விளையும் என்ற கருத்து உலகநாடுகளில் வாழுகின்ற மக்களிடத்தில் காணப்படுகின்றது. இக்கருத்தின் அடிப்படையில் மதுரை மாவட்டத்தில் வாழுகின்ற நாட்டுப்புற மக்கள் தங்களின் ஊர்த்தெய்வங்களுக்குச் சல்லிக்கட்டினை நடத்தி ஊர்த்தெய்வங்களுக்கு மனிதப்பலி கொடுத்து வருகின்றனர் என்பதும் புலனாகின்றது.

பண்டைக்காலத்தில் போரில் இறந்த வீரனுக்கு நடுகல் எடுக்கப்பட்டதைப் போன்று எருதுவிளையாட்டில் இறந்த வீரனுக்கும் நடுகல் எடுக்கப்பட்டிருப்பதனையும் அறிய முடிகின்றது. இதனைப் போன்றே 'சொரிக்கான்பட்டி' என்னும் ஊரில் அழகத்தேவன் என்னும் மாடுபிடிவீரனுக்கு அவ்வூர்மக்கள் நடுகல் எடுத்து வழிபட்டு வருகின்றனர். மேலும் 'முக்கம்பட்டி' என்னும் ஊரில் 'செல்லச்சாமி' என்ற மாடுபிடிவீரனின் உறவினர்கள் செல்லச்சாமிக்கு நடுகல் எடுத்து வழிபட்டு வருகின்றனர். மாடுபிடிவீரர்களுக்கு நடுகல் எடுத்திருப்பதன் மூலம் அக்கால மக்கள் காளைவிளையாட்டினை ஒரு வீரவிளையாட்டாகக் கருதியுள்ளனர் என்பதனையும் அறியமுடிகின்றது.

காளையோடு மனிதன் விளையாடும் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு தமிழகத்தில் மட்டும் இல்லாமல் உலக நாடுகளிலும் விளையாடப்பட்டு வருகின்றது. இவ்விளையாட்டு மேலைநாடுகளில் 'காளைச்சண்டை' எனப் பெயர் பெற்று விளையாட்டு அமைப்பிலும் விதிமுறைகளிலும் சல்லிக்கட்டிலிருந்து வேறுபட்டுள்ளது. காளை விளையாட்டு பெயரிலும் அமைப்பிலும் இந்தியாவில் அசாம், கர்நாடகா, ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் ஒன்றுக் கொன்று வேறுபட்டு நடைபெறுகின்றது.

நீலகிரித் தோடர்களிடத்தில் வலியஎருமைகளைத் தழுவிப் பின்னர் அதன் பொருட்டுப் பெண்ணைத் திருமணம் செய்யும் பழக்கம் பண்டு இருந்ததாகக் கூறப்படுகின்றது. மதுரை, திருநெல்வேலிப் பகுதிகளில் வாழுகின்ற கள்ளர் சமூகத்தினரும் காளைகளை அடக்கி அதன் பொருட்டுப் பெண்ணைத் திருமணம் செய்துள்ளனர். இவற்றால் தோடர்களிடத்திலும் கள்ளர் சமூகத்தினரிடமும் முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்களிடத்திலிருந்த ஏறுதழுவி அதன் பொருட்டுப் பெண்ணைத் திருமணம் செய்யும்முறை செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதனை அறிந்து கொள்ள முடிகிறது.

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டில் வெற்றி பெற்ற காளைகளுக்கும் மாடுபிடிவீரர்களுக்கும் பரிசுப்பொருட்களாகத் தங்க நாணயம், வேட்டி, துண்டு, தொலைக்காட்சிப்பெட்டி, சைக்கிள், கடிகாரம், பாத்திரங்கள் போன்றவைகளை விழாக்குழுவினர் கொடுத்து வருகின்றனர் என்பதனை அறிந்து கொள்ள முடிகின்றது.

## குறிப்புகள்


1. கலைக்களஞ்சியம் அவினாசிலிங்கம், தொகுதி IV ப.517
2. மேலது, ப. 517—518
3. தமிழ்ப் பேரகராதி தொகுதி 3, ப.1323
4. மேலது.
5. நா.பாலுச்சாமி (ப.ஆ.), வாழ்வியற்களஞ்சியம், தொகுதி எட்டு, ப.945
6. மேலது ப.947
7. C.E.Ramachandran (Editor), Aspects of Indian History and Culture, PP.141-146
8. Susan L.Huntington, Art of Ancient India, P.396
9. மேலது ப.515
10. கல்வெட்டுப் படியெடுத்தல், வெ.வேதாசலம், தொல்லியல் அதிகாரி, தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறை, மதுரை
11. சு.சக்திவேல் (ப.ஆ.), பொன்னிறத்தாள் கதைப்பாடல், ப.20
12. தமிழ்நாடு அரசுத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் காலாண்டு இதழ் 15, நளஆண்டு, ஐப்பசித் திங்கள் ப.14, எருதுவிளையாட்டு, பெ.அர்தநாரீஸ்வரர்(க.ஆ.)
13. தகவல், வி.மாயாண்டி, விக்கிரமங்கலம், நாள் 11.4.95
14. தகவல், சோ.வீரணன், முக்கம்பட்டி, நாள் 18.6.95
15. Philip W. Goetz (Editor inchief), The new Encyclo Paedia Britannica Vol.II P.625
16. Gen Itaska (First Editor), Kodansa Encyclopaedia of Japan, Vol I P.207
17. Philip W.Geetz (Editor inchief), The new Encyclopaedia Britannica, Vol II P.624
18. பொங்கல் மலர், தினத்தந்தி நாளிதழ், நாள் 14.1.97 PV.

19.Chandrasekhara Kambar, (Editor), Kannada Jaanapada Vishwakosha, page 284, 285

20.மேலது.

21.மேலது.

22.மேலது.

23.மேலது.

24.மேலது.

25.மேலது.

26.மேலது.

27.தகவல் கி.செயப்பிரகாஷ், இணைப் பேராசிரியர், தெலுங்குத்துறை, ம.கா.ப.நாள் 21.7.97

28.மேலது.

29.அ.பிச்சை, தமிழர்பண்பாட்டில் விளையாட்டுக்கள், ப.66

30.In the Villages, especially those unhabited by the kallns in Madura and Tinnevelly, the Maiden chooses as her husband him who has safety untied and brought to her the cloth tied to the houn of the fiercest bull". EDGAR THURSTON, CASTES AND TRIBES OF SOUTHERN INDIA VOL.III P.75.

# சல்லிக்கட்டுக் காளைவளர்ப்பும் பயிற்சிமுறையும்

சல்லிக்கட்டு என்னும் விளையாட்டிற்குத் தகுதியான காளைகளைக் காளைவளர்ப்போர் தேர்ந்தெடுத்து வளர்த்து வருகின்றனர். சல்லிக்கட்டிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட காளைகளுக்குக் காளைவளர்ப்போர் சில பயிற்சிமுறைகளைப் பழக்கப்படுத்தியுள்ளனர். காளைவளர்ப்போர் தங்களின் காளைகளுக்குப் பழக்கப்படுத்தியுள்ள பயிற்சிகளின் மூலம் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளை மாடுபிடிவீரனிடம் பிடிபடாமல் வெற்றிபெறுகின்றது. மேலும் கன்று தேர்வு, சுழிகள், கன்றுக்கு உணவு, பனிமேய்ச்சல், தண்ணீர் காட்டல், நீச்சல் பயிற்சி, காளைகளின் பல்லும் வயதும், மூக்கணாங்கயிறுகுத்துதல், காளைக்கு உணவு, காயடிக்கப்படாமை, யானை அசைவு, காளையின் நிறங்கள், காளையின் தலை, கண்கள், காதுகள், கொம்புகள், தொங்குதசை, திமில், தொப்பூழ், வால், கால்கள், கால்குளம்பு, காளைகளுக்குப் பயிற்சி கொடுத்தல், மணல் சாக்குகட்டிப் பயிற்சிகொடுத்தல், பொம்மையைக்குத்தப் பயிற்சிகொடுத்தல், எலுமிச்சைப்பழத்தைக் குத்தப் பயிற்சிகொடுத்தல், ஒலியீட்டுப்பயிற்சி, குறியீட்டுப்பயிற்சி ஆகியன இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

### கன்று தேர்வு

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டிற்குத் தகுதியான காளைகளைக் காளைவளர்ப்போர் கன்றுப் பருவத்திலேயே தேர்ந்தெடுத்துவிடுகின்றனர். காளை வளர்ப்போரில் பெரும்பாலானோர் வீட்டில் வளரும் கன்றுகளைச் சல்லிக்கட்டிற்குத் தேர்ந்தெடுப்பதில்லை. காட்டில் கூட்டம் கூட்டமாக மேய்ந்து வளர்ந்து வரும் கிடைமாட்டுக் கன்றுகளிலிருந்து காளைவளர்ப்போர் சல்லிக்கட்டிற்குத் தகுந்த கன்றுகளைத் தேர்ந்தெடுத்து வளர்த்து வருகின்றனர். சில நூற்றாண்டுகளாகவே புளிக்குளத்துக் கன்றுகளைக் காளைவளர்ப்போர் தேர்ந்தெடுத்துப் பயிற்சிகொடுத்து வளர்ப்பது காளைவளர்ப்போரிடம் வழக்கமாக இருந்து வருகின்றது"[1] என்ற தர்ஸ்டனின் குறிப்பு மூலமும் சல்லிக்கட்டுக் காளைவளர்ப்போரின் இன்றைய வழக்கத்திலிருந்தும் அறிந்து கொள்ளமுடிகின்றது. மேலும் 'புளிக்குளம்' என்னும் ஊரிலுள்ள கிடைமாடுகளின் பாரம்பரியத்தின் கிடைமாட்டுக் கன்றுகளே மற்ற கிடைமாட்டுக் கன்றுகளைவிட வேற்றுமனிதர்களைப் பாய்ந்து குத்துவதில் சிறந்து விளங்குகின்றன என்ற கருத்து மதுரைமாவட்ட நாட்டுப்புறமக்களிடம் உள்ளதால் காளைவளர்ப்போர் சல்லிக்கட்டிற்குப்

புளிக்குளத்துக் கன்றுகளைத் தேர்ந்தெடுத்து வளர்த்து வருகின்றனர் என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது. இதுதவிர வீட்டில் வளரும் கன்றுகளில் குறியான காளைக்கன்றுகளைச் சுழி, சுத்தம், குணம் பார்த்துக் காளைவளர்ப்போர் வளர்க்கின்றனர்"[2] கன்றுகளுக்கு இயல்பாகச் சுழி இருப்பதைவிட உடலின் வேறு சில இடங்களிலும் சுழி இருந்தால் அவற்றைக் காளைவளர்ப்போர் பெரும்பாலும் வளர்ப்பதில்லை. நாட்டுப்புறமக்கள் மரபுவழி அணுகுமுறையின் மூலம் கன்றினை ஈன்ற பசு, காளை, ஆகியவற்றின் நடை, கொம்பு, வடிவமைப்பு, குணம் ஆகியன நன்றாக இருந்தால் கன்றும் வளர்ந்து பெரியகாளையாக வரும்பொழுது நல்லகாளையாக இருக்கும் எனக் கருதுகின்றனர்.

### சுழிகள்

காளைகளுக்கு உடலில் சுழிகளாக மூன்று சுழிகள் மட்டுமே இருக்கும். மூன்று சுழிகளில் ஒன்று காளையின் நெற்றியில் மற்றொன்று காளையின் முதுகில் இன்னொன்று காளையின் கொண்டையில் இருக்கும். இவைதவிர ஒரு சில காளைகளுக்கு வேறு சில இடங்களிலும் சுழிகள் அமைந்திருக்கும். காளைகளுக்கு வேறு சில இடங்களில் அமைந்துள்ள சுழிகளை நன்மைபயக்கும் சுழிகள், தீமைபயக்கும் சுழிகள் என நாட்டுப்புறமக்கள் பகுத்துள்ளனர். ஒரு சில காளைகளுக்கு அய்ந்து சுழிகள் இருக்கும் எனவும், 'அஞ்சு சுழி மாடு கெஞ்சுனாலும் கிடைக்காது' எனவும் நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர். அய்ந்து சுழிகளில் காளையின் நெற்றியில் ஒன்றும், காளையின் கொண்டையில் ஒன்றும், காளையின் முதுகில் மூன்றும் இருக்கும் எனவும் நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர், அஞ்சுசுழி மாட்டை வளர்ப்பவரின் குடும்பத்திற்கு யோகம் வரும் என்றும் நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர்.

### நன்மை பயக்கும் சுழிகள்

"காளைகளின் மீதுள்ள சுழிகளில் ரிஷபச்சுழி, பட்டரைச் சுழி, குடைமேற் குடை ஆகிய சுழிகள் உள்ள காளையினை வளர்க்கும் காளைவளர்ப்போர்க்கு நன்மை பயக்கும்"[3] என்று நாட்டுப்புறமக்கள் கருதுகின்றனர்.

காளையின் திமில்மேல் ஒற்றைச்சுழியிருப்பது ரிஷபச்சுழி எனப்படுகின்றது. பட்டரைச்சுழி, முன்பட்டரை, பின்பட்டரை என இரண்டு வகைப்படும். காளையின் திமிலிலிருந்து ஒரு சாணுக்குள் ஒற்றைச் சுழயிருந்தால் அது முன்பட்டரைச்சுழி எனப்படுகின்றது. காளையின்

நடுமுதுகிற்குப் பின்னே ஒற்றைச்சுழியிருந்தால் அது பின்பட்டனரச்சுழி எனப்படுகின்றது. காளையின் நெற்றியில் இரண்டுசுழி ஒன்றின் கீழொன்று நேரே கீழ்நோக்கியிருப்பது குடைமேல்குடை என்னும் சுழி எனப்படுகின்றது".[4] இக்கருத்தின் மூலம் மேற்கூறிய சுழிகள் அமையப் பெற்றிருக்கும் காளையினை வளர்க்கும் காளைவளர்ப்பவர்க்கும் அவரின் குடும்பத்திற்கும் தீங்குநேராது என்று நாட்டுப்புறமக்கள் கருதுகின்றனர்.

### *தீமை பயக்கும் சுழிகள்*

காளைகளின் மீதுள்ள சுழிகளில் தீமை பயக்கக்கூடிய சுழிகளாகச் சிலசுழிகள் அமைந்துள்ளன. அவை, இடிமேலிடி, வாய்ப்பூட்டு, செவிப்பாம்பு, முற்பாடை, பிற்பாடை, விலங்கடி, நீர்ச்சுழி, உழவனைப்பார்த்த பூதம், ஏறுநாகம், இறங்குநாகம், கவ்வம், ஒற்றைக் கவ்வம், பெண்டிழந்தான், கறட்டு ஓந்தான். இடிமேலிடி என்னும் சுழி காளையின் நெற்றியிலிரண்டு அல்லது மூன்று சுழிகள் ஒன்றையொன்று பார்க்க ஒன்று எதிர்க்கும் அல்லது மேல் நோக்கியிருக்கும் 'வாய்ப்பூட்டு' என்னும் சுழி காளையின் கன்னக்கட்டை ஓரமாகக் காதின் அடியின் கீழ் தன்னிறத்திற்குப் பின்னமான நிறத்தில் ஒரு நீண்ட சுழியிருக்கும் முற்பாடை, பிற்பாடை என்பது காளையின் முதுகில் முன்பின்னாக இரண்டுசுழிகள் இருக்கும். 'விலங்கடி' என்னும் சுழி காளைக்கு மூன்று இடங்களில் காணப்படும். அவை காளையின் முதுகில் குறுக்காக இரண்டுசுழிகள் இருக்கும். காளையின் பின்புட்டம் இரண்டிலும் இரண்டுசுழிகள் இருக்கும். காளையின் முன்காலிரண்டிலும் உட்புறத்தில் சுழிகள் ஒன்றையொன்று பார்த்தவாறு இருக்கும். நீர்ச்சுழி என்னும் சுழி காளையின் முதுகில் கோசத்துக்கு நேரே வைத்துத் தேய்த்தால் உடனே மாடு நீர்விடும். உழவனைப் பார்த்தபூதம் என்னும் சுழி காளையின் முதுகில் நீளமாக ஒற்றைச்சுழியாகக் காளையின் வாலைப்பார்த்து இருக்கும். 'ஏறுநாகம்' என்னும் சுழி காளையின் பவனவாய்க்குக் கீழ்த் தாடையில் சர்ப்பப்படம் போல் மேல்நோக்கியிருக்கும். 'இறங்குநாகம்' என்னும் சுழி காளையின் பவனவாய்க்குக் கீழ்த் தாடையில் சர்ப்பப்படம் போல் கீழ்நோக்கிச் சுழியிருக்கும். 'கவ்வம்' என்னும் சுழி காளையின் முன்னரத்தில் இரண்டு புறமும் சுழியிருக்கும். 'ஒற்றைக் கவ்வம்' என்னும் சுழி காளையின் முன்னரத்தில் ஒருபுறம் மட்டும் சுழியிருக்கும். 'பெண்டிழந்தான்' என்னும் சுழி காளையின் வாலினடிப் பக்கத்தில் குண்டி ஒன்று அல்லது இரண்டினில் மேல்நோக்கி அல்லது கீழ்நோக்கிச் சுழியிருக்கும். 'கறட்டு ஓந்தான்' என்னும் சுழி காளையின் வாலின்மேல் கட்டாசி போலவும் மயிர் வகிர்ந்து விட்டது போலவும் சுழியிருக்கும்"[5] இக்கருத்தின் மூலம் காளைகளுக்குச் சுழிகள் உள்ள இடத்தையும் சுழிகளின் பெயரையும் அறிந்து கொள்ளமுடிகின்றது. மேலும் காளைகளுக்கு உள்ள சுழிகள் இயல்புக்கு மாறாக இருப்பவற்றில் சிலவற்றைத்தவிர பெரும்பாலான சுழிகள் காளைவளர்ப்பவரின்

குடும்பத்திற்குத் தீமை ஏற்படுத்தக் கூடியவை என்று நாட்டுப்புறமக்கள் கருதுகின்றனர் என்பதனையும் அறிந்து கொள்ளமுடிகின்றது.

**கன்றினை வளர்த்தல்**

சல்லிக்கட்டுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கன்றினைக் கன்றுப்பருவம் முதல் காளைப்பருவம் வரை ஒரு ஆடவரின் பராமரிப்பில் மட்டுமே காளைவளர்ப்போர் வளர்த்து வருகின்றனர். ஒருவரின் பராமரிப்பில் வளர்ந்த கன்று தன்னை வளர்த்தவரைத் தவிர மற்றவர்களைக் கண்டால் குத்தும் இயல்பினைப் பெற்றுவிடுகின்றது. சல்லிக்கட்டுக்காக வளர்க்கப்படுகின்ற கன்றினை ஒருவரின் பராமரிப்பில் வளர்த்துச் சல்லிக்கட்டுக்குரிய பயிற்சிகளைப் பழக்கிக்கொடுத்துக் காளைப்பருவம் வந்தவுடன் சல்லிக்கட்டுக்குக் கொண்டு செல்வதனைக் காளை வளர்ப்போரில் பெரும்பாலானோர் வழக்கமாகக் கொண்டுள்ளனர். சில இடங்களில் காளைவளர்ப்போரில் ஒரு சிலர் தங்களின் காளைகளைக் கன்றுப் பருவத்திலிருந்து காளைப்பருவம் வரை தங்களின் வீட்டிலுள்ள பெண்களில் ஒருவரின் பராமரிப்பில் வளர்க்கின்றனர். பெண்ணால் வளர்க்கப்பட்ட காளை ஆடவர்களைக் கண்டால் குத்தும் இயல்பினைப் பெற்றுவிடுகின்றது எனக் காளைவளர்ப்போர் எண்ணுகின்றனர். பெண்ணால் மட்டும் வளர்க்கப்பட்ட காளை சல்லிக்கட்டில் கலந்துகொள்வதனை மிகவும் அரிதாகவே காணமுடிகின்றது.

**கன்றுக்கு உணவு**

"சல்லிக்கட்டிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கன்றினைப் பராமரிப்பாளர் பகல் நேரங்களில் புல்நிறைந்த பகுதிகளுக்குச் சென்று கைமேய்ச்சலாக மேய்த்து வருகின்றார். கன்றுக்கு இரவு உணவாக அறுகம்புல்லினைக் கன்றின் பராமரிப்பாளர் அறுத்துப் போடுகின்றார். அறுகம்புல் கிடைக்காத பொழுது கன்றுக்குப் பிறபசும்புல்லைக் கன்றின் பராமரிப்பாளர் அறுத்துப் போடுகின்றார்"[6] 'கைமேய்ச்சல்' என்பது கன்றினோடு பிணைக்கப்பட்டிருக்கும் கயிற்றினைப் பிடித்துக்கொண்டே பராமரிப்பாளர் ஒருவரே புல்வெளிகளில் மேய்த்து வருவதாகும்.இவ்வாறு கன்றினைப் பராமரிப்பாளர் ஒருவரே மேய்ப்பதனால் அவரைத்தவிர மற்றவர்களின் பழக்கம் கன்றுக்கு ஏற்படாமல் போகின்றது. இதனால் கன்று மற்றவர்களைக் கண்டால் குத்தும் இயல்புடையதாகவே வளர்ந்து வருகின்றது.

### பனிமேய்ச்சல்

கன்றின் பராமரிப்பாளர் கன்றினை அதிகாலையில் கைமேய்ச்சலாகப் பனிபடர்ந்த புல்வெளியில் அறுகம்புல்லினை மேயவிடுகிறார். இவ்வாறு மேய்ப்பதனால் கன்று வலிமையுடனும் நல்ல உடல் கட்டுடனும் வளர வாய்ப்பு ஏற்படுகின்றது"[7] பசும்புல்வெளியில் அதிகாலையில் கன்றோ அல்லது காளையோ மேய்வதனை நாட்டுப்புறமக்கள் 'பனிமேய்ச்சல்' என்கின்றனர். தங்களின் மாடுகள் வலிமையுடன் இருக்கவேண்டும் என்ற எண்ணம்கொண்ட நாட்டுப்புறமக்கள் தங்களின் மாடுகளைப் பனிமேய்ச்சல் மேயவிடுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

### தண்ணீர் காட்டல்

'கன்றின் பராமரிப்பாளர் கன்றுக்குத் தண்ணீர் காட்டும்பொழுது தவிடு, புண்ணாக்கு ஆகியவை கலந்த நீரை அளவாகக் குடிக்கவைப்பர். அளவுக்கு அதிகமான நீரைக் கன்றுகுடித்தால் கன்றுக்கு வயிறு பருத்துவிடும். கன்றுக்கு வயிறு பருத்துவிட்டால் கன்று சல்லிக்கட்டில் விரைவாக ஓடவும் சுறுசுறுப்பாகச் செயல்படவும் முடியாது என்பதற்காகக் கன்றின் பராமரிப்பாளர் கன்றுக்குத் தண்ணீர் காட்டும்பொழுது புரதச்சத்துக்களான தவிடுபுண்ணாக்கு ஆகியவற்றை அளவாகக் குடிக்கவைப்பர்.''[8] இக்கருத்தின் மூலம் சல்லிக்கட்டிற்காக வளர்க்கப்படுகின்ற கன்றுக்கு வயிறு பருத்திருக்கக்கூடாது என்பது தெளிவாகின்றது. மேலும் கன்றுக்கு வயிறு பருத்திருந்தால் சல்லிக்கட்டில் கன்று மந்தத்தன்மையுடன் செயல்படும். வயிறு பருத்த கன்று சல்லிக்கட்டில் விரைவாகச் செயல்பட்டு மாடுபிடிவீரனைத் தாக்காமல் சிறிதுநேரத்திலேயே களைத்துப்போய் மாடுபிடிவீரனிடம் பிடிபட்டுவிடும் என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

### நீச்சல் பயிற்சி

"கன்றின் பராமரிப்பாளர் நாள்தோறும் கன்றினை நீர்நிலைகளில் குளிப்பாட்டுவார். அப்பொழுது நீர்நிலையின் ஆழமான பகுதியில் கன்றின் பராமரிப்பாளர் கன்றினை நீந்தவும் விடுவார். இவ்வாறு நீச்சல்பயிற்சி கொடுக்கும்பொழுது கன்றின் பராமரிப்பாளர் கன்றின் கயிற்றையும் மற்றொரு கையில் கன்றின் வாலையும் பிடித்துக்கொண்டு நீந்தவிடுவார். இவ்வாறு நீந்தவிடுவதனால் கன்றின் கால்கள் ஓடுவதற்கேற்ற வலிமையை அடையவும் மேலும் கன்று நீளப்போக்காக வளர்வதற்கும் கன்றுக்கு வயிறு பருக்காமல் இருப்பதற்கும் நீச்சல் பயிற்சி அளிக்கப்படுகின்றது.

தினமும் கன்றினைக் குளிப்பாட்டுவதனால் கன்றுக்குப் பழையமுடி உதிர்ந்து புதியமுடிகள் முளைப்பதால் கன்றின் உடல்பகுதி மினுமினுப்பாகக் காணப்படுகிறது"[9] கன்றுக்கு நீச்சல்பயிற்சி கொடுப்பதனால் கன்று நீளப்போக்காக வளர்வதுடன் விரைவாக ஓடுவதற்கேற்ற வலிமையைப் பெறுகின்றது. மேலும் கன்றினை அதிகநேரம் நீந்தவிடுவதால் கன்று சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் பொழுது விரைவில் களைத்துவிடாது என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

### காளைகளின் பல்லும் வயதும்

காளைகளின் பருவத்தினைக் காளைகளின் பற்களைக் கொண்டே மதிப்பிடலாம் என்பதனை அறியமுடிகின்றது. "இளங்கன்றுக்கு மூன்று ஆண்டில் பல் விழுந்து முளைக்க ஆரம்பிக்கும். இரண்டு இரண்டு பற்களாக விழுந்து முளைக்கும். நான்கு ஆண்டிற்குள் எட்டுப் பற்களும் விழுந்து முளைத்துவிட்டால் காளை முழுமையான பருவத்தை அடைந்துவிட்டது எனக் காளைவளர்ப்போரால் கருதப்படுகின்றது."[10] மேலும் காளைப்பருவத்தினை முழுமையாக அடைந்த காளை ஐந்து ஆண்டுகள் சல்லிக்கட்டில் சிறப்பாக விளையாடும் எனவும் இதன் பின்னர் காளை சல்லிக்கட்டில் தளர்ச்சிஅடையும் எனவும் காளைவளர்ப்போரால் கூறப்படுகின்றது."[11] காளைகளின் பற்களை வைத்துக்கொண்டே அதன் பருவத்தினை அறிந்துகொள்ள முடிகின்றது என்பது தெளிவாகின்றது.

### மூக்கணாங்கயிறு குத்துதல்

கன்றுப்பருவத்தில் மூக்கணாங்கயிறு குத்தினால் கன்றின் வளர்ச்சி பாதிக்கப்படும் என்பதனால் காளைப் பருவம் எய்தும்வரை மூக்கணாங்கயிறு குத்தமாட்டார்கள். ஆற்றல்வாய்ந்தகாளையின் மூக்கணாங்கயிற்றைப் பிடித்து இழுத்தால் அது இழுப்பவரின் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடும். காளையைக் கட்டுப்படுத்தக்கூடிய மூக்கணாங்கயிற்றைக் குத்துவதற்கு மிகவும் அனுபவமிக்கவரைக் காளைவளர்ப்போர் தேர்ந்தெடுத்துக் காளைக்கு மூக்கணாங்கயிற்றைக் குத்துகின்றனர்.

மூக்கின் நுனிப்பகுதியில் சிறிதுஇடம் சவ்வுப்பகுதியும் அதற்குமேல் குருத்தெலும்புப்பகுதியும் இருக்கும். மூக்கணாங்கயிறு குத்தும்பொழுது காளையின் மூக்கிலுள்ள குருத்தெலும்புப்பகுதியில் குத்தக்கூடாது. காளையின் குருத்தெலும்புப் பகுதியில் மூக்கணாங்கயிறு குத்தினால் காளையின் மூக்கின் இருபகுதியிலும் அழுத்தி அதனால் காளைக்குத் துயர் ஏற்பட்டவாறு இருக்கும் மூக்கணாங்கயிறு குத்தியதால் காளைக்கு

ஏற்பட்ட துயரத்தால் காளை மூக்கைச் சுழித்தவாறு இருக்கும். இதனால் காளையின் கம்பீரத்தோற்றம் குன்றிவிடும். காளைக்கு மூக்கணாங்கயிறு குத்தும்பொழுது காளையின் மூக்கிலுள்ள சவ்வுப்பகுதியில் ஒரு கோணி ஊசியால் குத்தி அதில் இணைக்கப்பட்டுள்ள மெல்லிய நூல்கயிறும் செலுத்தப்பட்டு இருபுறமும் சரியான அளவுடன் கொம்புகளைத் தாண்டி கழுத்தின் மேல்பகுதியில் கட்டிவிடுவர். மூக்கணாங்கயிற்றை முறைப்படிக் காளைக்குக் குத்தாவிட்டால் சல்லிக்கட்டில் காளையை அவிழ்த்துவிடும்பொழுது மூக்கணாங்கயிற்றை எளிதாக உருவிவிட முடியாது.''[12]

### காளைக்கு உணவு

காளைவளர்ப்போர் காளையினைப் பசும்புல் நிறைந்த பகுதியில் மேய்த்து வருவதோடல்லாமல் சத்துள்ள பொருட்களையும் உணவாகக் கொடுத்துவருகின்றனர். காளைவளர்ப்போரால் காளைக்குக் கத்திரிக்காய், தேங்காய் ஆகியவை அறுத்துக் கொடுக்கப்படுகின்றன. இவை தவிர காளைவளர்ப்போர் ஊறவைத்த பருத்திவிதை, வாழைப்பழம், கடலைமிட்டாய் போன்றவற்றையும் காளைக்கு உணவாகக் கொடுக்கின்றனர்.''[13] இவ்வாறு சத்துள்ள உணவைக் காளைவளர்ப்பவர் கொடுப்பதனால் காளை சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும்பொழுது விரைவில் களைப்படையாது எனக் காளைவளர்ப்போரால் கருதப்படுகின்றது.

### காயடிக்கப்படாமை

“சல்லிக்கட்டிற்காக வளர்க்கப்படுகின்ற காளைகளுக்குக் காயடிக்கப் படுவதில்லை (ஆண்மை குறைக்கப்படுவதில்லை). காயடிக்கப்படாத காளைகளே திமிரோடும் முனைப்போடும் இருக்கும். இவ்வாறு உள்ள காளைகளே சல்லிக்கட்டிற்கு ஏற்றது என்பதனால் காளைகளுக்குக் காயடிக்கப்படாமல் காளைவளர்ப்போர் வளர்க்கின்றனர். இவ்வாறு சல்லிக்கட்டிற்காக வளர்க்கப்படுகின்ற காளைகளைப் பசுக்கூட்டத்திற்குள் சேரவிடாமல் தனியாகப்பிடித்து மேய்த்துத் தனியிடத்தில் காளையின் பராமரிப்பாளர் கட்டிவைப்பர்.''[14]

### யானை அசைவு

“காளை கட்டுத்தறியில் கட்டியிருக்கும்பொழுது நின்றுகொண்டு உடலை அசைத்துக்கொண்டேயிருக்கும். காளையின் அசைவு யானையின் அசைவினைப் போன்றுள்ளதால் நாட்டுப்புறமக்கள்

காளையின் அசைவினை 'யானையசைவு' என்கின்றனர்."[15] யானை அசைவுக்காளையினை வளர்ப்பவரின் குடும்பத்திற்குத் தீங்கு ஏற்படும் என்ற கருத்து நாட்டுப்புறமக்களிடத்தில் பரவலாக உள்ளதால் காளைவளர்ப்போர் யானையசைவுக்காளையினை வளர்ப்பதில்லை.

**காளையின் நிறங்கள்**

காளைகள் அனைத்தும் ஒரேநிறத்தில் பிறப்பதில்லை. காளைகள் பலநிறங்களில் பிறக்கின்றன. "காளைகளின் நிறங்களாகக் காரி, கரிசல், மயிலை, கருமயிலை, சங்குவெள்ளை, செவலை, கருவெள்ளை, சந்தனப்புல்லை, இருண்ட செவலை ஆகிய நிறங்கள் உத்தமம்"[17] என்ற கருத்தும் இடம்பெற்றுள்ளது. மயிலை நிறக்காளை மற்ற நிறக்காளையினைக் காட்டிலும் அழகாக இருப்பதால் நாட்டுப்புறமக்கள் பெரிதும் விரும்பிவளர்க்கின்றனர்.

**காளையின் தலை**

சல்லிக்கட்டிற்காக வளர்க்கப்படுகின்ற காளைகளுக்குத் தலை எவ்வாறு அமைந்திருக்கவேண்டும் என்பதனையும் நாட்டுப்புறமக்கள் கணித்துள்ளனர். "காளையின் தலை சிறியதாக இருக்கவேண்டும்"[18] என்ற கருத்தும் இடம்பெற்றுள்ளது. காளைக்குத் தலைசிறியதாக இல்லாமல் தலைபெரியதாக இருந்தால் காளை எந்தச்செயல்களிலும் சுறுசுறுப்பாகச் செயல்படாமல் மந்தத்தன்மையுடன் செயல்படும். தலை சிறியதாகஉள்ள காளையினைச் சிறுதலைக்காளை என நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர். சிறுதலைக் காளைகளைக் கொண்டு எல்லா வேலைகளையும் சிறப்பாகச்செய்யலாம் என்று எண்ணி நாட்டுப்புற வேளாண்மைக்குடிமக்கள் சிறுதலைக்காளைகளை விரும்பி வளர்க்கின்றனர். "காளைகளுக்கு முகம் சிறியதாக இருக்கவேண்டும்" என்ற கருத்தும் காளைவளர்ப்போரிடம் காணப்படுகின்றது. காளை வளர்ப்போர் காளைகளை வாங்கும்பொழுது முகம் சிறியதாக உள்ள காளைகளையே வாங்கி வளர்க்கின்றனர். முகம் சிறியதாக உள்ள காளைகள் அதிகநேரம் உழைத்தாலும் காளைகளுக்குக் களைப்பு ஏற்படாமல் சுறுசுறுப்பாகச் செயல்படும் என்று காளைவளர்ப்போர் கருதுகின்றனர்.

**கண்கள்**

காளைகளுக்குக் கண்கள் பெரியதாக இருக்கவேண்டும் என்றும் காளையின் கண்களில் பூ விழுந்து இருக்கக்கூடாது என்றும்

நாட்டுப்புறமக்கள் கருதுகின்றனர். 'கண்களில் பூ விழுதல்' என்பது கண்ணின் கருவிழியில் வெள்ளைநிறம் தோன்றுதலாகும்.

### கண்களின் வகைகள்

ஊற்றுக்கண், சதைக்கண், புள்ளிக்கண் இவற்றில் 'ஊற்றுக்கண்' என்பது காளையின் கண்களிலிருந்து தண்ணீர் வடிந்துகொண்டிருக்கும். 'சதைக்கண்' என்பது காளையின் கண்களின் கடைப்பகுதியில் சிவந்த நிறமாகச் சதைபடர்ந்திருக்கும். 'புள்ளிக்கண்' என்பது காளையின் கடைக்கண்ணில் வெள்ளைநிறமாகப் புள்ளியிருக்கும்."[20] மேற்கூறிய கண்கள் அனைத்தும் குற்றமுள்ள கண்கள் என்றும் இக்கண்களைக் கொண்ட காளைகளுக்கு விரைவில் பார்வை குன்றிவிடும் என்ற கருத்தும் காளைவளர்ப்போரிடம் இடம்பெற்றுள்ளது.

### காதுகள்

காளைகளுக்குக் காதுகள் சிறியதாக இருக்கவேண்டும். காளைகளின் காதுகள் காளைகளின் கண்களை மறைக்காமல் இருப்பதற்குக் காளைவளர்ப்போர் காளைகளின் காதுகளை வாரிவிடுவார்கள். 'காது வார்தல்' என்பது காளைகளின் காதுகளை இரண்டாக மடக்கி அதில் ஒரு பகுதியினைக் கத்தியால் அறுத்து எடுத்துவிடுவார்கள். காளைகளுக்குக் காதுகளை வார்வதால் காளை ஓரப்பார்வை பார்த்துச் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனைக் குத்தும் என்பதனால் காளைவளர்ப்பவர்கள் தங்களின் காளைகளுக்குக் காதுகளை வாரிவிடுகின்றனர் என்பது புலனாகின்றது. மேலும் "தொங்கு காது காளையின் காதுகள் விறைப்பில்லாமல் கீழ்நோக்கித் தொங்கிக் கொண்டிருக்கும்."[21] காதுகள் தொங்கிக்கொண்டிருக்கும் காளைகளைக் காளைவளர்ப்போர் வளர்ப்பதில்லை. தொங்குகாதுகள் காளைகளின் கண்களை மறைத்துவிடுகின்றன. இதனால் சல்லிக்கட்டில் காளைகளின் ஓரத்தில் மாடுபிடிவீரன் நின்று பிடித்துவிடுவான் என்ற காரணத்தினால் காளைவளர்ப்போர் தொங்குகாதுகள் உள்ள காளைகளை வளர்ப்பதில்லை என்பதனையும் அறிந்துகொள்ளமுடிகின்றது.

### கொம்புகள்

காளைகள் அனைத்திற்கும் கொம்புகள் ஒரேமாதிரியாக வளர்ந்திருப்பதில்லை. கொம்புகள் காளைகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமாக வளர்ந்திருக்கும். காளைகளுக்குக் கூர்மையற்று வளர்ந்திருக்கும் கொம்புகளைக் காளைவளர்ப்போர் அரிவாளால் சீவிக் கூர்மையாக்குகின்றனர்.

"குத்துக்கொம்பு, மட்டிக்கொம்பு, கூடுகொம்பு, விரிகொம்பு"[22] என்று காளைகளின் கொம்புகளை நாட்டுப்புறமக்கள் வகைப்படுத்தியுள்ளனர். காளைகளின் கொம்புகளின் வகைகளில் குத்துகொம்பினையுடைய காளையினை மட்டும் சல்லிக்கட்டிற்குக் காளைவளர்ப்போர் தேர்ந்தெடுத்து வளர்க்கின்றனர். குத்துக்கொம்புகள் செங்குத்தாக இருப்பதால் சல்லிக்கட்டில் காளையினைப் பிடிக்க முற்படும் மாடுபிடிவீரனைக் காளை குத்துவதற்கு ஏற்றவாறு கொம்புகள் அமைந்துள்ளன. 'குத்துக்கொம்பு' என்பது காளையின் கொம்புகள் செங்குத்தாக அமைந்திருப்பதாகும். காளையின் உடல்பகுதியினை நோக்கிக் கொம்புகள் வளர்ந்திருப்பது 'மட்டிக்கொம்பு' எனப்படுகின்றது. காளையின் கொம்புகளின் நுனியிரண்டும் இணைந்து இருப்பது 'கூடுகொம்பு' எனப்படுகின்றது. காளையின் கொம்புகளில் இடப்புறக்கொம்பு இடப்புறமும் வலப்புறக்கொம்பு வலப்புறமும் விரிந்தபடியே வளர்ந்திருப்பது 'விரிகொம்பு' எனப்படுகின்றது.

### கொம்புகளின் குறைகள்

காளைகளுக்குரிய கொம்புகளில் குறையுள்ள கொம்புகளாகச் சில வகைகளும் காணப்படுகின்றன. "கொள்ளிக்கொம்பு, தோற்கொம்பு, இடங்கட்டுக்கொம்பு, தடிக்கொம்பு, காடுபார்த்தகொம்பு இவற்றில் 'கொள்ளிக்கொம்பு' என்பது கொம்பின் முனை தட்டையாகவும் கரடு பாய்ந்தும் உச்சியிற் கொஞ்சம் பள்ளமாகவும் கூர்ந்து பார்க்கில் அந்தயிடந் தீ நிறமாகவும் இருக்கும். 'தோற்கொம்பு' என்பது காளையின் கொம்புகளிரண்டும் அலைந்துகொண்டிருக்கும். 'இடங்கட்டுக்கொம்பு' என்பது வலது கொம்பு முன்னாகவும் இடதுகொம்பு, பின்னாகவுங் கூடி ஒன்றோடொன்று ஒட்டியிருக்கும். 'தடிக்கொம்பு' என்பது கொம்பு நிரம்பவும் பருமானகவேயிருக்கும். 'காடுபார்த்தகொம்பு' என்பது வலது கொம்பு வலதுபுறத்தைப் பார்க்க இடதுகொம்பு இடப்புறத்தைப் பார்க்கச் சாய்ந்திருக்கும்."[23] மேற்கூறிய கொம்புகளின் வகைகள் அனைத்தும் மாடுகளுக்குரிய குறைகளாகக் கருதப்படுகின்றன. குறையுள்ள கொம்புகளையுடைய காளைகள் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனைத் தாக்குவது கடினம் என்பதனால் காளைவளர்ப்போர் குறையுள்ள கொம்புகளையுடைய காளைகளை வளர்ப்பதில்லை என்பதனை அறிந்து கொள்ளமுடிகின்றது.

### தொங்குதசை

காளைகளுக்குத் தொங்குதசை சிறியதாகவே இருக்கவேண்டும்.

காளையின் கழுத்திற்கும் காளையின் முன்னங்காலிரண்டின் மேல்பகுதிக்கும் இடையில் தொங்கிக்கொண்டிருக்கும் தசை 'தொங்கு தசை' எனப்படுகின்றது. காளைகளுக்குத் தொங்குதசை அதிகமாகத் தொங்கிக் கொண்டிருந்தால் காளைகள் சுறுசுறுப்பாக இல்லாமல் மந்த நடையாய் இருக்கும்."[24] எனவே, தொங்குதசை அதிகமாகத் தொங்கிக் கொண்டிருக்கும் காளைகளைக் காளைவளர்ப்போர் சல்லிக்கட்டிற்காக வளர்ப்பதில்லை. காளைகளுக்குத் 'தொங்குதசை' அதிகமாக இருந்தால் அதனை நாட்டுப்புற வேளாண்குடிமக்கள் 'தொங்குநாடி' என்றும் காளைகளுக்குத் 'தொங்குதசை' குறைவாகத் தொங்கிக் கொண்டிருந்தால் அதனை 'ஏறுநாடி' என்றும் கூறுகின்றனர்.

**திமில்**

காளையின் கழுத்துப்பகுதிக்கும் உடல்பகுதிக்கும் இடையே சிறிய மேடாக அமைந்துள்ள பகுதி திமில் எனப்படுகின்றது. காளைக்குத் திமில் அளவாக இருக்க வேண்டும். "காளைக்குத் திமில் அளவுக்கு அதிகமாக பருத்து இருந்தால் நடக்கும் பொழுது திமில் சாய்ந்துகொண்டேயிருக்கும். மேலும் மாடுபிடிவீரன் சல்லிக்கட்டில் காளையின் பருத்த திமிலைப் பிடித்துக்கொண்டு காளையினை எளிதில் அடக்கிவிடுவான்"[25] என்பதனாலும் பருத்த திமிலையுடைய காளையினைக் காளைவளர்ப்போர் சல்லிக்கட்டிற்காகத் தேர்ந்தெடுத்து வளர்ப்பதில்லை என்பதும் தெளிவாகின்றது.

**தொப்பூழ்**

காளைகளுக்குத் தொப்பூழ் வயிற்றோடு ஒட்டியிருக்க வேண்டும். காளைகளுக்குத் தொப்பூழ் வயிற்றோடு ஒட்டியிருக்காமல் தொப்பூழ் தொங்கிக் கொண்டிருக்கக் கூடாது. "காளைகளுக்குத் தொப்பூழ் வயிற்றோடு ஒட்டியிராமல் தொங்கிக் கொண்டிருந்தால் காளை சற்றுதூரம் ஓடியவுடன் களைத்துவிடும்"[26] என்பதனால் தொங்குதொப்பூழ்உடைய காளையினைக் காளைவளர்ப்போர் சல்லிக்கட்டிற்கு வளர்ப்பதில்லை என்பது தெளிவாகின்றது.

**வால்**

"காளைகளின் வால் அமைப்பை வைத்து ஏறுவால், சாரைவால் என இரண்டுவகையாக நாட்டுப்புறமக்கள் பகுத்துள்ளனர். ஏறுவால் என்பது காளையின் பின்னங்கால் முட்டுக்குமேல் வாலின் நுனி அமையப்

பெற்றிருப்பதாகும். சாரைவால் என்பது காளையின் பின்னங்கால் முட்டுக்குக்கீழ் வாலின் நுனி தொங்கிக்கொண்டிருப்பதாகும்.''[27] ஏறுவால் அமைப்புடைய காளைகளே விரைவாக ஓடும் தன்மையுடையவைகளாக இருக்கும். மேலும் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரன் காளையின் வாலை எளிதில் பிடிக்க முடியாதவாறும் உள்ளதால் காளை வளர்ப்போர் ஏறுவால் காளைகளைப் பெரிதும் விரும்பி வளர்க்கின்றனர்.

### கால்கள்

சல்லிக்கட்டுக் காளைகளுக்குக் கால்களின் அமைப்பு மிக முக்கியமானதாகும். சல்லிக்கட்டுக் காளைகளுக்குக் கால்கள் கனமாக இருக்கவேண்டும். காளை நடக்கும்பொழுது அதன் கால்கள் ஒன்றோடொன்று உரசிக்கொண்டால் காளை விரைவாக ஓடவும் அதிகதூரம் நடக்கவும் முடியாது என்பதனால் காளைவளர்ப்போர் கால்களை உரசிக்கொள்ளும் காளையைச் சல்லிக்கட்டிற்குத் தேர்ந்தெடுப்பதில்லை என்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது.

### காளைகளின் கால்களிலுள்ள குறைபாடுகள்

காளைகளின் கால்கள் குறைபாடுகள் உள்ள அமைப்பிலும் அமையப்பெற்றிருக்கும். குறைபாடுகள் உள்ள கால்களைக் கொண்ட காளைகளைக் காளை வளர்ப்போர் சல்லிக்கட்டிற்காக வளர்ப்பதில்லை. “சாத்துக்கால், இணையடிகால், பின்னுகால், சுண்டுவாதம், வெட்டுக்கால், மந்திக்கால் இவற்றில் ‘சாத்துக்கால்’ என்பது காளையின் முன்கால்களின் முட்டுக்கள் சமீபமாய் உட்பக்கம் நெருங்கியிருப்பதாகும். ‘இணையடிகால்’ என்பது காளை நடக்கும்பொழுது முன்காலிரண்டும் ஒன்றோடொன்று உராயும் தன்மையுடையதாகும். ‘பின்னுகால்’ என்பது காளை நடக்கும்போது பின்னங்காலிரண்டும் நேரே வையாமல் மாறி மாறி வைப்பதாகும். ‘சுண்டுவாதம்’ என்பது காளையினைக் கட்டுத்தறியிலிருந்து அவிழ்த்தவுடனே நடக்கும் பொழுது பின்னங்கால்களைச் சுண்டி நடப்பதாகும். ‘வெட்டுக்கால்’ என்பது காளை நடக்கும்பொழுது பின்னங்காற் குளம்பின் முனையைப் பூமியில் தேய்த்துக் கொண்டே நடப்பதாகும். ‘மந்திக்கால்’ என்பது காளையின் கால்களில் பின்புறம் முட்டு நிரம்பவும் வளைந்திருப்பதாகும்.''[28] மேற்கூறிய கால்களைக் கொண்ட காளைகள் சல்லிக்கட்டில் சிறப்பாகச் செயல்பட முடியாமல் மாடுபிடிவீரனிடம் பிடிபட்டுவிடும். எனவே, குறைபாடுகள் உள்ள கால்களைக் கொண்ட காளைகளைக் காளைவளர்ப்போர் சல்லிக்கட்டிற்காகத் தேர்ந்தெடுத்து வளர்ப்பதில்லை என்பதனை அறியமுடிகின்றது.

### கால் குளம்பு சீரமைப்பு

'காளைக்குக் கால் குளம்பு ஒழுங்கற்று வளர்ந்திருக்கும். கால் குளம்பு ஒழுங்கற்று வளர்ந்திருக்கும் காளைகளால் வேகமாக ஓடமுடியாது. இதற்குக் காளையின் கால் குளம்பைச் செதுக்கிச் சரிசெய்து, பின்னர் காளைக்கு லாடம் கட்டுபவரால் காளைவளர்ப்போர் லாடமும் கட்டிவிடுகின்றனர்."[29] இவ்வாறு காளைக்குக் கால் குளம்பு சீர்செய்து லாடம் கட்டுவதனால் காளையின் கால் குளம்புப்பகுதி தேய்ந்து புண்ணாகாது என்று காளைவளர்ப்போரால் கருதப்படுகின்றது.

### குளம்பின் வகைகள்

காளைக்குக் குளம்பின் வகைகளாக அரைகுளம்பு, விரிகுளம்பு என இரண்டு வகைகள் இடம்பெற்றுள்ளன. "அரைகுளம்பு என்பது காளை நடக்கும்பொழுது முன்காற் குளம்பைத் தரையில் திருகி நடக்கும். இவ்வாறு நடப்பதால் காளையின் குளம்பு சீக்கிரம் தேய்ந்து புண்ணாகிவிடும். விரிகுளம்பு என்பது காளையின் குளம்பின் இருபாகமும் நெருங்கியிராமல் விரிவாக இருக்கும். இவ்வாறு இருப்பதால், மண், கல் முதலானவை குளம்பினிடையிலேறித் துன்பம் உண்டாக்கும்."[30] எனவே இக்குறையுள்ள குளம்பினையுடைய காளைகளைக் காளை வளர்ப்போர் சல்லிக்கட்டிற்காகத் தேர்ந்தெடுப்பதில்லை என்பதையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

### காளைக்குப் பயிற்சிகொடுத்தல்

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டில் கலந்துகொள்ளும் காளையினை மாடுபிடிவீரன் அடக்க முற்படும்போது காளை மாடுபிடி வீரனிடமிருந்து வெற்றி பெறுவதற்குக் காளைவளர்ப்போர் தங்களின் காளைகளுக்குச் சில பயிற்சிகளை அளிக்கின்றனர். காளை வளர்ப்போரிடம் பயிற்சிகளைப்பெற்றகாளை சல்லிக்கட்டில் மாடுபிடி வீரனை எளிதில் வெற்றி கொள்கின்றது. சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைக்குக் காளைவளர்ப்போர் அளித்துள்ள முறையான பயிற்சிகளின் மூலம் சல்லிக்கட்டில் கூடியுள்ள மக்கள்கூட்டத்தைப் பார்த்துக் காளை அச்சப்படாமலும் தன்னை அடக்க முற்படும் மாடுபிடிவீரனைப் பாய்ந்து குத்தியும் காளை வெற்றிபெறுகின்றது.

### மணல்சாக்கு கட்டிப் பயிற்சிக்கொடுத்தல்

"சல்லிக்கட்டிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கன்றினைக் கன்றாக

இருக்கும்போதும் காளையாக வளர்ந்தபின்பும் காளைவளர்ப்போர் அதனை ஊருக்கு அருகிலுள்ள பரந்தவெளிக்குக் கொண்டுவருவர். பின்னர் பெரிய சாக்குப்பையில் மணலை நிரப்பிக் கட்டிவைத்து நீண்ட வலுவான கயிற்றின் நுனியை அதனோடு சேர்த்துக்கட்டி அக்கயிற்றின் மறுநுனியை காளையின் கழுத்தில் காளைவளர்ப்பவர் கட்டிவிடுவார். பின்னர் காளையைச் சுற்றி நின்றுகொண்டு இளைஞர்களும் சிறுவர்களும் கூச்சிலிட்டு வெருள வைப்பார்கள். இதனை நாட்டுப்புறமக்கள் பாய்ச்சல் காட்டுதல் எனக் கூறுகின்றனர். 'பாய்ச்சல்' என்பது காளை தன்னை வளர்ப்பவரைத் தவிர மற்றவர்களைப் பாய்ந்து குத்தித் தாக்குவதாகும். இவ்வாறு காளை தன்னை வளர்ப்பவரைத் தவிர மற்றவர்களைத் தன் கொம்புகளினால் குத்தும் இயல்புடைய காளையினை நாட்டுப்புறமக்கள் பாயும் குணமுடையகாளை எனக் கூறுகின்றனர். காளையினைச் சுற்றியுள்ள இளைஞர்களும் சிறுவர்களும் கூச்சலிட்டுப் பாய்ச்சல் காட்டும்பொழுது காளை வெருண்டு ஓடமுயலும். ஆனால், மணல்சாக்கை இழுத்துக்கொண்டு ஓடமுடியாமல் காளை களைத்து நிற்கும். இச்சூழ்நிலையில் காளை கூச்சலிடுபவர்களைக் குத்த முயலுகின்றது. ஆனால், காளையைச் சுற்றி நின்றுகொண்டு கூச்சலிடுபவர்கள் காளை தங்களைக் குத்தாதவாறு விலகிக் கொள்கின்றனர். பின்னர் மீண்டும் காளையினைச் சுற்றி நின்றுகொண்டு இளைஞர்களும் சிறுவர்களும் கூச்சலிட்டுக் காளை தங்களைக் குத்த முயலுமாறு செய்கின்றனர். இவ்வாறு காளைக்குப் பயிற்சிகொடுப்பதனால் காளை தன்னைப் பராமரிப்பவரைத் தவிர மற்றவர்களைக் குத்தும் இயல்பினைப் பெற்றுவிடுகின்றது. இவ்வாறு காளைக்குப் பயிற்சிகொடுக்கும்பொழுது காளை கோபம் கொண்டு யாரேனும் தன்னைப்பிடிக்க முயலுகிறார்களா என இருபுறமும் ஓரப்பார்வை பார்த்துக் குத்தமுயலுகின்றது. இவ்வாறு காளை சல்லிக்கட்டில் ஓரப்பார்வை பார்த்துக் குத்த முயலுவதனை 'அட்டத்துப்பார்வை பார்த்துக் குத்துதல்' என்றும் 'அட்டம் பார்த்துக் குத்துதல்' என்றும் நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர்."[31] இப்பயிற்சியின் மூலம் காளை சல்லிக்கட்டில் தன்னைப் பிடிக்க முயலும் மாடுபிடி வீரனைக் குத்தித்தாக்கும் இயல்பினைப் பெறுகின்றது. மேலும் மாடுபிடிவீரன் காளையின் அட்டத்துப் பகுதியிலிருந்து (ஓரப்பகுதியிலிருந்து) பிடிக்க முயலுவதால் காளை அட்டத்துப்பார்வை பார்த்து மாடுபிடிவீரனைக் குத்த முயற்சிசெய்து சல்லிக்கட்டில் காளை வெற்றிபெறுகின்றது என்பது தெளிவாகின்றது.

## பொம்மையைக் குத்தப் பயிற்சிகொடுத்தல்

"காளையைக் காளையின் உரிமையாளர் ஒரு மரத்தடியில் கட்டுத்தறி ஊன்றி அதில் கட்டிவைத்துவிடுவார்.பின்னர் மரத்தின் கிளையில் யாரேனும் ஒருவர் மனித உருவப்பொம்மையின் கழுத்தில் கயிறுகட்டி வைத்துக்கொண்டு மரக்கிளையில் அமர்ந்திருப்பர். பின்னர் மரத்தடியில் கட்டப்பட்டுள்ள காளையினைச் சுற்றி நின்றுகொண்டு இளைஞர்களும் சிறுவர்களும் கூச்சலிடுகின்றனர். இதனைக் கேட்ட காளை வெருண்டு கூச்சலிடுபவர்களைக் குத்தமுயலுகின்றது. அப்பொழுது மரக்கிளையின் மேல் அமர்ந்திருப்பவர் தன் கையிலுள்ள பொம்மையை மெல்லக் கீழே காளையின் எதிரே இறக்குவார். அப்பொழுது காளை தன் எதிரே நிற்கும் பொம்மையைக்குத்தமுயலும். இவ்வாறு காளை பொம்மையைக் குத்த முயலும்போது மரக்கிளையில் அமர்ந்திருப்பவர் பொம்மையை அங்கும் இங்கும் அசைத்துக் காளையின் கவனத்தைப் பொம்மையின் பக்கமே நிலைநிறுத்துகின்றார். காளை வெருண்டு பொம்மையைக் குத்தமுயலும்போது மரக்கிளையில் அமர்ந்திருப்பவர் பொம்மையை மேலே தூக்கிக்கொள்கிறார். காளை உடனே தன்னைச் சுற்றி நின்றுகொண்டு கூச்சலிடுபவர்களைக் குத்த முற்படுகின்றது. பின்னர் மரக்கிளையில் அமர்ந்திருப்பவர் மீண்டும் காளையின் முன் பொம்மையை இறக்கிவிடுகின்றார். இப்பொம்மையைக் காளை சீறிப்பாய்ந்து குத்திக்கிழித்துத் தன்னுடைய சினத்தைத் தீர்த்துக்கொள்கின்றது. இவ்வாறு காளைக்குப் பலமுறை பலநாட்கள் பயிற்சி தருவதால் பிடிகாரர்கள் காளையை எந்தப்பகுதியிலிருந்து பிடிக்க முயன்றாலும் அவர்களிடமிருந்து காளை வெற்றிகொள்ள இப்பயிற்சி பயன்படுகிறது."[32] காளை மனிதஉருவப்பொம்மையை மனிதனாகவே நினைத்துக் குத்துகின்றது. மேலும் காளைக்குப் பொம்மையைக் குத்தும் பயிற்சி காளைவளர்ப்போரால் அளிக்கப்படுவதால் காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனைக் குறிவைத்துக்குத்தி வெற்றியடையும் என்ற நோக்கம் காளைவளர்ப்போரிடம் இருந்துவருகின்றது என்பதும் தெளிவாகின்றது.

## எலுமிச்சைப்பழத்தைக் குத்தப் பயிற்சி கொடுத்தல்

சல்லிக்கட்டிற்காக வளர்க்கப்படுகின்ற காளைக்கு எலுமிச்சைப் பழத்தைக் குறிவைத்துக்குத்தும் பயிற்சியினையும் காளைவளர்ப்போரில் சிலர் அளித்து வருகின்றனர். "காளையைப் பரந்தவெளியில் காளை வளர்ப்போர் அவிழ்த்துவிட்டு அதன் முன்னர் ஒரு எலுமிச்சைப்பழத்தை உருட்டிவிடுவார். இதனைக் காளை குறிவைத்துக்குத்துகின்றது.

இப்பயிற்சியினைக் காளைவளர்ப்போர் பலமுறை பலநாட்கள் கொடுக்கின்றனர்."[33] சல்லிக்கட்டில் மாடுபிடிவீரன் காளையினைப் பிடிக்க முற்படும்பொழுது காளை மாடுபிடிவீரனைக் குத்தமுயலும். அப்பொழுது மாடுபிடிவீரர்களில் ஒருசிலர் காளை தங்களைக் குத்தாதவாறு தரையில் படுத்துக்கொள்கின்றனர். ஆனால்,எலுமிச்சைப்பழத்தை குறிவைத்துக் குத்தும் பயிற்சியினைப்பெற்ற காளை தரையில் படுத்திருக்கும் மாடுபிடி வீரனையும் குத்திக்காயப்படுத்திவிடும். காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனை எந்தமுறையிலும் குத்தவேண்டும் என்பதற்காகக் காளை வளர்ப்போர் காளைக்கு எலுமிச்சைப்பழத்தைக் குத்தும் பயிற்சி கொடுத்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

## ஒலியீட்டுப் பயிற்சி கொடுத்தல்

காளைவளர்ப்போரில் ஒருசிலர் தங்களின் காளைக்குப் பயிற்சி கொடுக்கும்பொழுது தாங்கள் எழுப்பும் ஒலிகளுக்கு ஏற்றவாறு காளை என்னென்ன செயல்பாடுகளைச் செய்யவேண்டும் என்பதனையும் காளை வளர்ப்போர் தங்களின் காளைகளுக்குப் பயிற்சிகொடுத்துள்ளனர். சல்லிக்கட்டில் அவிழ்த்து விடப்பட்டுள்ள காளை வாடியைவிட்டு வெளியேறுவதற்குச் சிறிதுநேரமானால் காளைவளர்ப்பவர் ஏதாவது ஒரு ஒலியை எழுப்பிக் காளையினை வாடியைவிட்டு வெளியேறச் செய்கின்றார். காளை சல்லிக்கட்டில் விரைவாக ஓடி வெற்றிகொள்ளாமல் காளை சல்லிக்கட்டில் நின்று விளையாடி மாடுபிடி வீரனை வெற்றி கொள்ள வேண்டும் எனக்காளை வளர்ப்போர் விரும்பினால் அதற்கான ஒலியினை எழுப்பிக் காளையைச் சல்லிக்கட்டில் நின்று விளையாடச் செய்கின்றனர். காளை சல்லிக்கட்டில் நின்று விளையாடிக் கொடுண்டிருக்கும்பொழுது காளை களைப்பாகும் வரை காத்திருந்து காளையினை அடக்கிவிடலாம் என மாடுபிடிவீரர்கள் காத்திருப்பார்கள். இந்தநேரத்தில் காளைவளர்ப்பவர் காளை விரைவாக ஓடுவதற்குரிய ஒலியினை எழுப்பி காளை மாடுபிடிவீரர்களிடம் நின்று விளையாடாமல் விரைவாகஓடிச் சல்லிக்கட்டில் வெற்றிபெறுமாறு காளை வளர்ப்பவர் செய்திடுவார்"[32] சல்லிக்கட்டில் தேவையானபொழுது காளை மாடுபிடிவீரர்களிடம் நின்றுவிளையாடி மாடுபிடிவீரர்களை வெற்றி கொள்ளவும் காளைவளர்ப்போரில் ஒருசிலர் தங்களின் காளைக்கு ஒலியீட்டுப் பயிற்சியினைப் பழக்கப்படுத்தியுள்ளனர் என்பதனை அறிந்து கொள்ளமுடிகின்றது.

## குறியீட்டுப் பயிற்சி கொடுத்தல்

சல்லிக்கட்டுக்காளைக்குக் காளைவளர்ப்போர் அளித்துள்ள ஒலியீட்டுப்பயிற்சினைப் போன்றே காளைவளர்ப்பவர்களில் சிலர் காளையின் கண்ணுக்குத் தெரியுமாறு சிலபொருட்களை அசைத்துக் காட்டி காளைவளர்ப்பவர்கள் தங்களின் காளை சல்லிக்கட்டில் சில செயல்பாடுகளைச் செய்யுமாறு பழக்கப் படுத்தியுள்ளனர். "சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளுக்குக் காளைவளர்ப்பவர்களில் ஒரு சிலர் குறியீடாகத் துண்டு அல்லது கயிறு போன்ற பொருட்களைத் தங்களின் காளைகளின் கண்களுக்குத் தெரியுமாறு அசைத்துக்காட்டிக் காளையினைக் காளைவளர்ப்பவர்கள் தாங்கள் இருக்கும் திசையினை நோக்கி ஓடிவருமாறு பழக்கப்படுத்தியுள்ளனர். சல்லிக்கட்டில் வாடியிலிருந்து அவிழ்த்துவிடப்பட்டுள்ள காளை மாடுபிடிவீரர்களின் ஆரவாரத்தால் வாடியைவிட்டு வெளியேறாமல் திகைத்து நிற்கும். அப்பொழுது காளைவளர்ப்போர் ஏதாவதுஒரு சத்தம் போட்டுத் தங்களின் கையிலுள்ள துண்டையோ அல்லது கயிற்றையோ காளையின் கண்களுக்குத் தெரியுமாறு காளைவளர்ப்பவர்கள் அசைத்துக் காட்டிக் காளை தங்களை நோக்கி ஓடிவருமாறு பழக்கப்படுத்தியுள்ளனர். மேலும் காளை சல்லிக்கட்டில் தன்னைச் சூழ்ந்துள்ள மாடுபிடிவீரர்களை விட்டு எவ்வாறு வெளியேறுவது என்று தெரியாமல் திகைத்து நிற்கும். அப்பொழுது காளைவளர்ப்பவர்கள் காளைக்குத் தாங்கள் பழக்கப்படுத்தியிருந்த சத்தத்தினை எழுப்பித் தங்களின் கையிலுள்ள துண்டையோ அல்லது கயிற்றினையோ காளையின் கண்களுக்குத் தெரியுமாறு அசைத்துக் காட்டிக் காளைவளர்ப்பவர்கள் காளையினைத் தாங்கள் நிற்கும் திசையினை நோக்கி ஓடிவருமாறு செய்திடுவார்கள்."[35] குறியீட்டுப் பயிற்சியினைக் காளைவளர்ப்பவர்களில் ஒரு சிலர் மட்டுமே தங்களின் காளைக்குப் பழக்கப்படுத்தியுள்ளனர். இப்பயிற்சியின் மூலம் எந்தச் சூழ்நிலையிலும் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளை மாடுபிடிவீரர்களிடம் பிடிபடாமல் வெற்றி பெறுகின்றது என்பது தெளிவாகின்றது.

மேற்கூறியவற்றிலிருந்து சல்லிக்கட்டிற்குத் தேவையான காளைகளைக் காளைவளர்ப்போர் கிடைமாட்டுக் கன்றுகளிலிருந்து தேர்ந்தெடுக்கின்றனர். சல்லிக்கட்டிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கன்றினைக் கைமேய்ச்சலாகக் கன்றின் பராமரிப்பாளர் மேய்த்துவருகின்றார். காளைக்கு மூக்கணாங்கயிறு குத்துவதற்கு மிகவும் அனுபவமிக்கவரைத்

தேர்ந்தெடுத்துக் குத்துகின்றனர். சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளுக்குத் தலை கண்கள், காதுகள் எவ்வாறு அமைந்திருக்க வேண்டும் என்பதனைக் காளைவளர்ப்போர் கணித்துள்ளனர். காளைகளுக்குக் கொம்புகள் எவ்வாறு அமைந்திருந்தால் சல்லிக்கட்டிற்கு ஏற்றதாக இருக்கும் என்றும் காளைவளர்ப்போர் கணித்துள்ளனர். சல்லிக்கட்டுக் காளைகளுக்குத் தொங்குதசை அதிகமாகத் தொங்கிக் கொண்டிருக்கக் கூடாதென்றும் திமில் பருத்திருக்கக் கூடாதென்றும் தொப்பூழ் தொங்கிக்கொண்டிருக்கக் கூடாதென்றும் வால் நீளமானதாக இருக்கக் கூடாதென்றும் காளை வளர்ப்போர் கருதுகின்றனர். காளைகளுக்குக் கால்கள் எவ்வாறு இருக்க வேண்டும் என்றும் காளைகளின் கால்களிலுள்ள குறைபாடுகள் இடம்பெற்றுள்ளன. காளைகளுக்குக் கால்குளம்பினைச் சீர்செய்து லாடம் கட்டுபவரால் லாடம் கட்டிவிடுகின்றனர். சல்லிக்கட்டில் கலந்து கொள்ளும் காளைகளுக்கு மணல்சாக்கு கட்டிப்பயிற்சி கொடுத்தல், பொம்மையைக் குத்தப்பயிற்சி கொடுத்தல், எலுமிச்சைப்பழத்தைக் குத்தப் பயிற்சிகொடுத்தல் ஒலியீட்டுப் பயிற்சி, குறியீட்டுப் பயிற்சி ஆகிய பயிற்சிகளைக் காளைவளர்ப்போர் தங்களின் காளைகளுக்குப் பழக்கப்படுத்தியுள்ளனர்.

## குறிப்புகள்

1. The sport is called tolu madu (iyxe bull). The best animals for it are the pulikkolam bulls from Madurai District. Edger Thurston, Castes and Tribes of sourthern India, VOL III,p.89-90.
2. தகவல்,சு.பாண்டி, குன்னத்தூர், நாள்—15.4.96.
3. மேலது.
4. தகவல், பெ.பாண்டி, கருப்பாயூரணி, நாள்—15.2.96.
5. அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சா தீபம் என்கிற மாட்டுவாகடம்,பக்.21—22.
6. தகவல், அ.தேவராசு, உத்தங்குடி, நாள்—20.3.96.
7. மேலது.
8. தகவல், பா.முத்துவேலு, உத்தப்ப நாயக்கனூர், நாள்—19.2.96.
9. மேலது.
10. தகவல், அ.சேசுத்தேவர், விக்கரமங்கலம், நாள்—9.3.96.
11. மேலது.
12. மேலது.
13. தகவல், சி.நடராசு, அய்யனார்குளம், நாள்—12.1.96.
14. மேலது.
15. மேலது.
16. மேலது.
17. அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சா தீபம் என்கிற மாட்டுவாகடம், ப.20.
18. தகவல், நீ.சேவுகப் பெருமாள், வே.புளியங்குளம், நாள்—12.1.96.
19. மேலது.
20. அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சா தீபம் என்கிற மாட்டுவாகடம். ப.16.
21. மேலது ப.16.

22.தகவல், ரா. நாராயணன், சக்குடி, நாள் — 10.2.96.

23.அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சா தீபம் என்கிற மாட்டு வாகடம், ப.19.

24.மேலது ப.17.

25.தகவல், ரா.நாராயணன், சக்குடி, நாள் — 10.2.96.

26.அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சா தீபம் என்கிற மாட்டு வாகடம், ப.19

27.தகவல், கோ.சுப்பையா நாயுடு, அலங்காநல்லூர், நாள்—18.1.96.

28.அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சா தீபம் என்கிற மாட்டு வாகடம், ப.19.

29.தகவல், கோ.சுப்பையாநாயுடு, அலங்காநல்லூர், நாள் — 18.1.96.

30.அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சா தீபம் என்கிற மாட்டு வாகடம், ப.20.

31.தகவல், மு.ராசு, திண்டியூர், நாள் —23.2.96.

32.மேலது.

33.தகவல், மு.கைலாசம், செம்புகுடிபட்டி, நாள் — 23.2.96.

34.தகவல், இரா.குருநாதக்கோனார், ரெங்கராசபுரம், நாள் — 23.2.96 காளைக்குப் பழக்கப்படுத்தியுள்ள ஒலியீட்டுப் பயிற்சியில் காளை வளர்ப்போர் தங்களின் வாயால் மட்டும் விசில் சப்தத்தினை எழுப்புவார்கள். மேலும் ஒருசிலர் தங்களின் காளைக்கு விசில் சப்தம் அல்லாத பிற ஒலிகளையும் எழுப்பிப் பழக்கப்படுத்தியுள்ளனர்.

35.மேலது.

# காளைவிளையாட்டின் வகைகள்

பண்டைக்காலந்தொட்டே தமிழர்கள் காளைகளை அடக்கி வெற்றிபெற்றுத் தங்களின் வீரத்தை நிலைநாட்டியுள்ளனர். காளைகளை அடக்குவதில் பல வகைகள் உள்ளன. இவ்வகைகள் அனைத்திலும் காளைகளை அடக்கும் முறையில் சில மாற்றங்கள் உள்ளன. இவ்வியலில் சல்லிக்கட்டு, திடல்சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு, பொங்கல் மஞ்சுவிரட்டு, எருதுகட்டு ஆகியவற்றோடு சலக் எருது, சேசப்படியெடுத்தல் ஆகிய காளைவிளையாட்டுக்கள் பற்றிய செய்திகளும் விளக்கப்பட்டுள்ளன.

### காளைவிளையாட்டின் வகைகள்

1. சல்லிக்கட்டு
2. திடல் சல்லிக்கட்டு
3. மஞ்சுவிரட்டு
4. பொங்கல் மஞ்சுவிரட்டு
5. எருதுகட்டு
6. சலக் எருது
7. சேசப்படியெடுத்தல்

ஆகியன காளைவிளையாட்டின் வகைகளாக உள்ளன.

### சல்லிக்கட்டு நடத்தும்முறை

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு ஊர்த்தெய்வ வழிபாட்டோடு இணைந்து நடைபெறுகின்றது. சல்லிக்கட்டு என்னும் விளையாட்டினை நடத்துவதற்கு முன்னர் ஊரின் பொதுவிடத்தில் ஊரிலுள்ள ஆடவர்கள் அனைவரும் கூடுகின்றனர். இவ்வாறு ஆடவர்கள் அனைவரும் கூடியிருக்கும்பொழுது ஊர்ப்பெரியவர்கள் சல்லிக்கட்டு நடத்த முடிவு செய்யப்படும் நாளையும் அதற்கான செலவினையும் கூறிவிட்டு சல்லிக்கட்டு நடத்துவதற்காக ஊரிலுள்ள மக்கள் அனைவருக்கும் விதிக்கப்பட்டுள்ள வரித்தொகையினையும் கூறுவார்கள். இதனை ஊரிலுள்ள மக்கள் அனைவரும் ஏற்றுக்கொண்டால் ஊர்ப்பெரியவர்கள் சல்லிக்கட்டு நடைபெறும் தேதியினையும் வரித்தொகையினையும் ஊர்த்தோட்டியின் மூலம் 'தமுக்கு' அடித்து ஊர்மக்களுக்குத் தெரியப்படுத்துகின்றனர். சல்லிக்கட்டு நடத்துவதற்காகக் குடிமக்களுக்கு

விதிக்கப்பட்டுள்ள வரியினை ஆதிதிராவிடர்கள் முன்னின்று நடத்தக்கூடிய சல்லிக்கட்டினைத்தவிர பிற ஊர்களில் நடைபெறும் சல்லிக்கட்டிற்கு ஆதிதிராவிட இனத்தவர்களிடம் ஊர்மக்கள் வரிவசூலிக்கமாட்டார்கள். சல்லிக்கட்டு நடத்துவதற்கு ஊரில் யாரேனும் எதிர்ப்புத் தெரிவித்தால் ஊர்ப்பெரியவர்கள் சல்லிக்கட்டு நடத்துவதனை நிறுத்தி விடுகின்றனர். பெரும்பாலான ஊர்களில் ஊர்மக்கள் ஊர்த்தெய்வத்திடம் சல்லிக்கட்டு நடத்துவதற்கு உத்தரவு கேட்டுப்பெற்றவுடன் சல்லிக்ட்டினை நடத்துகின்றனர். ''பனையூர் என்னும் ஊரில் முனியாண்டிசாமிக்குச் சல்லிக்கட்டு நடைபெறுகின்றது. பனையூரிலுள்ள மக்களில் ஆடவர்கள் அனைவரும் சல்லிக்கட்டு நடத்துவது பற்றிப்பேசி முடிவெடுப்பதற்கு ஆடி மாதத்தில் ஏதாவது ஒரு வெள்ளிக்கிழமை நாளில் ஊரின் பொதுவிடத்தில் கூடுகின்றனர். பின்னர் இவர்கள் அனைவரும் முனியாண்டிசாமியின் கோவிலுக்குச் சென்று பூக்கட்டிப்போடுகின்றனர். பூக்கட்டிப்போடுதல் என்பது பச்சை, வெள்ளை, சிவப்பு ஆகிய நிறங்கள் உள்ள பூக்களைக் காகிதத்தில் தனித்தனியே மடித்துப்போடுதலாகும்.வெள்ளை, சிவப்பு ஆகிய நிறங்களில் பூக்கள் உள்ளன. பச்சைநிறத்திற்குப் பூச்செடியின் இலைகள் பயன்படுகின்றன. ஒருசிலர் வெள்ளைநிறத்திற்குத் திருநீறு, சிவப்புநிறத்திற்குக் குங்குமம் ஆகியவற்றைப் பயன்படுத்துகின்றனர். இவ்வாறு மடித்து வைத்துள்ள பூ மடிப்பில் ஒன்றை ஊர்மக்கள் முனியாண்டிசாமியை வணங்கிவிட்டு அங்கு கூடியுள்ளவர்களில் ஒரு சிறுவனை அல்லது சிறுமியை எடுத்துத் தரச்சொல்கின்றனர். இவ்வாறு எடுத்த பூ மடிப்பினை ஊர்ப்பெரியவர் பிரித்துப் பார்க்கின்றார். பிரித்துப் பார்க்கப்பட்ட பூ மடிப்பு பச்சை நிறமாக இருந்தால் முனியாண்டிசாமி சல்லிக்கட்டு நடத்த உத்தரவு கொடுக்கவில்லை என்று ஊர்மக்கள் நம்புகின்றனர். வெள்ளைநிறமாக இருந்தால் முனியாண்டிசாமி சல்லிக்கட்டு நடத்த உத்தரவு கொடுத்துள்ளது என்று ஊர்மக்கள் நம்புகின்றனர். பின்னர் ஊர்ப்பெரியவர்கள் முனியாண்டி சாமிக்குச் சல்லிக்கட்டு நடத்துவதற்கு ஊர்மக்களிடம் சம்மதம் கேட்கின்றனர். ஊர்மக்கள் அனைவரும் சம்மதம் தெரிவித்தால் சல்லிக்கட்டு நடத்துவதற்கு ஏதாவது ஒரு நாளினை ஊர்ப்பெரியவர்கள் குறிக்கின்றனர். சல்லிக்கட்டு நடத்துவதற்குக் குறித்தநாளை ஊர்ப்பெரியவர்கள் ஊர்த்தோட்டியிடம் கூறி அவரை உள்ளூர் மற்றும் பக்கத்து ஊரில் நடைபெறும் சல்லிக்கட்டிற்குச் சென்று பறைசாற்றச் சொல்லுகின்றனர். இதனைக் கேட்டுக்கொண்ட ஊர்த்தோட்டி தமுக்கு என்னும் இசைக்கருவியினை இசைத்துக்கொண்டு உள்ளூர் வீதிகளில் சல்லிக்கட்டு நடைபெறும் நாளினை ஊர்மக்களுக்கு

அறிவிக்கின்றார். பின்னர் பக்கத்துஊரில் நடைபெறும் சல்லிக்கட்டிற்குச் சென்று அங்குள்ள ஒலிபெருக்கியில் தமுக்கு என்னும் இசைக்கருவியின் மூலம் இசையெழுப்பித் தன்னுடைய ஊரில் நடைபெறவிருக்கும் சல்லிக்கட்டின் நாளினையும் அதில் வழங்கப்படும் பரிசுப்பொருட்களையும் அறிவிக்கின்றார். மாடு வளர்ப்பவர்களிடம் சல்லிக்கட்டு நடத்தவிருக்கும் விழாக்குழுவினர் எங்கள்ஊரில் நடக்கவிருக்கும் சல்லிக்கட்டிற்கு உங்களின் காளையைக் கொண்டுவாருங்கள் என்று சொல்லி வெத்தலை (வெற்றிலை) வைத்து அழைக்கின்றனர்." இது தவிர கோவில்பூசாரியிடம் உத்தரவு கேட்டுச் சல்லிக்கட்டு நடத்தும் வழக்கமும் ஒருசில ஊர்களில் உள்ளது. "கரடிக்கல் என்னும் ஊரில் பெருமாள் கோவிலுக்குச் சல்லிக்கட்டு நடைபெறுகின்றது. பெருமாள்சாமி கரடிக்கல் என்னும் ஊரிலுள்ள மலையில் உள்ளது. இதற்குப் பூசாரியாக வேடநாயக்கர் இருக்கின்றார். சிவன்ராத்திரி அன்று இரவில் ஊர்மக்கள் அனைவரும் பெருமாள் கோவிலுக்குச் சென்று பூசாரியிடம் சல்லிக்கட்டு நடத்துவதற்கு உத்தரவு கேட்கின்றனர். பூசாரி அருள் இறங்கிக் கல்யாணத்தை நடத்துப்பா என்று கூறினார் என்றால் சல்லிக்கட்டு நடத்து என்று அர்த்தம் என்று ஊர்மக்கள் நம்புகின்றனர். இதன் பின்னர்ப் பங்குனிமாதம் ஊர்மக்கள் கூடி முடிவெடுத்து ஊர்மக்களிடம் பணம் திரட்டிச் சித்தரைமாதம் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர்."[2] இக்கருத்துகளைக்கொண்டு பார்க்கும்பொழுது ஊர்மக்கள் விரும்பும் பொழுதெல்லாம் சல்லிக்கட்டு நடத்துவதில்லை என்பதனையும் ஊர்மக்கள் மரபு அடிப்படை அணுகுமுறையில் ஊர்த்தெய்வத்திடம் அனுமதி பெற்றுச் சல்லிக்கட்டு நடத்துகின்றனர் என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

### சல்லிக்கட்டில் காளைகளை அவிழ்த்துவிடும் முறை

சல்லிக்கட்டில் கலந்துகொள்வதற்கு வெளியூர்களில் இருந்து அதிகமான காளைகள் வருகின்றன. சல்லிக்கட்டில் கலந்துகொள்ள வந்துள்ள காளைகளைச் சல்லிக்கட்டு நடைபெறுகின்ற ஊரின் பொதுவிடத்தில் அமைந்துள்ள வாடிக்குள் நிறுத்தி விழாக்குழுவினரின் அனுமதியுடன் காளைவளர்ப்போர் அவிழ்த்து விடுகின்றனர்.

### வாடி—விளக்கம்

'வாடி' என்னும் சொல்லுக்குத் "தொட்டால்வாடி, மதில், முற்றம் தோட்டம், வீடு"[3] எனப் பல பொருள்கள் இருக்கின்றன. ஆனால், சல்லிக்கட்டில் பயன்படுத்தப்படுகின்ற வாடியானது மண்சுவர்களால் முற்றம்போல் அமைந்திருக்கும். இதற்குக் கதவும் போடப்பட்டிருக்கும்.

இக்கதவினைத் திறந்தவுடன் வாடிக்குள் அடைக்கப்பட்டுள்ள காளை வெளியேறுகின்றது. இவற்றினை மையமாகக் கொண்டு பார்க்கும்பொழுது மதில், முற்றம் என்ற இரண்டு சொற்களும் வாடி என்பதற்குப் பொருத்தமாக இருக்கும் எனக் கருதப்படுகின்றது. ஒருசில ஊர்களில் வாடிகட்டுவதற்கு மண்சுவர்களுக்குப் பதிலாக மரக்கட்டைகளை விழாக்குழுவினர் பயன்படுத்துகின்றனர் ஊரின் பொதுவிடத்தில் அமைந்திருக்கும் வாடிக்கு அருகில் நடுவர்குழு அமர்வதற்கான மேடை விழாக்குழுவினரால் அமைக்கப்பட்டிருக்கும்.சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளை வரிசைப்படுத்தி விடுவதற்கு வாடி பயன்படுகின்றது. இவ்வாடிக்குள் காளையினை காளைவளர்ப்போர் நிறுத்தியவுடன் விழாக்குழுவினர் காளையின் சிறப்பினையும் காளையினை வளர்த்தவரின் பெருமை அவரின் ஊர் ஆகியவற்றினை அறிவிக்கின்றனர். பின்னர் காளையினைப் பிடிக்கும் மாடுபிடிவீரர்களுக்குக் கொடுக்கப்படவுள்ள பரிசுப் பொருட்களையும் விழாக்குழுவினர் அறிவித்த பின்னர் காளை வாடியிலிருந்து காளைவளர்ப்போரால் அவிழ்த்து விடப்படுகின்றது. இவ்வாறு அவிழ்த்து விடப்பட்ட காளை மக்களின் ஆரவாரத்தால் வாடியிலிருந்து சீற்றத்துடன் வெளியேறுகின்றது. இவ்வாறு வாடியிலிருந்து வெளியேறும் காளயினை மாடுபிடிவீரர்கள் அடக்கி வெற்றிகொள்கின்றனர்.

### *சல்லிக்கட்டு விளையாட்டின் விதிமுறைகள்*

'சல்லிக்கட்டு'என்னும் விளையாட்டில் கலந்து கொள்ளும் காளைகளை மாடுபிடிவீரர்கள் எவ்வாறு அடக்கவேண்டும் என்று விழாக்குழுவினர் நிபந்தனைகள் விதித்துள்ளனர். வாடியிலிருந்து வெளியேறுகின்ற காளை ஓடக்கூடியதாக இருந்தால் மாடுபிடிவீரன் அதனை அய்ம்பது அடி தூரத்திற்குத் திமிலைத் தழுவி அணைந்தவாறு செல்லவேண்டும். காளை நின்றுவிளையாடும் குணம் கொண்டாதாக இருந்தால் அதன் திமில்பகுதியில் மாடுபிடிவீரன் விழுந்து தழுவிக் காளையின் மூன்று தாவிற்குக் கீழே விழாமல் அணையவேண்டும். இவ்விரண்டு முறைகளும் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரன் காளையை வென்றதற்குச் சமமாகும். சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளையினை மாடுபிடிவீரன் தனியொருவனாக நின்று அடக்குவதே மாடுபிடிவீரனின் வெற்றியாகும். விழாக்குழுவினர் வாடியிலிருந்து காளையினை அதன் உரிமையாளர்கள் அவிழ்த்துவிடும் முன்னர் காளையின் உரிமையாளரின் பெயரினையும் ஊரினையும் அறிவிக்கின்றனர். பின்னர் காளையைப்

பிடித்தால் மாடுபிடி வீரனுக்குக் கொடுக்கப்படவுள்ள பரிசுப் பொருட்களையும் விழாக்குழுவினர் ஒலிபெருக்கியின் மூலம் அறிவிக்கின்றனர். சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளையினை மாடுபிடிவீரன் பிடித்துவிட்டால் அவனின் பெயரையும், ஊரையும் விழாக்குழுவினர் அறிவித்துப் பரிசுப்பொருட்களைக் கொடுக்கின்றனர்."[4]

சல்லிக்கட்டு மதுரைமாவட்ட நாட்டுப்புறமக்களிடத்தில் இரண்டு வகையாக அழைக்கப் படுகின்றது.

1. சாட்டிய சல்லிக்கட்டு
2. சாட்டாத சல்லிக்கட்டு

### *சாட்டிய சல்லிக்கட்டு*

சிலஊர்களில் சல்லிக்கட்டு வருடந்தோறும் நடைபெறும் சல்லிக்கட்டு நடத்தும் மாதமும் தேதியும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் இல்லாமல் வருடத்திற்கு ஒரு தேதி மாறிக் கொண்டிருக்கும். "சில ஊர்களில் ஏதேனும் ஒரு சில காரணங்களால் ஓரிரு ஆண்டுகள் சல்லிக்கட்டு நடைபெறாமல் போய்விடக்கூடும். இப்படிப்பட்ட ஊர்களில் சல்லிக்கட்டு விழா நடத்தினால் பக்கத்து ஊர்ச் சந்தைகளில் தமுக்கடித்தல், சுவரொட்டிகள், காளை உரிமையாளர்களுக்கு வெத்தலைபாக்கு வைத்து அழைத்தல் போன்றவைகள் மூலம் விழாக்குழுவினர் சல்லிக்கட்டு நடைபெறப் போவதனைப் பிறஊர்மக்களுக்குத் தெரியப்படுத்துகின்றனர்"[5] இவ்வாறு மற்ற ஊர்களுக்குப் பறைசாற்றிவிட்டுச் சல்லிக்கட்டு நடத்துவதால் சாட்டிய சல்லிக்கட்டு எனப்படுகின்றது. 'சாற்றிய' என்னும் சொல் 'சாட்டிய'என்று நாட்டுப்புறமக்கள் பேச்சுவழக்கில் வழங்குகின்றது.

### *சாட்டாத சல்லிக்கட்டு*

அலங்காநல்லூர், பாலமேடு, அச்சம்பட்டி, குலமங்கலம் ஆகிய ஊர்களில் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் தவறாமல் சல்லிக்கட்டு நடைபெறுவதால் எந்தவிதமான விளம்பரங்களும் செய்யாமலேயே மாடுபிடி வீரர்களும் காளைகளும் வந்துசேர்ந்துவிடுகின்ற காரணத்தால் இது சாட்டாத சல்லிக்கட்டு என நாட்டுப்புற மக்கள் பேசுகின்றனர். எனவே, நாட்டுப்புறமக்களின் வழக்கத்திலுள்ளபடியே 'சாட்டிய' 'சாட்டாத' என்ற சொற்களே இவ்வியலில் இடம்பெற்றுள்ளன.

### *திடல் சல்லிக்கட்டு (திறந்தவெளிப்பரப்பு)*

"அலங்காநல்லூர் சல்லிக்கட்டினைத் தழுவி ஒழுங்குபடுத்தப்பட்டு

அரசு அல்லது ஏதேனும்ஒரு நிதிநிறுவனத்தின் சார்பில் திடல் சல்லிக்கட்டு நடைபெறுகின்றது. இச்சல்லிக்கட்டினை நடத்துவதற்குப் பார்வையாளர்கள் அமர்ந்து நன்கு காணத்தக்க வகையில் 'காலரி' அமைப்புள்ள திடலை விழாக்குழுவினர் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். இரண்டு வாடிக்கும் இடையே 200 அடி நீளமும் 50 அடி அகலமும் இடைவெளி இருக்கின்றது. இவ்விடைவெளிப்பகுதியில் காளை விளையாட்டு நடைபெறுகின்றது. விழாக்குழுவினரால் ஒவ்வொரு காளைக்கும் எண் கொடுக்கப்பட்டிருக்கும். இதேபோல் பிடிகாரர்களுக்கும் எண் கொடுக்கப்பட்டிருக்கும். ஒரு குறிப்பிட்ட எண்ணுள்ள காளையை ஒரு குறிப்பிட்ட எண்ணுள்ள மாடுபிடிவீரன் அடக்க வேண்டும் என்று ஒலிபெருக்கியின் மூலம் விழாக்குழுவினர் அறிவிப்பார்கள். இவ்வாறு எந்தக் காளையை எந்த மாடுபிடிவீரன் அடக்க வேண்டும் என விழாக்குழுவினர் அறிவித்துவிட்டுப் பின்னர் காளையை அவிழ்த்துவிடுகின்றனர். இவ்வாறு அவிழ்த்துவிடப்பட்ட காளையை மாடுபிடிவீரன் சுமார் 50 அடி தூரம் தழுவி அணைந்தவாறு செல்லவேண்டும். ஒரு காளையை ஒருவர் அணைந்தால் நான்கு புள்ளிகள் விழாக்குழுவினர் பகிர்ந்து கொடுக்கின்றனர். இந்த விளையாட்டின் முடிவில் அதிகப் புள்ளிகளைப் பெற்ற மாடுபிடிவீரனுக்கே விழாக்குழுவினரின் சார்பில் பரிசு தரப்படுகின்றது."[7] இம்முறை தற்பொழுது வழக்கில் இல்லை.

**மஞ்சுவிரட்டு–பெயர்க்காரணம்**

'மஞ்சு' என்பது நார் நாரினால் கழுத்துத் தொங்கல் கட்டிக் காளையை வெருளச் செய்வதால் இந்தத் திருவிழாவை 'மஞ்சிவிரட்டு' என்று இராமநாதபுரத்தினர் கூறுவர். மஞ்சி என்பது கற்றாழையிலிருந்து எடுக்கப்படும் நாரிற்குப் பெயராகும். இதன்நிறம் தூயவெண்மையாகும். இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டுதான் இன்றும் மஞ்சியில் வண்ணம் பூசப்பட்டுக் காளைகளின் கழுத்தில் கட்டுகின்றனர். மஞ்சு என்பதற்கு இளமை,வலிமை என்று இரண்டு பொருள்கள் உள்ளன. இதனை அடிப்படையாகக்கொண்டு நோக்கினால் இளைஞர்களும் வலிமையுடையவர்களும் கலந்துகொள்ளும் விளையாட்டாக உள்ளது என்பது புலனாகின்றது. மேலும் மஞ்சுவிரட்டில் கலந்துகொள்ளும் காளைகளும் இளமையானவையாகவும் வலிமையானவையாகவும் இருக்கின்றன. எனவே, மஞ்சுவிரட்டு என்பது வலிமையான இளைஞர்கள் முரட்டுக்காளையினை அடக்கி வெற்றிபெறும் விளையாட்டாகும்.

**மஞ்சுவிரட்டு நடத்தும்முறை**

சல்லிக்கட்டு நடத்துவதற்கு முன்னேற்பாடுகள் செய்வதனைப் போலவே மஞ்சுவிரட்டிற்கும் ஊர்மக்கள் ஒன்றுகூடி முடிவெடுத்து மஞ்சுவிரட்டு நடத்துகின்றனர். மஞ்சுவிரட்டுக்குத் தேவையான நிதிகளை ஊர்மக்கள் கொடுக்கின்றனர். மஞ்சுவிரட்டு நடைபெறுவதனைப் பிற ஊர்மக்களுக்குத் தெரியப்படுத்துவதற்கு விழாக்குழுவினர் சுவரொட்டிகள், பக்கத்து ஊர்ச்சந்தையில் தமுக்கடித்தல், பிறஊரில் நடைபெறும் சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு ஆகியவற்றில் தமுக்கடித்து அறிவித்தல், காளையின் உரிமையாளர்களுக்கு வெத்தலைபாக்குவைத்து அழைத்தல் போன்றவற்றின் மூலம் தெரியப்படுத்துகின்றனர்.

**மஞ்சுவிரட்டு நடைபெறும் ஊர்கள்**

மதுரை மாவட்டத்தில் மேலூர் பகுதியில் மஞ்சுவிரட்டு நடைபெறுகின்றது. மேலூர்ப் பகுதியில் மேலூர், உறங்கான்பட்டி, கீழையூர், மேலவளவு, சேக்கிபட்டி, மட்டங்கிபட்டி, வெள்ளளூர் ஆகிய இடங்களிலும் சிவகங்கை மாவட்டத்தில் சிராவயல், பாகனேரி, கண்டுப்பட்டி, அரளிப்பாறை ஆகிய இடங்களிலும் நடைபெறுகின்றது. இவற்றில் மதுரை மாவட்டத்தில் உறங்கான்பட்டி மஞ்சுவிரட்டும் சிவகங்கை மாவட்டத்தில் சிராவயல் மஞ்சுவிட்டும் சிறப்பாக நடைபெறுகின்றன.

**மஞ்சுவிரட்டு நடைபெறும் விதம்**

சல்லிக்கட்டு நடைபெறுவதற்கு வாடி பயன்படுவது போல் மஞ்சுவிரட்டு நடத்துவதற்குத் தொழு பயன்படுகின்றது. வாடிக்குள் ஒரு காளையை அனுமதித்து அதனை அவிழ்த்துவிட்ட பின்னர் அடுத்தகாளை அனுமதிக்கப்படும். ஆனால், மஞ்சுவிரட்டுத் தொழுவிற்குள் மஞ்சுவிரட்டுக்காகக் கொண்டுவரப்பட்டுள்ள காளைகள் அனைத்தையும் மஞ்சுவிரட்டு என்னும் விளையாட்டு தொடங்கும் முன்பே அடைத்துவிடவேண்டும் எனவிழாக்குழுவினர் நிபந்தனைகள் விதித்துள்ளனர். இத்தொழு 'மஞ்சுவிரட்டு' என்னும் விளையாட்டு நடைபெறும் ஊரின் பொதுவிடத்தில் அமைக்கப்பட்டிருக்கும். நூற்றுக்கும் மேற்பட்ட காளைகளை அடைத்துவைத்து மஞ்சுவிரட்டு விடுவதற்கு ஏற்றவாறு தொழு வசதியாய் அமைந்திருக்கும்.

**தொழு**

'தொழு' என்னும் சொல் "பட்டி மாடுகளை அடைக்கும் இல்லம்"[10] என்று பொருள்படுகின்றது. மஞ்சுவிரட்டுக்குரிய தொழுவும் காளைகளை

அடைத்துவைக்கும் இடமாக இருப்பதால் இக்கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இருக்கின்றது. சிலஊர்களில் தொழு அமைப்பதற்குச் சுவர் எடுப்பதற்குப் பதிலாகக் கனமான கம்புகளை ஊன்றி அதில் கயிறுகட்டி வைத்து விழாக்குழுவினர் தொழுவாகப் பயன்படுத்துகின்றனர்.

மஞ்சுவிரட்டுத்தொழுவில் விளையாட்டுத் தொடங்கும் முன்பே தங்களுடைய காளைகளைக் காளைகளின் உரிமையாளர்கள் அடைத்து விடுவார்கள். தொழுவிற்கு ஒருபுறம் மட்டும் வாயில் இருப்பதால் மஞ்சுவிரட்டுத் தொடங்கியபின் புதிதாகக் காளைகளைத் தொழுவிற்குள் கொண்டுசெல்ல இயலாது என்பதால் காளைகளின் உரிமையாளர்கள் தங்களின் காளைகளை முன்னதாகவே அடைத்துவிடுகின்றனர். இவ்வாறு தொழுவிற்குள் அடைத்துவைத்துள்ள காளைகளை விழாக்குழுவினர் வானவேட்டு விட்டவுடன் காளையின் உரிமையாளர்கள் அவிழ்த்துவிடுகின்றனர். காளைகள் செருக்குடனும் சீற்றத்துடனும் தொழுவிலிருந்து வெளியேறுகின்றன. இவ்வாறு வெளியேறும் காளைகளைத் தொழுவிலிருந்து சுமார் 50 அடி தூரத்தினைக் கடந்தபின்னர் மாடுபிடிவீரர்கள் பிடித்து அடக்கவேண்டும் என்று விழாக்குழுவினர் நிபந்தனை விதித்துள்ளனர். தொழுவிலிருந்து 50 அடி தூரத்தினைக் கடந்த காளைகளை வீரர்கள் பலர்கூடி அடக்கிக்கொள்ளலாம் என்றும் காளைகளின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் வேட்டி, துண்டு, மணிகள், பணம் போன்றவற்றை வீரர்கள் அவிழ்த்து எடுத்துக்கொள்ளலாம் என்றும் விழாக்குழு நிபந்தனை விதித்துள்ளது. மஞ்சுவிரட்டில் கலந்துகொள்கின்ற காளைகளை விழாக்கழுவினரின் நிபந்தனைகளின்படி மாடுபிடிவீரர்கள் பலர்கூடி அணைந்து காளையைக் கீழே தள்ளி விருதுத்துணிகள், மணிகள் ஆகியவற்றைக் கழற்றி எடுத்த பின்னர் காளையினை மாடுபிடிவீரர்கள் விரட்டிவிடுவார்கள். இவ்வாறு செய்வதே காளையை வீரர்கள் அடக்கியதாக விழாக்குழுவினர் ஏற்றுக்கொள்கின்றனர்."[11] மஞ்சுவிரட்டில் காளைகள் தொடர்ச்சியாக அவிழ்த்து விடப்படுவதால் சில திறமையற்ற காளைகளும் மாடுபிடி வீரர்களிடமிருந்து தப்பித்துக்கொள்கின்றன. மஞ்சுவிரட்டு நடக்கின்ற இடத்திலிருந்து மாடுபிடிவீரர்கள் இரண்டு மைல்களுக்கு அப்பால் நின்றும் காளைகளைப் பிடிக்கின்றனர். இதனால், காளைகள் அதிகமான அளவுக்குப் பயிற்சி பெற்றிருந்தால் மட்டுமே மாடுபிடிவீரர்களிடமிருந்து தப்பித்துக்கொள்ள முடியும். மேலும் மஞ்சுவிரட்டில் காளைகள் தொடர்ச்சியாகத் தொழுவினைவிட்டு வெளியேறுவதால் குறைந்த நேரத்திலேயே மஞ்சுவிரட்டு நிகழ்ச்சி முடிவடைந்துவிடுகின்றது.

## பொங்கல் மஞ்சுவிரட்டு

தமிழகம் முழுவதும் உழவர்கள் தங்களுடைய உழவுத் தொழிலுக்கு உறுதுணையாக இருக்கின்ற மாடுகளுக்குத் தைமாதம் இரண்டாம்நாள் பொங்கல் வைத்து வழிபடுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர். “அப்பொங்கல்நாளில் உழவர்கள் தங்களுடைய பசு, காளை, கன்றுகள் முதலியவற்றை நீர்நிலைகளில் குளிப்பாட்டிப் பொட்டுவைத்து அழகுபடுத்துவார்கள். பின்னர் உழவர்கள் காளைகளின் கொம்புகளைச் சீவி வண்ணம் அடிப்பார்கள் கொம்புகளைச் சீவுதல் என்பது கூர்மையற்றுள்ள கொம்புகளைக் காளையின் உரிமையாளர் அரிவாளால் காளையின் கொம்புகளைக் கூர்மைப்படுத்துதலாகும். காளைகளின் கழுத்தில் வேட்டி, துண்டு, காகித மாலைகள், மணிகள் போன்றவற்றை உழவர்கள் கட்டுவார்கள். இவ்வாறு அலங்கரிக்கப்பட்ட மாடுகளை உழவர்கள் தங்களுடைய மாட்டுத்தொழுவத்தில் கட்டிவிடுவார்கள். பின்னர் மாட்டுத்தொழுவத்தில் உழவர்கள் பொங்கல் வைப்பார்கள். பின்பு பானையில் உள்ள பொங்கலைச் சிறிதளவு எடுத்து மூன்று இலைகளில் வைப்பார்கள். மூன்று இலைகளிலும் உள்ள பொங்கலைத் ‘தழுகை’ என நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர். இத்தழுகைகளில் தேங்காய், கரும்பு, வாழைப்பழம் ஆகியவற்றையும் உழவர்கள் வைக்கின்றனர். பின்னர் சூடம், சாம்பிராணி, பத்தி ஆகியவற்றையும் ஏற்றி உழவர்கள் இறைவனை வணங்குகின்றனர். இதன் பின்னர் மூன்று தழுகைகளில் ஒன்றை மாடுமேய்ப்பவனுக்கும் மற்றொன்றை மாடுகளில் ஏதாவது ஒன்றுக்கும் இன்னொன்றை மாட்டின் உரிமையாளர்க்கும் என உழவர்கள் பகுத்து உண்கின்றனர். தழுகைகளிலுள்ள பொங்கல் உணவினை உண்டபின்னர் தழுகை இலைகளைப் பாத்திரத்தில் போட்டுவிட்டு அதேபாத்திரத்தில் மாடுகளின் உரிமையாளரும் மாடுகளைமேய்ப்பவனும் கைகழுவுகின்றனர். இதனோடு கண்மாய் அல்லது குளத்திலுள்ள மடையிலிருந்து கொண்டுவரப்பட்டுள்ள தண்ணீரையும் உழவர்கள் தெளிக்கின்றனர். இதனை எச்சில் தெளித்தல் என நாட்டுப்புற வேளாண்குடிமக்கள் கூறுகின்றனர். மாடுகளின் மீது எச்சில் தெளிக்கும்போது

பட்டி பலுகப்பலுக
பாப்பான பொங்கப்பொங்க
சீதேவி நின்றாட
மூதேவி முறிஞ்சோட

என்று உழவர்கள் பாடுகின்றனர். இப்பாடலைப் பாடுவதனால் உழவர்களின் வாழ்க்கையில் மாடுகளும் பிறசெல்வங்களும் பெருகி வளரும் என்றும் வறுமை உழவர்களைவிட்டு விலகிவிடும் என்றும் உழவர்கள் நம்புகின்றனர். இதன்பின்னர், உழவர்கள் அனைவரும் தங்களின் காளைகளை அல்லது காளைக்கன்றுகளை ஊரின் பொதுவிடத்திற்குக் கொண்டுவந்து அவிழ்த்துவிடுகின்றனர். இவ்வாறு அவிழ்த்து விடப்பட்டுள்ள காளைகளை உள்ளூர் இளைஞர்கள் அடக்க முற்படுகின்றனர். இவற்றில் சகோதர உறவுக்காரர்களின் காளைகளைப் பிடிக்காமல் மாமன் மைத்துனர்களின் காளைகளை மட்டுமே பிடித்து வெற்றி பெறுகின்றனர்.''[12] இப்பொங்கல் மஞ்சுவிரட்டில் சல்லிக்கட்டிற்குப் பயன்படுத்தப்படும் வாடியோ அல்லது மஞ்சுவிரட்டிற்குப் பயன்படுத்தப்படும் தொழுவோ பயன்படுத்தப்படாமல் உழவர்கள் தங்கள் ஊரிலுள்ள திறந்தவெளிப்பகுதியில் காளைகளை நிறுத்தி அவிழ்த்து விடுகின்றனர். இம்முறை தமிழகத்தில் பரவலாகக் காணப்படுகின்றது. பயிற்சியளிக்கப்பட்ட காளைகளுக்குப் பொங்கல் மஞ்சுவிரட்டில் அரங்கேற்றம் செய்யப்படுகின்றது. காளைகளைப் பிடிக்க வெளியூர் சல்லிக்கட்டிற்குச் செல்லவேண்டும் என்ற ஆர்வமுள்ள இளைஞர்களும் இதனைப் பயிற்சிக்களமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

### எருதுகட்டு

"எருதுகட்டு'' என்னும் விளையாட்டு நாட்டுப்புறங்களில் உள்ள அய்யனார்கோவிலில் நடைபெறும் குதிரையெடுப்புவிழாவில் இடம்பெற்று வருகின்றது. 'குதிரையெடுப்பு என்பது குயவர்கள் மண்ணால் செய்த குதிரைகளை ஊர்மக்கள் அனைவரும் ஒன்றுகூடி கொட்டுமேளத்துடன் தூக்கிக்கொண்டு அய்யனார்கோவிலில் வைத்து வழிபடும் சடங்காகும். இவ்விழா பெரும்பாலும் வைகாசி அல்லது புரட்டாசி மாதங்களில் நடைபெறுகின்றது. "வேளார்சாவடியில் செய்யப்பட்ட குதிரைகள் முறைப்படி அய்யனார்கோவிலை வந்தடைந்ததும் முன்னதாகவே தயாரித்து வைத்துள்ள பொங்கலை இலையில் வைத்து இதனோடு பூவினையும் பூசாரி அய்யனார்கோவிலின் பலிபீடத்தில் வைக்கிறார். இதனையடுத்துப் பூசாரி சக்திக்கிடாய் வெட்டி அதன் இரத்தத்தைக் கொடிவடத்தில் தடவிவிடுகின்றார். பின்னர் ஊரின் மரியாதைக்காரர்களுக்குத் தேங்காய், பழம், சந்தனம், வெற்றிலை, பாக்கு, விபூதி ஆகியவற்றைப் பூசாரி கொடுக்கின்றார். மரியாதைக்காரர்கள் இதனை ஏற்றுக்கொண்டு கொடிவடத்தை எடுத்து அய்யனார் கோவிலின் முன்பு முன்னதாகவே

கட்டப்பட்டுள்ள நாச்சியார் காளைக்கன்றின் கழுத்தில் கட்டி இணைத்துவிடுகின்றார். பின்னர் சாமியாடி ஒருவர் அருள் இறங்கித் தன்கையில் இருக்கும் அரிவாளால் நாச்சியார் காளைக்கன்றின் கழுத்தில்கட்டப்பட்டுள்ள கயிற்றினை அறுத்துவிட கன்று கோவிலின் முன்பு வடத்தை இழுத்துக்கொண்டு செல்லும். இந்த வடத்தை கோயிலுக்கு வந்திருக்கும் மக்கள் தொட்டு வணங்கிச் செல்வார்கள். இதன்பின்னர் வைக்கோலால் திரிக்கப்பட்ட பெரியவடத்தைக் கொண்டு வந்து கோயிலின் முன்னர் விழாக்குழுவினர் வைப்பார்கள். எருதுகட்டுக்கு அழைப்பு விடுவிக்கப்பட்ட உள்ளூர், வெளியூர் காளைகளுக்கு விருதுத் துணிகள் கொடுத்தபின்னர் வடத்தின் ஒரு நுனியைக் காளையின் கழுத்தில் விழாக்குழுவினர் இணைத்துவிடுகின்றனர். வடத்தின் மறுநுனி ஒரு கல்தூணில் இணைக்கப்பட்டிருக்கும். இவ்வாறு இணைக்கப் பட்டிருக்கும் காளையை வீரர்களும் இளைஞர்களும் கூச்சலிட்டு அடக்க முயல்வர்கள் காளை வடத்தை இழுத்துக்கொண்டு வீரர்களின் மீது பாய்ந்து குத்த முயலும்போது வீரர்கள் விலகிச் சென்றுவிடுவார்கள். பின்னர் மீண்டும் முயன்று காளையை வீரர்கள் அடக்கவேண்டும். அவ்வாறு அடக்காவிட்டால் எருதுகட்டில் காளை வெற்றிபெற்றதாகக் கருதப்படுகின்றது. ஒரு காளையின் முடிவு தெரிந்தபின்னர் அதனை வடத்திலிருந்து அவிழ்த்துவிட்டு அடுத்தகாளையை விழாக்குழுவினர் களத்தில் இறக்கிவிடுகின்றனர்."[13] 'எருதுகட்டு' என்னும் இவ்விளையாட்டில் காளைக்கு மிகவும் சிரமம் ஏற்படுகின்றது. காளை அதிகக்கனமான வடத்தையும் இழுத்துக்கொண்டு வீரர்களின்மீது பாய்ந்து தன்னை அடக்காமல் காத்துக்கொள்ள வேண்டியுள்ளதால் சிலசமயத்தில் திறமையுள்ள காளைகளும் மாடுபிடிவீரர்களிடம் பிடிபட்டுவிட வாய்ப்புள்ளது.

காளையை மனிதன் பிடித்து வெற்றிகொள்ளும் மாடுபிடிவகைகள் மட்டுமல்லாமல் வேறுவகையான காளைவிளையாட்டுக்களும் நாட்டுப் புறமக்களால் நடத்தப்பட்டு வருகின்றன. அவை சலக் எருது, சேப்படியெடுத்தல் எனப் பெயர் பெற்றுள்ளன. 'சலக் எருது' என்னும் விளையாட்டு திண்டுக்கல் மாவட்டத்திலும் 'சேசப்படியெடுத்தல்' என்னும் விளையாட்டு மதுரை மாவட்டத்திலும் நடைபெற்று வருகின்றன.

**சலக் எருது**

"சலக் எருது என்னும் விளையாட்டு திண்டுக்கல் மாவட்டத்திற்கே உரியது. இவ்வியைாட்டினைப் பிறமாவட்டங்களில் காண்பதரிது. சலக்எருது

என்னும் விளையாட்டினைத் திண்டுக்கல் மாவட்டத்தில் வசிக்கும் கம்பளத்துநாயக்கர் சமூகத்தினர் மட்டுமே நடத்திவருகின்றனர். இவ்விளையாட்டில் வீரஇளைஞர்கள் பலர் வீரமுள்ளகாளைகளை வரிசையாக நிறுத்துகின்றனர். ஒவ்வோர் இளைஞரும் ஒவ்வொரு காளையின் தலையில் கொம்புகளுக்கிடையில் ஆறடி நீளமுள்ள கம்புகளை வைக்கின்றனர். அவர்கள் கம்பின் ஒரு முனையைக் காளையின் தலையிலும் மறுமுனையைத் தம் வலக்கையிலும் பிடித்துக்கொண்டு ஓடத் தொடங்குகின்றனர். பிற இளைஞர்கள் அக்காளைகளின் பின்னின்று தடிகளால் அவைகளை அடித்து விரட்டுகின்றனர். இளைஞர்கள் காளைகளை முந்திக்கொண்டு அதேநேரத்தில் காளைகளின் வேகத்திற்கு ஏற்றவாறு காளைகளின் தலைகளில் வைத்த கம்பு கீழே விழாமல் ஓடவேண்டும். ஓட்டம் குறைந்தால் காளைகள் இளைஞர்களை மிதித்துவிடும். இவ்வாறு காளைகளினால் மிதிபட்ட இளைஞர்கள் விளையாட்டில் தோல்வியடைந்ததாகக் கருதப்படுகின்றனர். இவ்வாறு வீரர்கள் காளைகளின் வேகத்திற்கேற்ப சுமார் ஆயிரம்அடிதூரம் ஓடி வெற்றி பெறுகின்றனர். இவ்விளையாட்டில் வெற்றி பெற்றவர்களைப் பெண்களும் ஆண்களும் சேர்ந்து தூக்கி ஆடிப்பாடி மஞ்சள் குங்குமநீரைத் தெளித்து மார்பில் சந்தனம் பூசி நெற்றியில் திலகமிடுகின்றனர். இவ்விளையாட்டு பற்றிய செய்தி அண்ணா மாவட்ட ராசகம்பளத்து நாயக்கர் இன மக்களின் தாலாட்டுப்பாடலில் இடம்பெற்றுள்ளது.

உம்மாமெ சலக்எருது மலையேறி மேயுதுன்னு னொப்பன் சலக் எருது

ஆத்துப்பக்கம் மேயுதுன்னுநீ அவசுரமா வா பசுவே அருமமகன் பால்குடிக்க"[14]

இதனோடு மட்டுமல்லாமல் சற்று மாறுபட்ட சலக் எருது விளையாட்டும் நாட்டுப்புற மக்களால் விளையாடப்பட்டு வருகின்றது. "கரூர் மாவட்டம் தரகம்பட்டிக்கு அருகிலுள்ள கோடாங்கிபட்டியிலுள்ள பொம்மையன் சாமிக்குச் சலக் எருது நடத்தப்படுகின்றது. சிலநேரம் மந்தைநாயக்கர் இறந்ததனால் எடுத்த நடுகல்லுக்கும் 'சலக் எருது' விளையாட்டு நடைபெறகின்றது. இவ்விளையாட்டு பங்குனிமாதம் முதல் ஆடிமாதம் வரை நடைபெறுகின்றது. பொம்மையன்சாமிக்கு ஊர்மக்கள் முதல்நாள் கரகம் எடுக்கின்றனர். இரண்டாம்நாள் ஊர்மக்கள் பொம்மையன்சாமிக்குப் பொங்கல் வைக்கின்றனர். மூன்றாம்நாள் சலக் எருது என்னும் விளையாட்டு நடைபெறுகின்றது. சலக் எருது விளையாட்டில் கலந்துகொள்ளுவதற்கு வெளியூர்களிலிருந்து காளைகளும் காளைகளின்

உரிமையாளர்களும் முதல்நாளே சலக் எருது நடைபெறும் ஊருக்கு வந்து சேர்ந்துவிடுகின்றனர். மறுநாள் சலக் எருதில் கலந்துகொள்ளும் காளைகளுக்குச் சந்திப்புக் கொடுக்கும் சடங்கு மந்தைநாயக்கரால் (தலைமை நாயக்கர்) நடத்தப்படுகின்றது. 'சந்திப்பு' என்பது சலக் எருது விளையாட்டில் கலந்துகொள்ளும் காளைகள் அனைத்தையும் பொம்மையன்கோயில் முன்பாக நிறுத்தி மண்சட்டியில் தண்ணீர் எடுத்துக்கொண்டு மந்தைநாயக்கர் காளைகளின்மீது தெளிப்பதாகும். இதனையடுத்து சலக் எருது விளையாட்டில் கலந்துகொள்ளும் காளைகள் அனைத்தையும் அவைகளின் உரிமையாளர்கள் மேலாடை அணியாமல் தலையில் உருமால் கட்டிக்கொண்டு சலக் எருது விளையாட்டு நடைபெறும் இடத்திற்கு ஓட்டிச்செல்கின்றனர். பின்னர் அனைத்துக் காளைகளையும் ஓர் எல்லையிலிருந்து காளையின் உரிமையாளர்கள் அடித்து ஓட்டுகின்றனர். மறு எல்லையில் ஒரு மல்லுத்துணி விரிக்கப்பட்டிருக்கும். அதனை முதலில் கடந்த காளையே சலக் எருது விளையாட்டில் வெற்றிபெற்றதாகக் கருதப்படுகின்றது. சலக் எருது விளையாட்டில் வெற்றிபெற்ற காளைக்கு ஓர் எலுமிச்சைப்பழம் பரிசாகக் கிடைக்கின்றது. சலக் எருது விளையாட்டில் காளைகள் குறைந்தது இரண்டு கிலோ மீட்டர் தூரத்திலிருந்து நான்கு கிலோமீட்டர் தூரம் வரை ஓடி வெற்றிபெற வேண்டும்."[15] இக்கருத்துக்களின் மூலம் சலக் எருதில் காளைபெறும் வெற்றி காளையின் உரிமையாளருக்கும் உரிமையாளரின் ஊர்மக்களுக்கும் அவ்வட்டாரத்தில் பெருமையைத் தருகின்றது. மேலும் காளையின் கொம்புகளுக்கிடையே இளைஞன் கம்பினை வைத்து ஓடி வெற்றிபெறுவது அவனின் ஆற்றலையும் மதிநுட்பத்தையும் புலப்படுத்துகின்றது.

**சேசப்படியெடுத்தல்**

"சேசப்படியெடுத்தல் என்னும் விளையாட்டு கவுண்டர் இனத்தில் அல்லிகுலஅனுப்பக்கவுண்டர் என்னும் உட்பிரிவைச் சேர்ந்தவர்கள் தங்களின் குலதெய்வமாகிய 'ஒன்னம்மாள் தொட்டராயர்' என்னும் தெய்வத்திற்கு நடத்தப்படும் வழிபாட்டில் இடம்பெறுகின்றது. சேசப்படியெடுத்தல் என்னும் விளையாட்டிற்குப் பலஊர்களிலிருந்து காளைகளும் பசுக்களும் வரவழைக்கப்படுகின்றன. இவற்றை ஊரின் புறப்பகுதியில் சுமார் ஒருகிலோமீட்டர் தூரத்தில் நிறுத்தி விழாக்குழுவினர் ஓட்டிவிடுகின்றனர். இவற்றில் எந்தமாடு முதலாவதாக ஊரின் எல்லையை வந்தடைகின்றதோ அந்தமாடே வெற்றிபெற்றதாக விழாக்குழுவினர் அறிவிக்கின்றனர். சேசப்படியெடுத்தலில் வெற்றிபெற்ற மாடு தனிமனிதனின்

மாடாக இருந்தால் மாட்டின் உரிமையாளருக்கும் ஊரின்பொதுமாடாக இருந்தால் ஊர்த்தலைவருக்கும் விழாக்குழுவினர் பரிவட்டம் கட்டுகின்றனர். பின்னர் வெற்றிபெற்ற மாட்டுக்கு விழாக் குழுவினரின் சார்பில் எழுமிச்சைப்பழமாலை அணிவிக்கப்படுகின்றது. பின்னர் பூசாரி வெற்றிபெற்ற மாட்டுக்கு மஞ்சள்தண்ணீர் ஆரத்தியும் எடுக்கின்றார். பின்னர் விழாக்குழுவினர் வெற்றிபெற்ற மாட்டையும் அதற்குரியவரையும் கொட்டுமேளத்துடன் ஊர்வலமாக அழைத்து வருகின்றனர்."[16] இதன்மூலம் அல்லிகுலஅனுப்பக்கவுண்டர் என்னும் இனத்தவர்கள் தங்களின் உழவுத்தொழிலுக்கு உறுதுணையாக இருக்கின்ற மாடுகளையும் சேசப்படியெடுத்தல் என்னும் சடங்கில் ஈடுபடுத்தி வெற்றிபெறச்செய்து அதன்மூலம் தங்களுக்குப் பெருமையினைத் தேடிக்கொண்டுள்ளனர் என்பது புலனாகின்றது. இதுகாறும் கூறிய வற்றிலிருந்து சல்லிக்கட்டு நடத்துவதற்கு ஊர்ப்பெரியவர்கள் ஊர்க்கூட்டத்தைக் கூட்டுகின்றனர். இதில் சல்லிகட்டு நடத்தக்கூடாது என்று யாரேனும் எதிர்ப்புக்கொடுத்தால் ஊர்ப்பெரியவர்கள் சல்லிக்கட்டினை நடத்தமாட்டார்கள். மதுரை மாவட்டத்தில் பெரும்பாலான ஊர்களில் ஊர்த் தெய்வத்திடம் உத்தரவு கேட்டுப்பெற்ற பின்னரே ஊர்ப்பெரியவர்கள் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர். சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளை விழாக்குழுவினர் ஊரின் பொதுவிடத்தில் அமைந்துள்ள வாடியில்வைத்து அவிழ்த்துவிடுகின்றனர். சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளை மாடுபிடிவீரர்களில் யாரேனும் ஒருவன் மட்டும் அடக்க வேண்டும் என்பது சல்லிக்கட்டின் விதிமுறையாகும். சாட்டிய சல்லிக்கட்டு, சாட்டாத சல்லிக்கட்டு எனச் சல்லிக்கட்டினை இரண்டு வகைகளாக நாட்டுப்புறமக்கள் பகுத்துள்ளனர். திடல் சல்லிக்கட்டு விழாக்குழுவினரால் திட்டமிட்டு நடத்தப்படுகின்றது. மஞ்சுவிரட்டில் கலந்துகொள்ளும் காளைகளை வீரர்கள் பலர்சேர்ந்து அடக்கிக்கொள்ளலாம் என்பது மஞ்சுவிரட்டின் விதிமுறையாகும். காளை அதிகமான பயிற்சி பெற்றிருந்தால் மட்டுமே மஞ்சுவிரட்டில் வெற்றிபெறமுடிகின்றது. தமிழகம் முழுவதும் தைமாதம் இரண்டாம்நாள் உழவர்கள் தங்களுடைய காளைகளை மஞ்சுவிரட்டில் கலந்துகொள்ளச்செய்கின்றனர். எருதுகட்டு என்னும் விளையாட்டில் காளை கணமான வடத்தையும் இழுத்துக்கொண்டு வீரர்கள் தன்னை அடக்கமாலும் காத்து வெற்றி பெறுகின்றது. சலக் எருது என்னும் விளையாட்டில் காளையின் கொம்புகளுக்கிடையே கம்பினை வைத்து இளைஞன் ஓடி வெற்றி பெறுவதன் மூலம் அவனின் ஆற்றலும் மதிநுட்பமும் புலப்படுகின்றது. சேசப்படியெடுத்தல் என்னும் விளையாட்டில் வெற்றிபெற்ற காளைக்கும் அதன் உரிமையாளர்க்கும் விழாக்குழு மரியாதை செய்வதுடன் அவ்வட்டாரத்தில் பெருமையும் ஏற்படுகின்றது என்பது தெளிவாகின்றது.

## குறிப்புகள்

1. தகவல், மு.சப்பாணி, பனையூர், நாள் 23.7.1994.
2. தகவல், க.ராமையாநாயக்கர், கரடிக்கல், நாள் 16.4.1995.
3. தமிழ்ப்பேரகராதி, தொகுதி VI.ப.3583.
4. தகவல், ப.முத்திருளப்பபிள்ளை, பனையூர்,நாள் 23.7.1994.
5. தகவல், வை.லெட்சுமணன், பாரைப்பத்தி, நாள் 4.6.1994.
6. தகவல், மு.முத்துராமலிங்கம், அ.புதுப்பட்டி, நாள் 10.3.1995.
7. "1974—ஆம் ஆண்டு சென்னையில் அரசு ஆதரவுடன் ஸ்பிக் உர நிறுவனம் முதல்முறையாக அரங்கச் சல்லிக்கட்டினை நடத்தியது. 1981—ஆம் ஆண்டு மேதிங்கள் 24—ம் நாள் மதுரை பந்தயத்திடல் விளையாட்டுஅரங்கத்தில் ஊர்க்காவல் மனமகிழ் மன்றத்தினர் இவ்வரங்கச் சல்லிக்கட்டினை நடத்தினர்" ஆ.முத்தையா, மதுரை வட்டாரத்தில் சல்லிக்கட்டும் மஞ்சிவிரட்டும், அச்சிடப்படாத எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, ப.54.
8. கலைக்களஞ்சியம், தொகுதி IV ப.517—518.
9. தமிழ்ப்பேரகராதி, தொகுதி V ப.3011.
10. மேலது, ப.2101.
11. தகவல், இரா. முத்துக்கருப்பன் அம்பலம், முக்கம்பட்டி, நாள் 16.9.1998.
12. தகவல், சா.த. சுந்தரபாண்டியன், திருவாதவூர், நாள் 5.6.1994. 'எச்சில் தெளித்தல்' என்னும் சடங்கில் இடம்பெறும் பாடல் 'சொக்காணுாரணி' என்னும் ஊர்ப்பகுதியிலுள்ள நாட்டுப்புறமக்களால்.

   " பாட்டி பலுகப் பலுகப்
   பாப்பான பொங்கப் பொங்க
   நோயும் பிணியும் தெருவோடு போகப்
   பார்த்தவங்கண்ணு படீர்னு வெடிக்க" என்று பாடப்படுகின்றது.

13. தகவல், சு.சுப்பையா, அச்சம்பட்டி, நாள் 15.2.1995.
14. இரெ. முத்துமாறன், அணணா மாவட்ட நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் மக்கள் வாழ்வியல், முனைவர்ப்பட்ட ஆய்வேடு, ப.39.
15. தகவல், சீ.ராசு என்ற தம்மாநாயக்கர் கோடங்கிப்பட்டி நாள் 28.4.1998.
16. தகவல், ச. ஆறுமுகம், நல்லதாதநாயக்கன்பட்டி, நாள்.10.3.1996.

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளை மாடுபிடிவீரன் பிடிக்கும் பொழுது ஒருகையில் திமிலையும் மற்றொரு கையில் கொம்பினையும் பிடித்து அடக்கின்றான். 'மஞ்சிவிரட்டு' என்னும் விளையாட்டில் கலந்துகொள்ளும் காளைகளை மாடுபிடிவீரர்கள் பிடிக்கும்பொழுது பல பிடிமுறைகளைக் கையாள்கின்றனர் என்று ஆ.முத்தையா தன்னுடைய ஆய்வேட்டில் விளக்கியுள்ளார். "வால்பிடி, கொம்புப்பிடி, திமில்பிடி, சவ்வுப்பிடி, கழுத்துப்பிடி, காளையின் காலோடு தன் காலைப்பின்னிப்பிடிக்கும் கால் பின்னல்பிடி, வெளவால்பிடி போன்ற பிடிவகைகள் பொதுவாகக் குறிக்கத்தக்கவை ஆகும். காளையின் உருவத்திற்கேற்பவும் குணத்திற்கேற்பவும் வேகத்திற்கேற்பவும் பிடிகாரர்கள் பிடிக்கும் உத்திகளை வேறுபடுத்துவர்.

***சவ்வினைப்பற்றல்***

மஞ்விரட்டில் காளைகளைப் பிடிப்பவர்கள் ஓடுகின்ற காளையின் வாலைப்பிடிப்பர். அதன் பின்பகுதியில் ஓங்கி அடிப்பர். முனைப்பும் ரோசமும்உள்ள காளைஎன்றால் உடனே திரும்பிக்குத்த எத்தனிக்கும். எனவே, அதன் குணத்திற்கு ஏற்றபடித் திரும்பிக்குத்தாத காளைஎன்றால் உடனே அக்காளையின் இடதுபக்கமாகச்சென்று மேலேதாவி இடது கையால் விருதினைப் பற்றிக்கொண்டும் வலது கையால் பின்னங்கால் சவ்வினைப் பற்றிக்கொண்டு மேலேஇழுப்பர். அப்படி இழுத்தால் காளை இடதுகாலை எடுத்துவைத்து நகரமுடியாது. இப்படிச்செய்து சவ்வினை மேலே இழுக்கும்பொழுது காளைகள் கீழே விழுந்துவிடுவதும் உண்டு. உடனே, பிடிகாரர் தம் துணையாட்களின் உதவியோடு விருதுகளைக் கழற்றி எடுத்துவிடுவார்.

***இடப்பக்கப்பிடி***

பெரும்பாலும் பிடிகாரர்கள் காளையின் இடப்பக்கமே சென்று காளையைப் பிடிப்பர். இடப்பக்கம் ஓடினால் நடைவேகம் அதிகம் கிடைக்கும். காளையின் இடதுபக்கம் நின்றுபிடிக்கும்பொழுது பிடிகாரரின் வலதுகை காளையின் பின்னங்கால் சவ்வினைப்பிடித்திருக்க உடம்பு காளையின்மேல்கிடக்க இடதுகை விருதினைப் பிடித்திருக்கும்.

***வலப்பக்கப்பிடி***

காளையின் வலதுபக்கம் நின்றால் இடதுகை பின்னங்கால் சவ்வினைப் பிடித்திருக்க வலதுகை சலங்கையைப் பிடித்திருக்க அவ்வீரர் காளையின்மேல் விழுந்தவாறே செல்வர்." ஆ.முத்தையா, மதுரை வட்டாரத்தில் சல்லிக்கட்டும் மஞ்சுவிரட்டும், பக்.77—79.

வால்பிடி, கொம்புப்பிடி, நின்றுவிளையாடும் காளையைப் பிடித்தல், படுத்தவாறு பிடிக்கும்முறை போன்றவற்றை ஆ. முத்தையா தன்னுடைய ஆய்வேட்டில் விளக்கியுள்ளார்.

## சல்லிக்கட்டு–சார்ந்த நம்பிக்கைகள்

### நம்பிக்கைகள்

நம்பிக்கைகள் எப்பொழுது தோன்றின என்று திட்டவட்டமாகக் கூறஇயலாது. எனினும் மனிதன் இயற்கையின் தாக்கத்திற்கு மிகுதியாக ஆட்பட்டிருந்த காலகட்டத்தில் ஏற்பட்ட அறிவு வளர்ச்சியின் தொடக்க நிலையிலே நம்பிக்கைகள் தோன்றின எனலாம். நம்பிக்கைகள் அனைத்தும் முன்னோர்களால் உருவாக்கப்பட்டவை. அவை காலங்காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவிவந்துள்ளன. இவற்றை மக்கள் தங்கள் வாழ்க்கையினின்று பிரிக்கமுடியாத அளவுக்குப் பின்பற்றி வருகின்றனர்.

### நம்பிக்கை–சொல்விளக்கம்

நம்பிக்கை என்ற சொல்லுக்கு விசுவாசம், ஆணை நம்பியொப்பு விக்கப்பட்டது. உண்மை என்று அகராதி விளக்கம் தருகின்றது.'Faith' 'Belief' என்ற இரு ஆங்கிலச்சொற்களும் 'நம்பிக்கை' என்ற பொருளைக் குறிக்கின்றன. 'Faith' என்ற ஆங்கிலச்சொல் சமயஞ்சார்ந்த நம்பிக்கைகளைக் குறிக்கின்றது. 'Belief' என்ற ஆங்கிலச்சொல் சமயஞ்சார்ந்த நம்பிக்கைகளோடு சமூகவாழ்வியல் நம்பிக்கைகளையும் குறிக்கின்றது.

### நம்பிக்கை–அறிஞர்களின் கருத்து

நம்பிக்கைகள் எவ்வாறு உருவாகியுள்ளன என்பதனைப் பற்றி அறிஞர்கள்பலர் கருத்துக்களைக் கூறியுள்ளனர். "ஒரு பிரச்சினையின் மூலமாக நாம் தெரிந்துகொள்ளும் உண்மையை விரும்பி ஏற்றுக்கொள்ளுதலே பொதுவாக நம்பிக்கை எனப்படும். ஆனால், நுட்பமாகவும் சமயரீதியாகவும் பார்க்கும்பொழுது ஒருதனிமனிதனின் மனத்திண்மையையும் விருப்பத்தையும் பொறுத்தே இது அமைகின்றது"[2] என்று மேல்நாட்டு அறிஞர் கூறுகின்றார். "வாழ்வில் தமக்கு ஏற்படும் பல்வேறு அனுபவங்களினால் இவற்றைச் செய்தல் தகும், இவற்றைச் செய்தல் தகாது என்று பலகாலத்திற்கு முன்னர்ப்பிரித்துவைத்த செய்திகள் எல்லாம் காலப்போக்கில் காரணம் அறியாமலேயே நம்பிக்கைகளாகவும்,பழக்கவழக்கங்களாகவும் மாறுகின்றன."[3] "நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்சவுணர்வின் அடிப்படையாகத் தோன்றியதாகக் காட்சியளித்தாலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை

உணராதபொழுது மனதவாழ்வில் ஏற்படும் சிலநிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாதபொழுதும் மனித மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவைகளே நம்பிக்கைகளாக உருவாகின்றன."[4] தன்னுடைய சொந்தக் குணத்தை ஒருசமூகம் மாற்றும்போது அல்லது இழக்கும்போது அவற்றிற்கு ஏற்ப முன்பே அமைந்திருந்த நடைமுறைகள் நம்பிக்கைகளாய் எஞ்சுகின்றன"[5] என்று ஆறு, இராமநாதன் நம்பிக்கை பற்றி விளக்கம் கூறுகின்றார். மனிதன் செயல்களுக்கு ஆக்கம்தேடும் நிலையிலும் அதில் வெற்றிபெற வேண்டுமென்ற ஆவலிலும், சுற்றுப்புறச் சூழ்நிலைகளைக் கவனித்துத் தன்செயலின் வெற்றிதோல்விகளை முன்னரே நிச்சயிக்க முனைகின்ற அவாவினால் நம்பிக்கைகள் தோன்றுகின்றன. இக்கருத்துக்களின்படி மக்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட சிலநிகழ்ச்சிகளுக்குக் காரணத்தை அறியமுடியாதபொழுது அவர்களின் மனம் வேறுசிலவற்றின் மூலம் காரணத்தை அறிந்துகொள்கிறது. இதுவே நம்பிக்கையாகத் திகழ்கிறது. முன்னோர்கள் செய்துவந்த நடைமுறைப் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளாக உருவாகியுள்ளன என்பது தெளிவாகின்றது.

**நம்பிக்கையின் வகைகள்**

1. இறைநம்பிக்கை
2. ஊழ்பற்றிய நம்பிக்கை
3. சோதிடத்தில் நம்பிக்கை
4. சகுனத்தில் நம்பிக்கை
5. தன்னம்பிக்கை
6. சடங்கு நம்பிக்கை
7. கனவு நம்பிக்கை
8. பிறநம்பிக்கைகள்

என எட்டு வகைகளாக வகைப்படுத்தலாம். இவ்வெட்டுவகையான நம்பிக்கைகளில் இறைநம்பிக்கை, சோதிட நம்பிக்கை, சகுனத்தில் நம்பிக்கை, சடங்கு நம்பிக்கை ஆகியன மட்டும் சல்லிக்கட்டோடு தொடர்பு பெற்றுள்ளன.

**சல்லிக்கட்டு சார்ந்த நம்பிக்கைகள்**

களஆய்வில் திரட்டிய தரவுகளின் அடிப்படையில் சல்லிக்கட்டு சார்ந்த நம்பிக்கைகள் நான்கு வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

1. சல்லிக்கட்டுநடத்துபவர்களின் நம்பிக்கைகள்
2. காளைவளர்ப்பவர்களின் நம்பிக்கைகள்
3. மாடுபிடிவீரர்களின் நம்பிக்கைகள்
4. பொதுமக்களின் நம்பிக்கைகள்

**சல்லிக்கட்டுநடத்துபவர்களின் நம்பிக்கைகள்**

சல்லிக்கட்டுநடத்துபவர்கள் சல்லிக்கட்டு நடைபெறுவதற்கு முன்னர் நம்பிக்கையினடிப்படையில் சிலசெயல்களைச் செய்கின்றனர். சல்லிக்கட்டு விழா நடத்துவதற்குப் பல ஊர்களில் விழாக்குழுவினரால் 'வாடி' நிரந்தரமாகக் கட்டப்பட்டிருக்கிறது. சிலஊர்களில் விழாக்குழுவினரால் வாடி தற்காலிகமாகக் கட்டப்பட்டு சல்லிக்கட்டுவிழா நடைபெறுகிறது.

"விழாக்குழுவினர் தற்காலிகமாக வாடிகட்டும்பொழுது கோவில் பூசாரி வாடிகட்டும் இடத்தில் சூடம்ஏற்றிப் பூசை செய்கின்றார். பின்னர் அங்கு ஓர் எலுமிச்சைப்பழத்தைப் பூசாரி இரண்டாக அறுத்து அதில் குங்குமத்தைத் தடவிப் பிழ்ந்துவிடுகின்றார். குங்குமம் தடவப்பட்ட எலுமிச்சைப்பழத்தைப் பிழிவதினால் சிவப்புச்சாறு வெளியேறுகின்றது. இவ்வாறு செய்வது இறைவனுக்கு ரத்தப்பலி கொடுத்தற்குச் சமம் என்று விழாக்குழுவினரும் ஊர்மக்களும் நம்புகின்றனர்."[6] இவ்வாறு செய்வதனால் எந்தத்தீயசெயல்களும் ஏற்படாமல் சல்லிக்கட்டுவிழா சிறப்பாக நடைபெறும் என்று மக்கள் நம்புகின்றனர்.

**காப்புக்கட்டுதல்**

"சல்லிக்கட்டு நடைபெறும் ஊர்களில் விழாக்குழுவினர் வைக்கோலால் தயாரிக்கப்பட்ட பிரியில் அல்லது கயிற்றில் வேப்ப இலையைக் கட்டிவைத்திருப்பார்கள். பின்னர் இதனைச் சல்லிக்கட்டு நடக்கும் முதல்நாள் வாடிவாசலின் முன்புறமும் ஊர்வீதிகளிலும் கட்டிவிடுகின்றனர். இவ்வாறு செய்வதே காப்புக்கட்டுதலாகும்."[7] ஊர்த்தெய்வங்கள் ஊர்மக்களுக்கு எந்தத்தீங்கும் ஏற்படாமல் காத்துக்கொள்ளும் என்ற நம்பிக்கையில் 'காப்புக்கட்டுதல்' என்னும் சடங்கினை ஊர்மக்கள் நடத்துகின்றனர் இவ்வாறு 'காப்புக்கட்டுதல்' என்னும் சடங்கும் அதனுடன் தொடர்புடைய ஒரு விழாவோ அல்லது ஊர்த்தெய்வங்களின் விழாவோ நடைபெறவுள்ளது என்பதை அறிவிப்பதாக அமைகின்றது. இத்திருவிழாவினை ஒட்டி நடைபெறும் சல்லிக்கட்டு நிகழ்ச்சியினைக் குறியீட்டு நிலையில் 'காப்புக்கட்டுதல்' என்ற

சடங்கு அவ்வட்டார மக்களுக்குத் தெரிவிக்கின்றது. அதாவது அப்பகுதி மக்கள் காப்புக்கட்டியிருக்கும் காலத்தினை வைத்துக்கொண்டு அவ்வூரில் என்னவிழா நடைபெறஉள்ளது என்பதை உணர்ந்து கொள்வர். மேலும் 'காப்புக்கட்டுவதால்' ஊர்மக்களுக்குத் திடீர் இறப்பு, அம்மைநோய் பரவுதல், தீ விபத்து போன்ற தீமைகள் ஏற்படாமல் ஊர்த்தெய்வங்கள் காத்துக்கொள்ளும் என்றும் நம்பப்படுகின்றது. குறிப்பாகச் சல்லிக்கட்டுவிழா முடியும்வரையிலாவது ஊர்த்தெய்வங்கள் காத்துக்கொள்ளும் என்ற நம்பிக்கையில் விழாக்குழுவினர் காப்புக் கட்டியிருக்கின்றனர் என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

*பச்சை மூங்கில்*

சல்லிக்கட்டு நடைபெறுவதற்குச் சிறிதுநேரத்திற்கு முன்னர் ஊர்ப்பொதுமக்கள் சல்லிக்கட்டு விழாவில் பரிசாகக் கொடுக்கப்படவிருக்கும்வேட்டி துண்டுகளைச் சிறு சிறு கட்டுக்களாகப் பகுத்து எடுத்துக்கொண்டு ஊர்த்தெய்வங்களை வணங்கச் செல்கின்றனர். இவ்வாறு செல்லும்பொழுது இளைஞர்கள் தங்கள் கையில் மூன்று அங்குலச் சுற்றளவும் நான்கடி நீளமும் கொண்ட மூங்கில் கம்புகளை வைத்துக் கொண்டு ஆடியவாறு செல்கின்றனர். சிலஊர்களில் இளைஞர்கள் ஆடியவாறு செல்லும்பொழுது கையில் வைத்திருக்கும் கம்புகள் ஒரு அங்குலச் சுற்றளவும் நான்கடி நீளமும் கொண்ட பச்சை மூங்கில்களாக உள்ளன. இவ்வூர்களில் பச்சை மூங்கில் விழா எடுக்கும் தெய்வத்திற்கு உகந்தது என்பதற்காகப் பயன்படுத்தப்படுகின்றது. என விழாக்குழுவினரும் ஊர்மக்களும் கூறுகின்றனர்.

'திருமங்கலம்' என்னும் நகரத்திலிருந்து 8 கி.மீ. தூரத்திலுள்ள கரடிக்கல் என்ற ஊரிலும் 'உசிலம்பட்டி' என்னும் நகரத்திலிருந்து 18 கி.மீ. தூரத்தில் உள்ள 'எழுமலை' என்ற ஊரிலும் பச்சை மூங்கில் 'பெருமாள்சாமிக்கு' உகந்தது என்று அவ்வூர் மக்களும் விழாக்குழுவினரும் கூறுகின்றனர். 'செக்காணூரணி' என்னும் ஊருக்கு அருகிலுள்ள 'கீழப்பட்டி' என்ற ஊரில் 'காமாட்சியம்மன்'' பிறந்தது மூங்கில்காடு, அதனால் காமாட்சியம்மனுக்கு மூங்கில் உகந்தது என்றும் அவ்வூர்மக்களும் விழாக்குழுவினரும் நம்புகின்றனர். மேலும் 'திருமங்கலம்' என்னும் நகரத்திற்கு அருகிலுள்ள நடுவக்கோட்டை என்ற ஊரில் பச்சை மூங்கில் சல்லிக்கட்டுவிழாவில் இடம்பெறுகின்றது. அவ்வூரில் மக்களிடமும் விழாக்குழுவினரிடமும் எதற்காகச் சல்லிக்கட்டு விழாவில் பச்சை மூங்கில் பயன்படுத்தப்படுகிறது எனக் காரணம்

கேட்டதற்கு மக்கள் எங்கள் முன்னோர்கள் செய்துவந்த சடங்குகளில் இதுவும் ஒன்று. எனவே, நாங்கள் இதனைச் செய்துவருகின்றோம் எனக்கூறுகின்றனர். மதுரை நகருக்கு அருகிலுள்ள சோழவந்தான் என்னும் ஊரிலிருந்து சுமார் 5 கி.மீ. தூரத்திலுள்ள விக்கிரமங்கலம் என்னும் ஊரில் 'சல்லிக்கட்டு'விழா நடைபெறும் பொழுது வாடியின் முன்புறத்தின் பச்சை மூங்கில் கம்புகளை விழாக்குழுவினர் ஊன்றி விடுகின்றனர். இவ்விரு பச்சை மூங்கில் கம்புகளின் நுனிகள் ஒன்றோடு ஒன்று ஒட்டும்வரை ஊர்மக்களும் விழாக்குழுவினரும் சல்லிக்கட்டு நடத்தாமல் காத்திருக்கின்றனர். பச்சை மூங்கில் கம்புகளின் நுனிகள் ஒட்டியவுடன் சல்லிக்கட்டுவிழா தொடங்குகின்றது. பச்சை மூங்கில் கம்புகளின் நுனிகள் ஒன்றோடு ஒன்று ஒட்டுவது சல்லிக்கட்டு நடத்துவதற்கு ஊர்த்தெய்வம் ஊர்மக்களுக்கு உத்தரவு கொடுத்தள்ளது என அவ்வூர்மக்கள் நம்புகின்றனர். இந்நம்பிக்கை அவ்வூர் மக்களின் மரபுவழிப்பட்ட நம்பிக்கையாகக் காணப்படுகின்றது. நாட்டுப்புறக் கதைப்பாடல் ஒன்றும் இந்நம்பிக்கையோடு தொடர்புடையதாகவுள்ளது.

"மூங்கிலடி மூடதிலே முளைத்தெழுந்த தானுலிங்கம்
யெங்க யெல்லாம் னாநலைந்தேன் யென்னுடைய பெருமானே
ஆண்மதலை தாருமய்யா அச்சதரே பச்சமாலே"[8]

என்று 'வன்னியடிமறவன்கதை' என்னும் நாட்டுப்புறக் கதைப்பாடல் கூறுகின்றது.

இவ்வரிகள் தெய்வங்கள் மூங்கில்தூரில் தோன்றுகின்றன என்றும் திருமாலின் நிறம் பச்சை என்ற அடிப்படையிலேயே நாட்டுப்புறமக்கள் தாங்கள் வழிபடும் ஊர்த்தெய்வங்களும் மூங்கில் தூரில் பிறந்தன என்று நம்பியிருக்கின்றனர். பின்னர் இதன் உண்மைக்காரணம் மறைக்கப்பட்டு பச்சை மூங்கில் தெய்வங்களுக்கு உகந்தது எனச் 'சல்லிக்கட்டு' நடத்தப்படும் சிலஊர்களிலுள்ளமக்கள் சொல்லிவருகின்றனர் என்பது தெளிவாகின்றது மேலும் காமாட்சியம்மன் பிறந்தது மூங்கில்காடு என்பதும் அறியமுடிகின்றது. எனவே, ஊர்த்தெய்வ வழிப்பாட்டில் பச்சை மூங்கில் கம்புகளைத் தூக்கிக்கொண்டு செல்வது ஊர்த்தெய்வத்தைத் தூக்கிச்செல்வதற்குச்சமம் என விழாக்குழுவினரும் ஊர்மக்களும் நம்புகின்றனர் என்பதும் தெளிவாகின்றது.

சல்லிக்கட்டு விழாவில் மாடுபிடிவீரன் சல்லிக்கட்டுக் காளையால் காயம்பட்டு இறந்துவிடுவதற்கு அதிகவாய்ப்பிருக்கின்றது. இவ்வாறு

மாடுபிடிவீரன் இறந்து கொண்டிருந்தால் படிப்படியாக மனிதஇனம் முழுவதும் அழிந்துவிடுமோ என்ற சிந்தனை நாட்டுப்புறமக்களுக்குத் தோன்றிய சமயத்தில் வெட்டவெட்டத் தளிர்க்கும் மூங்கிலைப் போன்று மனிதஇனமும் ஒருவன் மறைவிற்குப் பின் இன்னொருவன் தோன்றுவான் என்ற நம்பிக்கையில் சல்லிக்கட்டு விழாவில் பச்சை மூங்கில் ஊர்மக்களால் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதப்படுகின்றது. மேலும் நாட்டுப்புறமக்கள் பச்சை மூங்கிலை மங்கலப்பொருளாகக் கருதி சல்லிக்கட்டு விழாவில் வளமை நோக்கில் பயன்படுத்துகின்றனர் என்பது புலனாகிறது.

**தீட்டுக்கழித்தல்**

"சல்லிக்கட்டு நடைபெறும் முதல்நாள் எழுமலை என்னும் ஊரில் விழாக்குழுவினரால் ஊர்த்தீட்டுக் கழிக்கப்படுகின்றது. கோமியம், பால், சாணம், அறுகம்புல், நாணலின் சாம்பல் ஆகியவற்றை விழாக்குழுவினர் பாத்திரத்திலிட்டு ஒன்றாகக் கலந்து எடுத்துக்கொண்டு ஊரின் நான்கு எல்லைப்பகுதிகளிலும் வாடிவாசலின் நான்குபுறங்களிலும் தெளிக்கின்றனர்."[9] தனிமனிதனின் வீட்டிலுள்ள தீட்டுக்கள் தீட்டுக் காலம் முடிந்தவுடன் வீட்டைவிட்டு வெளியேற்றப்படுகின்றன. ஆனால், அவை ஊர்த்தீட்டாக மாறி ஊரைவிட்டு வெளியேறவில்லை என நம்பி விழா எடுக்கும்பொழுது ஊர்த்தீட்டைக் கழிக்கவேண்டும் என்ற நோக்கத்தில் கோமியம்,பால், சாணம், அறுகம்புல், நாணலின் சாம்பல் ஆகியவற்றை விழாக்குழுவினர் ஒன்றாகக் கலந்து தெளிக்கின்றனர். இவ்வாறு தெளிப்பதனால் ஊர்த்தீட்டு விலகிவிடும் என ஊர்மக்களும் விழாக்குழுவினரும் நம்புகின்றனர். மற்றும் நாட்டுப்புற நம்பிக்கை பற்றிய செய்தி ஒன்றும் இந்நம்பிக்கையோடு தொடர்புடையதாக உள்ளது. "வீட்டின் தூய்மையான ஓரிடத்தில் வட்டவடிவமாகக் கோடு வரைவர். அவ்வட்டத்தைச் சாணத்தால் மெழுகுவர். அதற்குள் பூசாரி நின்றுகொண்டு தருப்பைப் பொம்மையைத் தீயிட்டுக் கருக்குவர். தருப்பைச் சாம்பலோடு கோமியம், பால், எள் இவற்றைச் சேர்த்துப் பூசாரி கலக்குவார். இக்கலவை நீரை நான்குபுறமும் வெற்றிலைகளில் ஊற்றி இறப்புத் தீட்டுக்குரியவர்கள் "இதோடு இறைவனடிசேர்" என்று கூறி எறிவார்கள். இவ்வாறு செய்வதன் நோக்கம் இறந்தவர்கள் கைலாசம் செல்வதற்கும் விமோசனம் கிடைப்பதற்கும் வழிகிடைக்கும் என்ற நம்பிக்கை எனலாம்."[10]இந்நம்பிக்கையின்படியே எழுமலை என்னும் ஊரில் நாணலின் சாம்பல், அறுகம்புல், சாணம், கோமியம், பால் ஆகியவற்றை விழாக்குழுவினர் ஒன்றாகக் கலந்து ஊரின் நான்கு எல்லைப் பகுதிகளிலும்

வாடிவாசலின் நான்கு புறங்களிலும் விழாக்குழுவினர் தெளித்து ஊர்த்தீட்டை விலக்குகின்றனர் என்பது புலனாகின்றது. மேலும் "எழுமலை என்னும் ஊரில் வாடிவாசலின் முன் சல்லிக்கட்டு தொடங்கும் சற்றுமுன்பு பூசாரி ஒரு பூசணிக்காயைச் சமீன்தாரின் தலையைச் சுற்றி விட்டுப்பின்பு உடைத்து விடுகின்றனர்."[11] இவ்வாறு செய்வதன் மூலம் சமீன்தார்மீதும் விழாக்குழுவினர்மீதும் ஏற்பட்டுள்ள கண்ணேறு, பூசணிக்காய் உடைந்து சிதறியதுபோல் சிதறிவிடும் என்று விழாக்குழுவினர் நம்புகின்றனர்.

### காளைவளர்ப்போரின் நம்பிக்கைகள்

சல்லிக்கட்டுக் காளைவளர்ப்பவர்கள் பல நம்பிக்கைகளைக் கடைப்பிடிக்கின்றனர். "காளையின் உரிமையாளர்கள் தங்களுடைய காளையைச் சல்லிக்கட்டுக்குக் கொண்டுசெல்லும் முன்னர்க் குலதெய்வத்தை வணங்கிச் சூடம் ஏற்றிக் காளையின் முன்பு காண்பித்துவிட்டுக் காளைக்குத் திருநீறும் பூசிக் காளையைச் சல்லிக்கட்டுக்குக் கொண்டுசெல்கின்றனர். இவ்வாறு குலதெய்வத்தை வணங்கிவிட்டுக் காளையைச் சல்லிக்கட்டுக்குக் கொண்டுசெல்வதால் காளை மாடுபிடிவீரனிடம் பிடிபடாமல் வெற்றி பெற்றுவிடும்"[12] எனக் காளையின் உரிமையாளர்கள் நம்புகின்றனர். குலதெய்வத்தின் வலிமை காளைக்குவந்து காளை சல்லிக்கட்டில் வெற்றிபெறுகின்றது என்ற நம்பிக்கையின் அடிப்படையில் குலதெய்வத்தை வணங்கிச் சல்லிக்கட்டிற்குக் காளையைக் கொண்டுசெல்கின்றனர் என்பது தெளிவாகின்றது. மேலும் "காளை வளர்ப்பவர்களில் ஒருசிலர் தங்களின் காளை சல்லிக்கட்டில் தொடர்ந்து மாடுபிடிவீரனிடம் பிடிபட்டுக்கொண்டிருந்தால் ஊர்த்தெய்வத்தின் மீது படிந்திருக்கும் அழுக்கினை (பக்கு) எடுத்துக் காளையின் மீது போட்டுவிட்டுச் சல்லிக்கட்டிற்குக் கொண்டுசெல்கின்றனர்."[13] இவ்வாறு செய்வதனால் ஊர்த்தெய்வத்தின் வலிமை காளைக்குக் கிடைக்கும் என்றும், இதனால் காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனிடம் பிடிபடாமல் வெற்றிபெற்றுவிடும் என்றும் காளையின் உரிமையாளர்கள் நம்புகின்றனர்.

### கோயில்காளை

ஊர்த்தெய்வங்களுக்குக் காளையை நேர்ந்துவிடுவது மதுரை மாவட்டத்தில் நாட்டுப்புறமக்களின் மரபாக விளங்கி வருகின்றது. தெய்வங்களுக்கு நேர்ந்துவிடப்பட்டகாளை கட்டுப்பாடின்றித் தன்னிச்சையாக மேய்ந்து வளரும் இக்காளையினை ஊர்மக்கள் தெய்வமாகக் கருதி 'கோயில்காளை' எனக் கூறுகின்றனர். கோயில் காளையில் முனைப்பான

காளையை (சுறுசுறுப்புமிக்க காளை) ஒருசிலஊரார் சல்லிக்கட்டிற்குக் கொண்டுசெல்கின்றனர். "சல்லிக்கட்டில் கலந்துகொண்ட கோயில்காளைக்குப் பரிசாகக் கிடைத்த வேட்டி துண்டுகளை விற்றுத் தெய்வத்திற்குக் காணிக்கை செலுத்தவேண்டும். இவ்வாறு செய்யாமல் கோயில்காளைக்குக் கிடைத்த வேட்டி துண்டுகளை மற்றவர்கள் பயன்படுத்தினால் தெய்வக்குறை ஏற்படும் என்ற நம்பிக்கை காளைவளர்ப்பவரிடம் இருந்து வருகின்றது. மேலும் "ஊர்த்தெய்வங்களுக்குத் தவிர ஒருசிலர் தங்களின் குலதெய்வத்திற்கும் காளை வளர்த்துச் சல்லிக்கட்டிற்குக் கொண்டுசெல்கின்றனர். இக்காளைக்குச் சல்லிக்கட்டில் பரிசாகக் கிடைத்த வேட்டி, துண்டு போன்ற பரிசுகளைக் காளையின் உரிமையாளர்களின் குடும்பத்தினரும் தங்கள் குலத்தெய்வத்திற்குரிய பங்காளிகளும் பயன்படுத்திக்கொள்ளலாம். மீதமுள்ள பொருள்களை விற்றுக் குலதெய்வத்திற்குக் காணிக்கை செலுத்தவேண்டும். இவ்வாறு செய்யவில்லையெனில் தெய்வக்குறை ஏற்படும் என்று காளையின் உரிமையாளர்கள் நம்புகின்றனர்."[15] இக்கருத்துக்களின்படி கோயில்காளைக்குச் சல்லிக்கட்டில் கிடைத்த பரிசுகள் அக்காளை நேர்ந்துவிடப்பட்ட தெய்வத்திற்குச் சேரவேண்டியது என்றும் இதனை விற்றுப்பணத்தைத் தெய்வத்திற்குக் காணிக்கையாகச் செலுத்த வேண்டும் என்றும் இவ்வாறு காளைவளர்ப்போர் செய்யவில்லையெனில் காளைவளர்ப்பவரின் குடும்பத்திற்குத் தெய்வத்தின் சீற்றத்தால் தீங்குஏற்படும் என்பதும் தெளிவாகிறது.

**காளை வளர்த்தல்**

காளைவளர்ப்பவர்களில் ஒருசிலர் "தங்களின் முன்னோர்கள் காலத்திலிருந்து வீட்டில் சல்லிக்கட்டுக்காளை வளர்த்து வருகின்றோம் எனவும் சல்லிக்கட்டுக் காளையை வளர்த்துச் சல்லிக்கட்டில் காளையை நாங்கள் அவிழ்த்து விடவில்லையெனில் தங்களின் குடும்பத்தில் இழப்பு ஏற்படுகின்றது. மேலும் தங்களின் குடும்பம் விருத்திஅடையவேண்டும் என்பதற்காகவும் நாங்கள் காளை வளர்க்கின்றோம் எனவும் கூறுகின்றனர்."[16] இக்கருத்தின் அடிப்படையில் காளை வளர்த்து சல்லிக்கட்டில் அவிழ்த்துவிட வேண்டும் எனவும் இவ்வாறு செய்வதனால் தங்களின் குடும்பம் விருத்திஅடையும் என்ற நம்பிக்கையிலும் மக்கள் காளை வளர்த்துவருகின்றனர் என்பது தெளிவாகின்றது.

**வசிய மை முறித்தல்**

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளில் மிகவும் திறமைவாய்ந்த காளைக்கு மாடுபிடிவீரர்கள் வசிய மை

வைத்துவிடுகின்றனர். பிடிகாரர்களால் வசிய மை வைக்கப்பட்டுள்ள காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனைக் குத்திக் காயப்படுத்தாது என்ற நம்பிக்கை பரவலாகக் காளைவளர்ப்பவர்களிடம் காணப்படுகின்றது. பல சல்லிக்கட்டில் வெற்றிபெற்றுச் சல்லிக்கட்டு வட்டத்தில் பெயர்பெற்று விளங்கும் காளைகளின் உரிமையாளர்கள் தங்களின் காளைக்குப் பிடிகாரர்கள் வசிய மை வைத்திருப்பார்கள் என எண்ணுகின்றனர்.

"காளைகளின் உரிமையாளர்களில் ஒருசிலர் தங்களின் காளைக்குப் பிடிகாரர்களில் யாரேனும் வசிய மை வைத்திருப்பார்கள் என எண்ணித் தங்களுடைய காளையை வாடிவாசலிற்குக் கொண்டு செல்லும்பொழுது காளையின்மீது சிறுநீர் தெளிக்கின்றனர். காளையின் மீது தெளிக்கப்படும் சிறுநீர், மனிதச் சிறுநீராகவோ அல்லது காளையின் சிறுநீராகவோ இருக்கும்."[16] இவ்வாறு சிறுநீர் தெளிப்பதனால் காளையின் மீது பிடிகாரர்கள் வசிய மை தடவியிருந்தால் முறிவு ஏற்பட்டுவிடும் என்று காளையின் உரிமையாளர்கள் நம்புகின்றனர்.

### மாடுபிடிவீரனின் நம்பிக்கைகள்

மாடுபிடிவீரனிடம் சிலநம்பிக்கைகள் காணப்படுகின்றன. அவற்றுள் சில சராசரி மனிதவாழ்க்கையில் மனிதர்கள் கடைப்பிடிக்கின்ற நம்பிக்கைகளாக இருக்கின்றன.

### பல்லி நிமித்தம்

பல்லி ஒலித்தலை நிமித்தமாகக் கருதும் பழக்கம் சங்ககாலம் முதல் இன்றுவரை தமிழகமக்களிடம் இருந்துவருகின்றது. சங்க இலக்கியத்தில் பல்லியின்ஒலி நன்னிமித்தமாகக் கூறப்படுகின்றது. நாட்டுப்புறமக்கள் பல்லியைக் 'கெவுளி' என்று கூறுகின்றனர். 'கெவுளி' ஒலித்தலை நாட்டுப்புறமக்கள் நிமித்தமாகக் கருதிவருகின்றனர்.

"மணியோர்த்தன்ன தெண்குரற்
கணிவாய்ப்பல்லி கரடிறந்தோரே" (அகம். பா.15:14—15).

"நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்
நிரைநிலை நடுகள் பொருத்தி இமையாது
இரை நசைக் கிடந்த முதுவாய்ப் பல்லி" (அகம்.பா.387:14—16).

என்ற இலக்கிய வரிகளின் மூலம் பல்லியின் ஒலியினை அக்காலமக்கள் நிமித்தமாகக் கருதியிருந்தது புலனாகின்றது. இந்த நம்பிக்கையின் அடிப்படையில் மாடுபிடிவீரர்களில் சிலர் சல்லிக்கட்டிற்குச் செல்லும்

முன்பு தான் வசிக்கின்ற ஊரிலுள்ள ஊர்த்தெய்வத்தை வணங்கிச் சகுனம் கேட்கின்றனர். அப்பொழுது "பல்லி இடம்கொடுத்து வலம் அடித்தால் நல்லசகுனமாகக் கருதப்படுகின்றனர்"[18] பல்லி இடம் கொடுத்து வலம் அடித்தல் என்பது இடப்புறம் நின்று ஒரு பல்லி கத்தினால் அதனை எதிர்த்து வலப்புறம் ஒருபல்லி கத்தினால் சல்லிக்கட்டில் மாடுபிடிக்கும்பொழுது தனக்குத் தீமை ஏற்படாமல் நன்மை பயக்கும் என மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர்.

## பெண் தலைமுடியினை விரித்தபடியே எதிர்ப்படுதல்

ஒருவரோ அல்லது பலரோடு சேர்ந்தோ ஏதாவது ஒருகாரியத்திற்கு வீட்டைவிட்டு வெளியே செல்லும்பொழுது பெண் தன்னுடைய தலைமுடியினை விரித்தபடியே எதிரே வந்தால் செய்யவிருக்கும் காரியம் தடைப்படும் என்ற நம்பிக்கை நாட்டுப்புறமக்களிடம் பரவலாகக் காணப்படுகின்றது.

"வளரத் தொடினும் வெளபு திரிந்து
விளரியுறுதகுந் தீந்தொடை நினையாத
தளரு நெஞ்சந் தலைஇ மனையோள்
ஊருங் கூந்தனோக்கிக் களர" (புறம். பா.260:1—4)

என்ற புறநானூற்றுப் பாடல்வரிகள் பெண் தன்தலைமுடியினை விரித்தபடியே எதிர்வருதலைப் பார்த்தவர்களுக்குத் தீயசகுனமாகக் கூறுகின்றது. இதனை மையமாகக்கொண்டே மாடுபிடிவீரர்களும் சல்லிக்கட்டில் மாடுபிடிக்கச் செல்லும்பொழுது பெண் தன்தலைமுடியினை விரித்தப்படியே தன் எதிரில்வந்தால் தீயசகுனமாகக் கருதுகின்றனர். "மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டில் மாடுபிடிக்க வீட்டைவிட்டுச் செல்லும்பொழுது பெண் தன்னுடைய கூந்தலை விரித்தபடியே எதிரில் வந்தால் மாடுபிடிப்பதில் தனக்குத் தீங்குநேர்ந்துவிடும் என்று நினைத்துக் கொண்டு சல்லிக்கட்டிற்குச்சென்று மாடுபிடிப்பதனைத் தவிர்க்கின்றனர்."[19] பெண்ணுக்கு அவலம் ஏற்படும்பொழுதுதான் தலைமுடி விரித்துக் காணப்படுவாள். எனவே, அவளுக்கு ஏற்பட்ட அவலநிலை அவளைப் பார்த்ததனால் தனக்கும் ஏற்பட்டுவிடும் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். இந்நம்பிக்கையினை மாடுபிடிவீரர்களும் கடைப்பிடித்து வருகின்றனர்.

### மூன்றுபேர் சேர்ந்து செல்லுதல்

நாட்டுப்புறமக்கள் ஏதாவதுஒரு காரியத்திற்கு வீட்டைவிட்டு வெளியே செல்லும்பொழுது மூன்றுபேர் சேர்ந்து செல்லமாட்டார்கள். மூன்றுபேர் சேர்ந்துசென்று ஏதாவதுஒரு காரியம் செய்தால் அக்காரியம் தடைப்படும் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். இதனை மையமாகக் கொண்டே மாடுபிடிவீரர்களும் தீமைபயக்கும் எனக் கருதுகின்றனர். "மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டில் மாடுபிடிக்க வீட்டைவிட்டு வெளியே செல்லும்பொழுது மூன்றுபேர் சேர்ந்து செல்லமாட்டார்கள். மூன்றுபேர் சேர்ந்து சல்லிக்கட்டில் மாடுபிடிக்கச் சென்றால் மாடுபிடிப்பதில் தங்களுக்குத் தீங்குநேர்ந்துவிடும்"[20] என்று மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர். மூன்றுபேர் சேர்ந்துபோனால் தங்களை மூதேவி பிடித்துக்கொள்ளும் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். இந்நம்பிக்கையினை மாடுபிடிவீரர்களும் கடைப்பிடித்து வருகின்றனர் என்பது தெளிவாகின்றது.

### வசியம் செய்தல்

மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளைப் பிடிக்கும்பொழுது தங்களைக் காளைகள் குத்தாமல் இருக்க மந்திரவாதிகளிடம்சென்று வசியம் செய்துகொள்கின்றனர். 'வசியம்' என்ற சொல்லுக்கு "வசப்படுகை, காதல், வசீகரணம், அஷ்டகருமங்களுள் மக்களையும், சுரபூதகிரகம், ஆவேசம் முதலியவற்றையும் வசஞ்செய்யும்வித்தை"[21] என அகராதி பொருள்கூறுகின்றது. மேலும் 'வசியம்' என்ற சொல் "கைவசம், மணப்பொருத்தம் பத்தினொன்று, வசமாதல், அது கட்ட கருமத்தொன்று"[22] என்ற பொருளையும் குறிக்கின்றது. நாட்டுப்புறமக்களில் ஒருசிலரிடம் பெண்ணை ஆணுக்கும் ஆணைப் பெண்ணுக்கும் வசியம்செய்து மணம் முடிக்கும் வழக்கம் இருந்து வருகிறது 'அஷ்டகருமங்களுள் மக்களையும் சுரபூதகிரகம் ஆவேசம் முதலியவற்றையும் வசஞ்செய்யும் வித்தை' என்று வசியத்திற்கு அகராதி விளக்கம் தந்துள்ளதின் அடிப்படையில் நோக்கும்பொழுது விலங்குகளையும் மனிதன் வசியம்செய்யமுடியும் என்பது தெளிவாகின்றது. இதனடிப்படையிலேயே "மாடுபிடிவீரர்களில் ஒருசிலர் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளைப் பிடிக்கும்பொழுது காளைகள் தங்களைக் குத்திக் காயப்படுத்தாமல் இருப்பதற்கு மந்திரவாதிகளிடம் சென்று காளைகள் தனக்கு வசியமாகுமாறு செய்து தாயத்து வாங்கிக் கட்டிக்கொள்கின்றனர்."[23] இவ்வாறு செய்வதனால் காளையைச் சல்லிக்கட்டில் தான் பிடிக்கும்பொழுது

தன்னைக் குத்திக்காயப்படுத்தாது என மாடுபிடிவீரர்களில் ஒருசிலர் நம்புகின்றனர். "சல்லிக்கட்டில் காளைகள் தன்னைக் குத்தாதவாறு வசியம் செய்துள்ள மாடுபிடிவீரன் 'சல்லிக்கட்டு நடைபெறும் ஊருக்குச் சென்றிருக்கும்பொழுது அவ்வூரில் யார்வீட்டிலும் உணவோ, தண்ணீரோ சாப்பிடுவதில்லை. ஏனெனில் தான் சாப்பிடும்வீடு தீட்டுக்குரியவீடாக இருந்தால் காளைகளுக்குத் தான் வைத்துள்ள வசியம் முறிந்துவிடும்"[24] என்று காளைகளுக்கு வசியம் செய்துபிடிக்கும் மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர். "காளைகளுக்கு வசியம் வைத்து மாடுபிடிவீரன் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடித்தால் மாடுபிடிவீரனின் குடும்பம் விருத்தியடையாது"[25] என்ற நம்பிக்கையும் காளைகளுக்கு வசியம் செய்யாமல் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்கும் மாடுபிடிவீரர்களிடம் காணப்படுகின்றது.

## கடவுள் நம்பிக்கை

மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளைப் பிடிப்பதற்குச் சற்றுமுன்பு சல்லிக்கட்டு நடைபெறும் ஊரிலுள்ள தெய்வங்களை வணங்கிவிட்டுப் பின்னர் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளைப் பிடிக்கின்றனர். இப்பழக்கம் முல்லைக்கலியில் இடம்பெற்றுள்ள ஏறுதழுவலிலும் காணப்படுகின்றது.

"துறையு மாலமுந் தொல்வலி மராஅமும்
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ"

(கலி.பா.101, வரி 13—14).

"நீர்த்துறையிலும் ஆலமரத்தின்கீழும் பழைய வலியினையுடை மாமரத்தின் கீழும் உறையுந் தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைப் பரவித் தொழுவதிலே பாய்ந்தார்" (கலி.பா 101, வரி 13—14). இவ்வரிகள் ஏறுதழுவப்போவோர் தெய்வத்தை வணங்கிப்போவதனை மரபாகக் கொண்டுள்ளனர் என்பதனைத் தெளிவுபடுத்துகின்றன. இதனடிப்படையிலேயே இன்றும் "சல்லிக்கட்டு எந்தத்தெய்வத்திற்கு நடைபெறுகின்றதோ மாடுபிடிவீரர்கள் அந்தத்தெய்வத்தினை வணங்கி அத்தெய்வத்தின் பூசாரியிடம் திருநீறு வாங்கிப் பூசிக்கொள்கின்றனர். இதன் பின்னரே மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளைப் பிடிக்கும் பழக்கம் காணப்படுகின்றது."[26] இவ்வாறு இறைவனை வணங்கிச் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்கவில்லையென்றால் காளைகளால் தங்களுக்குக் காயம் ஏற்பட்டுவிடும்

என்று மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர். மேலும் 'சல்லிக்கட்டு' எந்தத் தெய்வத்திற்காக நடைபெறுகின்றதோ அத்தெய்வத்தின் காளையினைச் சல்லிக்கட்டில் முதல்மாடாக விழாக்குழுவினர் அவிழ்த்துவிடுகின்றனர். இதனை மாடுபிடிவீரர்கள் பிடிக்கமாட்டார்கள். ஏனெனில் தெய்வத்தின் பேரில் வளர்க்கப்பட்ட காளையினைச் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரன் பிடித்தால் அத்தெய்வத்தினையே சல்லிக்கட்டில் பிடித்து வெற்றி கொண்டதற்குச் சமம் என மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர்.

### பொதுமக்களின் நம்பிக்கைகள்

'சல்லிக்கட்டு' விழா பற்றிப் பொதுமக்களிடமிருந்து பலநம்பிக்கைகள் வெளிப்படுகின்றன. ஊர்மக்கள் சல்லிக்கட்டு நடத்தினால் சல்லிக்கட்டு நடத்தப்படும் ஊர்மக்களுக்குப் பஞ்சம், காலரா போன்றவைகள் ஏற்படாது என்ற நம்பிக்கை பொதுமக்களிடம் பரவலாகக் காணப்படுகின்றது.

### மாட்டுப்பொங்கல்

தமிழகம் முழுவதும் உள்ள மக்கள் தைமாதம் இரண்டாம்நாள் தங்களின் மாடுகளுக்குப் பொங்கல் வைத்து வழிபடுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர். ஆனால், 'திருமங்கலம்' என்னும் நகரத்திற்கு அருகிலுள்ள 'கரடிக்கல்' என்னும் ஊரிலுள்ள மக்களும் 'செக்கானூரணி' என்னும் ஊருக்கு அருகிலுள்ள 'கீழப்பட்டி' என்னும் ஊரிலுள்ள மக்களும் தங்களின் ஊரில் இறைவனுக்கு என்று 'சல்லிக்கட்டு' நடத்தப்படுகின்றதோ அன்றே தங்களின் மாடுகளுக்குப் பொங்கல் வைத்து வழிபடுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

'திருமங்கலம்' என்னும் நகரத்திற்கு அருகிலுள்ள 'கரடிக்கல்' என்னும் ஊரிலுள்ள மக்கள் தங்கள் ஊரிலுள்ள பெருமாள்சாமிக்குச் சல்லிக்கட்டு நடைபெறும் நாளில் தங்களின் வீட்டுவாசலின் முன்பு தங்களின் மாடுகளுக்குப் பொங்கல் வைக்கின்றனர். பொங்கல் வைத்த பின்னர் பொங்கல்பானையினை மக்கள் வாசலின் முன் இறக்கி வைக்கின்றனர். பின்னர் பொங்கல் வைத்த வீட்டினர் பொங்கல் வைக்கும் பொழுது எரிக்கப்பட்ட அடுப்புக்கரியினை அவரவர் வீட்டிற்கு முன் வீதியில் இரண்டு அல்லது மூன்று இடங்களில் மண்ணில் கொட்டிவிடுகின்றனர். பின்னர் மக்கள் பொங்கல் வைக்கப்பட்ட வீடுகளுக்கு அவரவர் குலதெய்வச் சாமியாடிகள் வந்து சூடம் ஏற்றித் தேங்காய் உடைத்து இறைவழிபாடு செய்கின்றனர். பின்னர் சாமியாடிகள் பொங்கல் வைத்த வீட்டிலிருந்து ஒரு பாத்திரத்தில் தண்ணீரை எடுத்துக்

கொள்கின்றனர். பாத்திரத்திலுள்ள தண்ணீரை வேப்ப இலைகளால் எடுத்துச் சாமியாடிகள் மாடுகளின் மீது தெளிக்கின்றனர். இவ்வாறு மாடுகளின் மீது சாமியாடிகள் தண்ணீர் தெளிக்கும்போது,

“பட்டி பலுகப் பலுக

பாப்பான பொங்கப் பொங்க

நோயும் பிணியும் தெருவோடு போகப்

பாத்தவங் கண்ணு படீர்னு வெடிக்க”[27]

எனப் பாடுகின்றனர். இவ்வாறு பாடுவதனால் மாடுகளும் பிற செல்வங்களும் பல்கிப்பெருகும் எனவும், தங்களுக்கும் தங்களின் மாடுகளுக்கும் ஏற்றப்பட்ட பிணிகள், கண்ணேறு போன்றவைகள் விலகும் எனவும் பொதுமக்கள் நம்புகின்றனர்.

***அடுப்புக்கரி***

‘திருமங்கலம்’ என்னும் நகரத்திற்கு அருகிலுள்ள ‘கரடிக்கல்’ என்னும் ஊரில் ‘சல்லிக்கட்டு’விழா நடத்தக்கூடிய நாளில் ஊர்மக்கள் தங்களின் மாடுகளுக்குப் பொங்கல் வைக்கின்றனர். பொங்கல் வைக்கும் பொழுது எரிக்கப்பட்ட தீயிலிருந்து கிடைத்த அடுப்புக் கரித்துண்டுகளை வீட்டின்முன்புறமுள்ள வீதியில் இரண்டு அல்லது மூன்று இடங்களில் போட்டுள்ளனர். என்ன காரணத்திற்காக இவ்வாறு பொங்கல் வைத்த பின்னர் அடுப்புக்கரி வீட்டின் முன்புறம் உள்ள வீதியில் கொட்டப்படுகிறது என ஊர்மக்களிடம் கேட்டதற்கு இது பழையமரபு எனக் கூறுகின்றனர். இறைச்சி, பலகாரங்கள் போன்ற உணவுப் பொருட்களை ஒருவர் வீட்டைவிட்டு வெளியே எடுத்துச் செல்லும்பொழுது கரித்துண்டினை எச்சிலால் துப்பி அவ்வுணவுப் பொருளில் போட்டு எடுத்துச்செல்லும் பழக்கம் மதுரை வட்டாரத்தில் நாட்டுப்புற மக்களிடம் பரவலாகக் காணப்படுகின்றது. இறைச்சி, பலகாரங்கள் போன்ற உணவுப் பொருட்களில் கரித்துண்டினைப் போடாமல் வீட்டைவிட்டு எடுத்துச் சென்றால் தீயஆவிகள் உணவு கொண்டுசெல்வோரைத் தாக்கிவிட்டு அவ்வுணவுப் பொருட்களை எச்சில்படுத்திவிடும் என்ற நம்பிக்கை பொதுமக்களால் கடைபிடிக்கப்படுகின்றது. இதனடிப்படையில் பார்க்கும் பொழுது பொங்கல் வைத்த அடுப்புக்கரியினை ஊர்மக்கள் தங்கள் வீடுகளின் முன் வீதியில் கொட்டிவைத்திருப்பது மக்களால் இறைவனுக்குப் படைக்கப்பட்ட பொங்கல் உணவினை இறைவழிபாடு முடிவதற்குள்

தீயஆவிகள் எச்சில்படுத்தி விடக்கூடாது என்ற நம்பிக்கை இருப்பதனை வெளிப்படுத்துகின்றது.

***தீயஆவிகள்***

இறந்த எல்லா உயிர்களும் ஆவியாக அலைவதில்லை. வாழ்க்கை முற்றுப்பெறாமல் இறந்த உயிர்களே ஆவியாக அலைகின்றன என நாட்டுப்புற மக்கள் பரவலாக நம்பிவருகின்றனர். வாழ்க்கை முற்றுப்பெறாமல் இறந்த உயிர்களின் உடல்களைத் தீயிலிட்டு எரிக்கும் வழக்கத்தை நாட்டுப்புறமக்கள் கடைப்பிடித்து வருகின்றனர். இதனால், ஆவிகள் தங்களின் உடலை அழித்தது 'தீ' என எண்ணித் 'தீ' க்கு அச்சப்படுகின்றன. 'தீ'யின் குறியீடாகக் கரித்துண்டு இருப்பதால் கரித்துண்டுக்கு ஆவிகள் அச்சப்படும் என ஊர்ப்பொதுமக்கள் நம்பிவருவது தெளிவாகின்றது. மேலும் விழாநாளில் இரவில் இறைவன் ஊர்வலம் வருவார் எனவும் அவ்வாறு இறைவன் ஊர்வலம் வரும்பொழுது இவ்வூரில் யார் யார் தன்னை நினைத்துப் பொங்கல்வைத்து வழிபாடுசெய்துள்ளனர் என்பதனை அறிந்து கொள்வார் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் பொங்கல் வைத்த கரித்துண்டுகளை வீட்டின் முன்புறமுள்ள வீதியில் மக்கள் கொட்டி வைத்திருக்கலாம் எனக்கருத இடமுள்ளது. மேலும் 'அயோத்திகதை' என்னும் நாட்டுப்புறக் கதைப்பாடலில் இதனோடு தொடர்புடைய குறிப்பும் இடம்பெற்றுள்ளது. மாவலிச் சக்கரவர்த்தி மூன்றடி நிலம் கொடுக்கமுடியாமல் வாமனனிடம் தோற்றதால் சிறையில் அடைக்கப்பட்டார். அவர் வாமனனிடம் வருடத்திற்கு ஒருமுறை கார்த்திகைத் திருநாளில் என் மக்களைப் பார்க்கவேண்டும் என்று வரம் கேட்டார்.

கார்த்திக மாசமானதிலே
கார்த்திக நட்சத்திரந்தனிலே
எந்தன் குடியான பேர்களெல்லாம்
எந்தன் கண்ணினால் பார்க்கவேணும்
வீடுவாசல் தான் மெழுகி
விடியுமட்டும் விளக்கு வைத்து
ஆடலுடன் பாடலுமாய்
அன்புடனே நான் பார்க்கவேணும்
அன்று ஒரு நாளை மட்டும்"

(அயோத்தி கதை, வரி 3236—3245)

குமரிமாவட்டத்தில் திருக்கார்த்திகைப் பண்டிகைநாள் இரவில் மக்கள் வீட்டின் முன்புறம் பல விளக்குகளை ஏற்றிவைப்பர். பல்வேறு வகையான திண்பண்டங்கள் ஒவ்வொரு வீட்டிலும் செய்யப்படும். ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் அரிசிமாவில் மஞ்சளை அரைத்துச் சேர்த்து நீர்விட்டுக் கலந்து உண்டாக்கிய ஒருவகைக் கலவையினை வலக்கையின் ஐந்து விரல்களிலும் உள்ளங்கையிலும் படும்படி எடுத்து முன்வாயில் கதவுகளில் ஒற்றிக் கை அடையாளம் வைக்கின்றனர். ஏன் இவ்வாறு கை அடையாளம் கதவுகளில் இடுகின்றனர் என்றால் மக்கள் இரவில் தூங்கிய பின்னர் மாவலிராசா திருக்கார்த்திகைப் பண்டிகைநாள் இரவில் ஊர்சுற்றிப் பார்க்க வருவாராம் அப்பொழுது முன்வாயில் கதவுகளில் உள்ள கை அடையாளங்களைப் பார்த்துவிட்டு இந்தவீடுகளில் கார்த்திகைப் பண்டிகை கொண்டாடப்பட்டுள்ளது என அறிந்துகொள்வார் என்பது மக்கள் நம்பிக்கை."[28] இக்கருத்தின் மூலம் சல்லிக்கட்டு விழாவின்போது பொங்கல் வைத்தபின்னர் பொங்கல் வைத்த வீட்டினர் கரித்துண்டுகளை வீட்டின் முன்புறமுள்ள வீதியில் கொட்டிவைத்திருப்பது இவ்வூரில் பொங்கல்வைத்து வழிபாடுசெய்தவர்களை ஊர்த்தெய்வம் இரவில்வந்து அறிந்துகொள்ளும் என்ற நம்பிக்கை மக்களிடம் இருக்கின்றது என்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது.

### முத்துக்குடை

பலவண்ணத்துணிகளினாலும் பாசிகளினாலும் அலங்காரம் செய்யப்பட்ட பெரியகுடையினை முத்துக்குடை என்று கரடிக்கல், கீழப்பட்டி ஆகிய ஊர்களில் வசிக்கும் மக்கள் கூறுகின்றனர். "சல்லிக்கட்டு நடத்தப்படும் ஊர்த்தெய்வங்களுக்கு அவ்வூர் மக்கள் மற்றும் அவ்வூரைச் சுற்றியுள்ள மக்கள் ஏதாவது ஒரு வேண்டுதலின் பேரில் பல வண்ணத்துணிகளில் பாசிகளினால் அலங்காரம் செய்யப்பட்ட குடைகளைக் காணிக்கை செலுத்தினால் தங்களுக்கு ஏற்பட்ட இன்னல்கள் தீரும் எனப் பொதுமக்கள் நம்புகின்றனர்."[29] இது தவிர சல்லிக்கட்டுவிழா தொடங்குமுன்னர் "ஒருசிலர் தங்களின் வேண்டுதலுக்காக வாழைப்பழத்தை மக்கள் நிறைந்த கூட்டத்திற்குள் எறிகின்றனர். இதனைக் 'கனி சூறையிடுதல்' எனக்கூறுகின்றனர்."[30] இவ்வாறு செய்யவில்லையெனில் தங்களின் வேண்டுதலை நிவர்த்திசெய்த தெய்வம் சீற்றமடைந்து தங்களின் குடும்பத்தினருக்குத் துன்பம் தரும் என மக்கள் நம்புகின்றனர்.

### சேத்தாண்டி வேசம்

ஒருவர் ஏதாவது ஒரு வேண்டுதலின் பேரில் தன் இடுப்பில்

ஒரு துண்டை மட்டும் கட்டிக்கொண்டு சேற்று மண்ணை உடல் முழுவதும் பூசிக்கொண்டு விழா நடக்கும் இறைவனை வழிபடுதலையும் நாட்டுப்புறமக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர். இதனைச் சேத்தாண்டி வேசம் என்று நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர். இச்'சேத்தாண்டி வேசம்' என்னும் நேர்த்திக்கடன் பெரும்பாலும் 'மாரியம்மன்' திருவிழாவிலேயே இடம்பெறுகின்றது. 'கரடிக்கல்' என்னும் ஊரில் "பெருமாள்சாமிக்கு ஊர்மக்கள் சல்லிக்கட்டு நடத்தும் நாளில் 'சேத்தாண்டி வேசம்' போடுகின்றேன் எனக்கு ஏற்பட்ட நோய் தீரவேண்டும் எனப் பெருமாள்சாமியிடம் வேண்டிக்கொண்டேன். என் வேண்டுதலைப் பெருமாள்சாமி ஏற்றுக்கொண்டு எனக்கு ஏற்பட்ட நோயினைத் தீர்த்துவிட்டார்."[31] சேத்தாண்டிவேசம் என்ற நேர்த்திக்கடன் நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகளில் ஒன்றாக இருப்பதனால், 'கரடிக்கல்' என்னும் ஊர்மக்கள் தங்கள் ஊரில் பெருமாள்சாமிக்கு வேண்டுதல் செய்துகொண்டு வேண்டுதல் நிவர்த்தியான பின்பு பெருமாள்சாமிக்குச் சல்லிக்கட்டு நடைபெறும் நாளில் சேத்தாண்டி வேசம் போடுகின்றனர்.

### குழந்தைப்பேறு

ஊர்தெய்வத்திற்குச் சல்லிக்கட்டு நடத்தினால் குழந்தைப்பேறு கிடைக்கும் என்ற நம்பிக்கையிலும் சல்லிக்கட்டு நடைபெற்றுள்ளது. சான்றாக 'ஊமச்சிகுளம்' என்னும் ஊருக்கு அருகிலுள்ள 'சிச்சிலுப்பை' என்னும் ஊர் உள்ளது. இவ்வூரில் வசிக்கும் தவசி என்பவருக்குத் திருமணம் முடிந்து பலஆண்டுகள் கழிந்தும் குழந்தை பிறக்கவில்லை. தவசி என்பவர் குழந்தைப்பேறு வேண்டித் தன்னுடைய ஊரிலுள்ள முனியாண்டிசாமிக்கு ஆட்டுக்கடாய் வெட்டிப் பொங்கல்வைத்து வழிபாடு செய்து 'சல்லிக்கட்டு' விழா எடுத்துள்ளார். 'தவசி' என்பவரின் வேண்டுதலின்படி அவர் மனைவி கருவுற்றாள். தன் மனைவியின் வயிற்றிலுள்ள கரு ஆண் குழந்தையாகப் பிறக்கவேண்டும் என வேண்டிக்கொண்டு தவசி என்பவர் முனியாண்டிசாமிக்கு மீண்டும் ஒரு முறை சல்லிக்கட்டு நடத்தியுள்ளார். அவர் வேண்டுதலின்படி அவர் மனைவிக்கு ஆண்குழந்தை பிறந்தது."[32] முனியாண்டி சாமிக்குச் சல்லிக்கட்டுவிழா எடுத்ததனால் தவசிக்கு ஆண்குழந்தை பிறந்தது என அவ்வூர் மக்கள் நம்புகின்றனர்.

### சோதிடத்தில் நம்பிக்கை

நாட்டுப்புறமக்கள் தங்கள் வாழ்க்கையில் சோதிடத்தில் நம்பிக்கை கொண்டுள்ளனர். நாட்டுப்புறமக்கள் சோதிடத்தில் கொண்டுள்ள நம்பிக்கையினால் தங்கள் குடும்பங்களுக்கு ஏற்படும் இன்னல்களைத்

தீர்க்கப் பல்வேறு செயல்களைச் செய்துவருகின்றனர் இதனடிப்படையில் 'திருவாதவூர்' என்னும் ஊரில் வசிக்கும் சுந்தரபாண்டியன் என்பவர் 'பிடாரி' அம்மனுக்குச் சல்லிக்கட்டு நடத்தித்தன்னுடைய குடும்பத்திற்கு ஏற்படவிருந்த இன்னலைத் தீர்த்துள்ளார் என்பதனைக் களஆய்வின் மூலம் அறியமுடிகின்றது.

"திருவாதவூர் என்னும் ஊரில் வசிக்கும் சுந்தரபாண்டியன் என்பவர் சோதிடரிடம் சாதகம் பார்த்துள்ளார். சோதிடர் சுந்தரபாண்டியனின் மகன்களின் உயிருக்கு ஆபத்து உள்ளது எனக் கூறியுள்ளார். சுந்தரபாண்டியன் சோதிடர் தன்னிடம் சொன்னவற்றைத் தன் தாயிடம் சொல்லியுள்ளார்.தன் மகன் சொன்னதைக் கேட்ட தாய் நம்ம ஊர்ப் பிடாரிஅம்மனுக்குச் சல்லிக்கட்டு நடத்து உன் மகன்களுக்கு ஆபத்து வராது என்று சொல்லியுள்ளார். சுந்தரபாண்டியன் தன் தாயின் சொற்படி பத்தாண்டுகளுக்கு முன்பு பிடாரியம்மனுக்குச் சல்லிக்கட்டு நடத்திபிருக்கின்றார். இவர் நடத்திய சல்லிக்கட்டில் மாடுபிடிவீரர்கள் இருவர் இறந்துவிட்டனர்."[33] மாடுபிடிவீரர்களின் இறப்பினால் சுந்தரபாண்டியனின் மகன்களுக்கு ஏற்படவிருந்த ஆபத்து விலகிவிட்டது எனச் சுந்தரபாண்டியுன் குடும்பத்தினரும் ஊர்மக்களும் நம்புகின்றனர்.

### தெய்வத்தைப் புறக்கணித்தல்

ஊர்த்தெய்வங்களுக்கு ஊர்மக்களால் நடத்தப்படும் 'சல்லிக்கட்டு' விழாவின்போது விழாக்குழுவினரைப் புறக்கணித்தால் தெய்வத்தினைப் புறக்கணிப்பதற்குச்சமம் எனநாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். 'சத்திரப்பட்டி' என்னும் ஊரில் நடைபெற்ற சல்லிக்கட்டில் பரிசுப்பொருட்கள் கொடுத்த விழாக்குழுவினரை மாடுபிடிவீரன் புறக்கணித்ததால் ஏற்பட்ட இன்னலைக் களஆய்வின் மூலம் அறிந்துகொள்ள முடிந்தது. மேலும் ஊர்த்தெய்வத்தின் பேரில் வளர்க்கப்பட்ட கோயில்காளையின் மீது எச்சிலைத்துப்பி அவமானம் செய்த கோயில்காளையின் பராமரிப்பாளருக்கு ஊர்த்தெய்வத்தினால் ஏற்பட்ட இன்னலையும் களஆய்வின் மூலம் அறிந்துகொள்ள முடிந்தது.

"அதிகக்காளைகளைப் பிடிக்கும் சிறப்பு வீரனாக அலங்காநல்லூர் வட்டாரத்தில் கருதப்படும் 'சஞ்சீவி' என்பவர் சத்திரப்பட்டிச் சல்லிக்கட்டில் பலகாளைகளை அடக்கிப் பரிசுப்பொருட்களைப் பெற்றுக் கொண்டிருந்தார். 'சஞ்சீவி' என்பவர் ஒருகாளையை அடக்கிவிட்டு நடுவர் குழுவிடம் பரிசுகள் வாங்கச்சென்றார். நடுவர்குழு 'சஞ்சீவி' என்பவருக்கு ஒரு

துண்டினை மட்டும் பரிசாகக் கொடுத்தது. 'சஞ்சீவி' என்பவர் நான் காளையைப் பிடித்ததற்காக இரண்டு துண்டுகள் எனக்குத் தரவேண்டும் என நடுவர்குழுவிடம் கேட்டார். சஞ்சீவி பலகாளைகளை அடக்கி நிறையத்துண்டுகளைப் பரிசாகப் பெற்றதை அறிந்த நடுவர்குழு இதுவரை ஒருகாளையை அடக்கினால் அடக்கியவனுக்கு இரண்டு துண்டுகளைப் பரிசாகக் கொடுத்ததைத் தவிர்த்துவிட்டு ஒரு துண்டினை மட்டும் 'சஞ்சீவி' என்பவருக்குப் பரிசாகக் கொடுத்தது. நடுவர்குழு கொடுத்த துண்டினைச் சஞ்சீவி என்பவர் புறக்கணித்துக் கிழித்து எறிந்துவிட்டு வாடியிலிருந்து அவிழ்த்துவிடப்பட்ட மற்றொரு காளையைப் பிடித்தார். காளை அவரைக் காயப்படுத்தியது. இந்நிகழ்ச்சியினை அருகிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த பார்வையாளர்களாகிய பொதுமக்கள் நடுவர்குழு கொடுத்த துண்டினைக் கிழித்து எறிந்ததனால் தெய்வம் இவனைத் தண்டித்துவிட்டது எனக் கூறினார்கள்."[34] நடுவர் குழு கொடுத்த துண்டு தெய்வத்தின் சார்பில் கொடுக்கப்பட்டது என்றும் அதனைப் புறக்கணிப்பது தெய்வத்தைப் புறக்கணிப்பதற்குச் சமம் என மக்கள் நம்புகின்றனர்.

"பொட்டுலுப்பட்டி என்னும் ஊரின் பெருமாள் கோயில்காளை பல ஊர்களில் நடந்த சல்லிக்கட்டுகளில் திறமையாய் விளையாடி வெற்றி பெற்று வந்துள்ளது. ஆனால், ஓர்ஊரில் நடந்த சல்லிக்கட்டில் பெருமாள் கோயில்காளை பிடிபட்டுவிட்டது. காளை பிடிபட்டுவிட்டதால் காளையைப் பராமரித்து வந்தவர் மது அருந்திவிட்டுவந்து பெருமாள் கோயில் காளையைக் கெட்டவார்த்தைகளால் திட்டிவிட்டு எச்சிலைக் காளையின் முகத்தில் துப்பியுள்ளார். காளையின் முகத்தில் எச்சிலைத் துப்பியவர் சிலநாட்கள் கழித்து ரத்தரத்தமாகக் கக்கி இறந்துவிட்டார்."[35] பெருமாள் கோயில் காளையின் மீது எச்சிலைத் துப்பியது பெருமாள்சாமியின் மீது எச்சிலைத் துப்பியதற்குச் சமம். ஆதலால், பெருமாள்சாமி எச்சில் துப்பியவரைப் பழிவாங்கிவிட்டார் என ஊர்மக்கள் நம்புகின்றனர்.

இதுகாறும் கூறியவற்றியிலிருந்து முன்னோர்கள் செய்துவந்த நடைமுறைப் பழக்கவழக்கங்கள் நம்பிக்கைகளாக உருவாகியுள்ளன என்பது தெளிவாகின்றது. சல்லிக்கட்டுவிழாவில் இறைநம்பிக்கை, சோதிடத்தில் நம்பிக்கை, சகுனத்தில் நம்பிக்கை, சடங்குகளில் நம்பிக்கை ஆகியன இடம்பெற்றுள்ளன. மேற்கூறிய நம்பிக்கைகள் அனைத்தும் சல்லிக்கட்டு நடத்துபவர்களின் நம்பிக்கைகள், காளைவளர்ப்பவர்களின் நம்பிக்கைகள், மாடுபிடிவீரர்களின் நம்பிக்கைகள், பொதுமக்களின் நம்பிக்கைகள் என்ற பகுப்புகளில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

சல்லிக்கட்டு நடத்துவதற்கு விழாக்குழுவினர் வாடி கட்டும்பொழுது எலுமிச்சைப்பழத்தை அறுத்து அதில் குங்குமம் தடவிப் பிழிந்து விடுகின்றனர். இவ்வாறு செய்வது இறைவனுக்குப் பலி கொடுத்ததற்குச் சமம் என்று விழாக்குழுவினர் நம்புகின்றனர்.

சல்லிக்கட்டு விழாவில் நடத்தப்படும் 'காப்புக்கட்டுதல்' என்னும் சடங்கினால் 'சல்லிக்கட்டு' நடந்துமுடியும் வரையிலாவது ஊர்மக்களுக்குத் திடீர் இறப்பு, அம்மைநோய் பரவுதல், தீ விபத்து போன்ற தீமைகள் ஏற்படாமல் ஊர்த்தெய்வங்கள் காத்துக்கொள்ளும் என்று சல்லிக்கட்டு நடத்துபவர்கள் நம்புகின்றனர்.

சல்லிக்கட்டு விழாவில் மனித இறப்பு ஏற்பட வாய்ப்புள்ளதால் வெட்டவெட்டத் தளிர்க்கும் மூங்கிலைப் போன்று மனிதஇனமும் ஒருவன் மறைவிற்குப்பின் இன்னொருவன் தோன்றுவான் என்ற நம்பிக்கையில் சல்லிக்கட்டு விழாவில் பச்சை மூங்கில் கம்புகளை விழாக்குழுவினர் பயன்படுத்துகின்றனர் என்பது புலனாகின்றது.

நாணலின் சாம்பல், அறுகம்புல், சாணம், கோமியம், பால் ஆகியவற்றைக் கலந்து ஊரின் புறப்பகுதியில் விழாக் குழுவினர் தெளிப்பதனால் ஊரிலுள்ள தீட்டுக்கள் விலகிவிடும் என்று சல்லிக்கட்டு நடத்துபவர்கள் நம்பியுள்ளதனை அறியமுடிகின்றது.

சல்லிக்கட்டுக் காளையினைக் காளைவளர்ப்பவர்கள் சல்லிக்கட்டுக்குக் கொண்டு செல்லும்பொழுது தங்களின் குலதெய்வத்தை வணங்கித் திருநீறு பூசிவிட்டுக் காளையைச் சல்லிக்கட்டுக்குக் கொண்டு சென்றால் காளை சல்லிக்கட்டில் வெற்றி பெற்றுவிடும் என்ற நம்பிக்கை காளை வளர்ப்பவர்களிடம் காணப்படுவதனை அறியமுடிகின்றது. ஊர்த்தெய்வத்தின் காளைக்குச் சல்லிக்கட்டில் கிடைத்த பரிசுப் பொருட்களை விற்றுப் பணத்தை ஊர்த்தெய்வத்திற்கே காணிக்கையாகச் செலுத்தவில்லையென்றால் தங்களின் குடும்பத்திற்குத் தீங்கு ஏற்படும் எனக் காளை வளர்ப்பவர்கள் நம்புகின்றனர். மேலும் காளை வளர்ப்பவர்கள் தங்களின் காளையினைச் சல்லிக்கட்டில் அவிழ்த்துவிடுவதாக வாடிவாசலிற்குக் கொண்டு செல்லும்பொழுது மனிதச் சிறுநீர் அல்லது காளையின் சிறுநீர் இவற்றில் ஏதேனும் ஒன்றைக் காளையின் மீது தெளிப்பதனால் தங்களின் காளைக்கு மாடுபிடி வீரர்கள் வைத்த வசியமை முறிந்துவிடும் எனக் காளை வளர்ப்பவர்கள் நம்புகின்றனர்.

மாடுபிடிவீரர்கள் பல்லி சகுனம் கேட்டுச் சல்லிக்கட்டில் மாடுபிடிக்கச் சென்றால் சல்லிக்கட்டில் தங்களுக்குத் தீமை ஏற்படாது என்று நம்புவதனை அறிந்து கொள்ளமுடிகின்றது. மேலும் மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டில் மாடுபிடிக்கச் செல்லும்பொழுது மூன்றுபேராகச் சேர்ந்து செல்வதனைத் தீயசகுனம் என்று நம்புகின்றனர்.

மாடுபிடிவீரர்களில் ஒருசிலர் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்கும் பொழுது காளைகள் தங்களைக் குத்தாதவாறு இருக்க மந்திரவாதிகளிடம் சென்று வசியம் செய்துகொண்டு சல்லிக்கட்டில் காளைகளைப் பிடித்து வருகின்றனர். சல்லிக்கட்டுக் காளைகளுக்கு வசியம் செய்து, சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்கும் மாடுபிடிவீரனின் குடும்பம் விருத்தியடையாது என்ற நம்பிக்கையும் மாடுபிடி வீரர்களிடம் காணப்படுவதனை அறிந்துகொள்ள முடிகின்றது. மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டு நடைபெறும் ஊரிலுள்ள தெய்வங்களை வணங்கிவிட்டுப் பின்னர் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்கின்றனர். 'சல்லிக்கட்டு' எந்தத் தெய்வத்திற்கு நடத்தப்படுகின்றதோ அத்தெய்வத்தின் காளையினைச் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரர்கள் பிடித்தால் அத்தெய்வத்தின் சீற்றத்தால் தங்களுக்குப் பாதிப்புஏற்படும் என்று மாடுபிடிவீரர்கள் நம்புவதனை அறியமுடிகின்றது.

இறைவனுக்காகப் படைக்கப்பட்ட பொங்கல் உணவை இறைவழிபாடு முடிவதற்குள் தீயஆவிகள் எச்சில்படுத்திவிடக் கூடாது என்ற நோக்கத்தின் காரணமாக வீட்டின் முன்புறம் அடுப்புக் கரித்துண்டினை ஊர்மக்கள் கொட்டிவைத்துள்ளனர் என்பதனை அறியமுடிகின்றது. சல்லிக்கட்டு நடைபெறும் ஊர்த்தெய்வங்களுக்கு நேர்த்திக்கடனாக முத்துக்குடை வைத்தல், கனி சூறையிடுதல், சேத்தாண்டி வேசமிடுதல் போன்ற நேர்த்திக்கடன் நம்பிக்கைகளையும் பொதுமக்கள் கடைபிடித்து வருவதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது. 'தவசி' என்பவர் குழந்தைப்பேறு பெற்றுள்ளார். 'சுந்தபாண்டியன்' என்பவர் பிடாரிஅம்மனுக்குச் 'சல்லிக்கட்டு' நடத்தியதால் தன்னுடைய மகன்களுக்கு ஏற்படவிருந்த இன்னல்கள் தீர்ந்துவிட்டன என்று நம்பியுள்ளதனையும் அறியமுடிகின்றது. சல்லிக்கட்டில் நடுவர்குழு மாடுபிடிவீரனுக்குப் பரிசாகக் கொடுத்த துண்டினை மாடுபிடிவீரன் புறக்கணித்ததால் அவனுக்குச் சல்லிக்கட்டில் காளைபிடிக்கும்பொழுது காயம் ஏற்பட்டுள்ளது என்று பொதுமக்கள் நம்புகின்றனர். பெருமாள்சாமியின் காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனிடம் பிடிபட்டுவிட்டது என்ற காரணத்தினால் காளை பராமரிப்பாளர் பெருமாள்சாமியின் காளை மீது எச்சிலைத் துப்பி அவமானம் செய்த சிலநாட்கள் கழித்து இறந்துவிட்டார் என்று நம்பியுள்ளதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

## குறிப்புகள்

1. தமிழ்ப்பேரகராதி, தொகுதி 4, ப.2155.
2. Encyclopaedia of Americana, Vol. III, p.469.
3. வி.சரஸ்வதி, நாட்டுப்புறப்பாடல்களில் சமூக ஒப்பாய்வு, ப.152.
4. சு.சக்திவேல், நாட்டுப்புறவியல் ஆய்வு, ப.171.
5. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், பக்.215—216.
6. தகவல், சொ.வெள்ளைச்சாமிக்கோனார், சத்திரப்பட்டி, நாள் 23.12.94.
7. தகவல், ந.நல்லுப்பட்டான் அம்பலம், அச்சம்பட்டி, நாள் 15.2.95.
8. தி.நடராசன்(ப.ஆ.), வன்னியடி மறவன் கதை, ப.10.
9. தகவல், அ.சோதி சொரூபன், எழுமலை, நாள் 18.2.95.
10. சி.பொன்னுத்தாய், (க.ஆ.), தருப்பைப்புல் சடங்கு, ப.172.
11. தகவல், தி.கந்தசாமி, எழுமலை, நாள் 18.2.95.
12. தகவல், க.நீலமேகக்கோனார், பாலமேடு, நாள் 1.3.95.
13. தகவல், இரா.குருநாதக்கோனார், ரெங்கராசபுரம், 10.3.95.
14. தகவல், வ.அழகர்சாமி நாயக்கர், உச்சப்பட்டி, 10.3.95.
15. தகவல், கு.அழகுக்குடும்பன், உச்சப்பட்டி, 10.3.95.
16. தகவல், மா.நாராயணக்கோனார், சக்குடி, நாள் 19.2.95
17. தகவல், மு.தேவராசு, சோளங்குருணி, நாள் 10.3.95
18. தகவல், ம.சாமியார் அம்பலம், அ.புதுப்பட்டி, நாள் 10.3.95.
19. தகவல், சோ.கீரிமண்டன், கள்ளம்பட்டி, நாள் 20.3.95.
20. தகவல், பெ.அய்யங்காளை, மேலவளவு, 20.3.95.
21. தமிழ்ப்பேரகராதி,' தொகுதி 6, ப.3461.
22. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.1226.

23.தகவல், கோ. ஸ்ரீதரன், அலங்காநல்லூர், நாள்15.2.95.

24.தகவல், மேலது.

25.தகவல், மேலது.

26.தகவல், சோ.கீரிமண்டன், கள்ளம்பட்டி, நாள் 20.3.95.

27.தகவல், க.இராமையா நாயக்கர், கரடிக்கல், நாள் 16.4.95.

28.தி.நடராசன்(ப.ஆ.), அயோத்தி கதை, ப.98.

29.தகவல், பொ.அய்யாவு, கரடிக்கல், நாள் 16.4.95.

30.தகவல், அ.அம்மாசித்தேவர், கரடிக்கல், நாள் 16.4.95.

31.தகவல், மேலது.

32.தகவல், ஆ.ஆறுமுகம், சிச்சிலுப்பை, நாள் 20.2.95.

33.தகவல், சா.த.சுந்தரபாண்டியன், திருவாதவூர், நாள் 5.6.95.

34.தகவல், மு.முத்துராமலிங்கம், அ.புதுப்பட்டி, நாள் 10.3.95.

35.தகவல், சு.இராமையா, பொட்டுலுப்பட்டி, 20.3.95.

## சல்லிக்கட்டும்–மக்களும்

சங்ககாலத்தில் முல்லைநிலத்தில் வாழ்ந்த ஆயர்களின் சமூக விளையாட்டாகவும் திருமணஉறவோடு தொடர்புடைய விளையாட்டாகவும் 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டு இடம்பெற்றிருந்தது என்பதனை முல்லைக்கலியிலுள்ள ஏழு பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

"கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்
புல்லாளே ஆயமகள்" (கலி.103—வரி—63—64)

என்னும் பாடல் வரிகளின் மூலமும் சங்ககாலத்தில் முல்லைநிலத்தில் வாழ்ந்த ஆயர்கள் தங்களின் காளைகளை அடக்கிய ஆண்மகன்களுக்கே தங்களின் பெண்களைத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டிலிருந்து பெற்ற வளர்ச்சிநிலையாகச் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு இன்று விளங்குகின்றது. வலிமையும் முரட்டுக்குணமும் நிறைந்த காளையினை எந்தவிதமான ஆயுதமும் இல்லாமல் மாடுபிடிவீரன் தனிஒருவனாக நின்று காளையினை அடக்கி வெற்றி பெறும் விளையாட்டே 'சல்லிக்கட்டு'எனப் பெயர்பெற்று விளங்குகின்றது.

'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டில் பெண்ணின் பொருட்டு மாடுபிடிவீரர்கள் ஏறுதழுவியதைப் போன்று 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டிலும் பெண்ணின் பொருட்டு மாடுபிடிவீரர்கள் காளைகளை அடக்கியுள்ளனர் என்பதனை மாடுபிடிவீரர்களின் கதைப்பாடல்களின் மூலம் அறிந்துகொள்ளமுடிகின்றது.

மதுரைமாவட்டத்தில் மாடுபிடித்தலை மையமாகக் கொண்ட கதைப்பாடல்கள் சில உள்ளன. அவை அழகத்தேவன் கதை, கருப்பத்தேவன் கதை, மன்னன் சின்னாண்டி கதை ஆகியனவாகும்.

கதைப்பாடல்களில் தலைவர்கள் ஒவ்வொருவரும் ஏழு காளைகளை அடக்குவதாகவே செய்திகள் உள்ளன. கதைப்பாடல்களின் தலைவர்கள் சல்லிக்கட்டில் காளைகளை அடக்கி வெற்றிகொண்டாலும் இறுதியில் கதைப்பாடல்களின் தலைவர்கள் மரணத்தைத் தழுவியதாகவே மூன்று கதைப்பாடல்களும் அமைந்துள்ளன. கதைப்பாடல்களின் தலைவர்கள் காளையை அடக்கமுற்பட்டு தங்களின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டநிலையிலும் மாடுபிடிவீரர்கள் காளையினை அடக்கி வெற்றிபெற்றுள்ளனர் என்பதனை மூன்று கதைப்பாடல்களும் தெளிவுபடுத்துகின்றன.

### அழகத்தேவன் கதையின் சுருக்கம்

அழகத்தேவனின் தந்தை ஒச்சாத்தேவர் சொரிக்கான்பட்டியிலிருந்து தன் தங்கை விருமாயி என்பவளைக் கீழக்குடியில் சுக்கிரத்தேவர் என்பவருக்குத் திருமணம் செய்துகொடுத்திருந்தார். ஒருநாள் அழகத்தேவனின் தந்தை ஒச்சாத்தேவர் தன் தங்கை விருமாயியிடம் தன்னுடைய மகன்கள் நால்வரில் ஒருவனுக்கு அவள் மகளைத் திருமணம் செய்துகொடுக்குமாறு கேட்டார். இதனைக் கேட்ட விருமாயி உன் மகன்களுக்குப் பெண் தரமுடியாது என் வீட்டிற்கு வந்தால் விளக்குமாற்றால் அடிப்பேன் என்று ஒச்சாத்தேவரிடம் கூறினாள். இதனால் இருகுடும்பங்களும் பகையாகிவிட்டன. அழகத்தேவனின் அத்தை மகளான ஒய்யம்மாள் ஏழுகாளைகளை வளர்க்கின்றாள். இவற்றைச் சல்லிக்கட்டில் பிடிக்குமாறு அழகத்தேவனைத் தூண்டிவிடுகின்றாள். இதனால் கோபம் கொண்ட அழகத்தேவன் ஒய்யம்மாளின் ஏழு காளைகளையும் விக்கிரமங்கலம் சல்லிக்கட்டில் காயம்பட்டநிலையில் அடக்கி வெற்றிபெறுகின்றான். பின்னர் ஒய்யம்மாளை அழகத்தேவன் திருமணம் செய்து ஆறுமாதம் வாழ்ந்து இறந்துவிடுகின்றான். பின்னர் அழகத்தேவனின் சகோதரர்கள் சொரிக்கான்பட்டியில் அழகத்தேவனுக்குச் சிலைசெய்துவைத்து வணங்கி வருகின்றனர் என்பதோடு கதை முடிகின்றது.

### ஒச்சாத்தேவர் பெண்கேட்டல்

கதைத் தலைவனான அழகத்தேவனின் தந்தை ஒச்சாத்தேவர் தன் தங்கையிடம் அவள் மகள் ஒய்யம்மாளைத் தன் மகன்கள் நால்வரில் ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு கேட்டார். அதற்கு ஒச்சாத்தேவரின் தங்கை விருமாயி "இந்தா ஒன் சம்பந்தத்துக்கும் என் சம்பந்தத்துக்கும் ஏணி வச்சாலும் எட்டுமா? நான் தான் ஒன்னப் பத்திரிக்கையில மாமன்னு போடலியே; ஒன்னயத்தள்ளிவச்சுப் புட்டேன்ல; உனக்கு அறிவிருந்தா என்வீடுதேடி வருவியா? எந்திருச்சு மானங்கெட்ட பயலே வீட்டுக்குப் போடா ஒனக்குப் பொண்ணுமில்லே இனியிருந்தா ஒனக்கு மருவாதி குறைஞ்சிடும், மாத்தாடி விழுந்துபோகும் என்று கூறினாள். உடனே ஒச்சாத்தேவர், "மாத்தக் கொண்டி அடிக்காம சொன்னா பாத்தியா அது ஒண்ணுபோதும். ஒம் பொண்ண யாருக்கும் கொடுத்துக்க. நான் பொண்ணு கேட்டுவந்தா அடிம்மான்னு" சொன்னார். பின்னர் அவர் படிவாசல் விட்டுக் கீழிறங்கி கவலையுடன் கருப்புச்சாமி கோயிலுக்குச் சென்று என் தங்கச்சி என்ன மதிக்கமாப் போயிட்டா என்

தங்கச்சியை எட்டுநாளில் கேக்கனும் ஒனக்கு ரெட்டக்கெடா வெட்டிப் பொங்கல் வைக்கின்றேன் என்று சொல்லி நின்று மண்ணவாரித் தூத்துறார் பாரு ஒச்சாத்தேவர் தூசி கிளம்புதம்மா"[1] இவ்வாறு மண்ணை வாரித் தூற்றும் பொழுது மண்ணிலுள்ள தூசி காற்றில் பறக்கும். இதனைச் செய்வதனால் தான் பழிவாங்க வேண்டும் என்று நினைத்தவரின் வாழ்க்கை சீரழிந்துவிடும் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். இப்பழக்கம் நாட்டுப்புறமக்களிடம் இன்றும் உள்ளது. கருப்புச்சாமியின் கோயிலில் ஒச்சாத்தேவர் மண்ணைவாரித் தூற்றிய எட்டாவது நாளில் அவனின் தங்கை இறந்து விடுகின்றாள். இதனால் இரண்டு குடும்பங்களும் பகையாகிவிட்டன.

## ஒய்யம்மாள் காளைகளைச் சல்லிக்கட்டில் விடுதல்

அழகத்தேவனின் முறைப்பெண்ணாகிய ஒய்யம்மாள் தன் தாயின் இறப்பிலிருந்து திருமணம் செய்துகொள்ளாமல் ஏழுகாளைகளை வளர்க்கின்றாள். அவள் தன்னுடைய காளைகள் எல்லாவற்றிற்கும் உள்ளூர் இளைஞர்களைக் கொண்டு முட்டுப்பழக்கம் செய்துள்ளாள். 'முட்டுப்பழக்கம்' என்பது காளைக்குப் பழக்கம்இல்லாத மனிதர்களைக் குத்தும் பழக்கமாகும். இக்காளைகளை ஒய்யம்மாள் முதலில் நதியப்பட்டி என்னும் ஊரின் சல்லிக்கட்டில் அவிழ்த்துவிட்டிருக்கின்றாள். இரண்டாவதாக ஒய்யம்மாள் தன் காளைகளைக் 'கரடிக்கல்' என்னும் ஊரின் சல்லிக்கட்டில் அவிழ்த்துவிட்டிருக்கின்றாள். பின்னர் 'வத்தலக்குண்டு' என்னும் ஊரின் சல்லிக்கட்டில் அவிழ்த்து விட்டிருக்கின்றாள். அப்பொழுதெல்லாம்

"கெழக்கே பிறந்த காளை
கீழக்குடி ஒய்யம்மா காளை
கெழக்கே பிறந்த காளை
கீழக்குடி ஒய்யம்மா காளை
வேட்டி வச்ச ஆம்பள சிங்கம்
அங்காளி பங்காளி அண்ணன் தம்பி யாரொருவன்
. . . . . . . நிக்காதீங்க
மொறையுள்ள மச்சான் மார்கள்
யாராக யிருந்திட்டாலும்
ஏழுகாளை புடிச்சவங்க
என்னத்தாலி கட்டிக்கங்க
மாட்டப் புடிக்கா விட்டா

மஞ்சளப் பூசிரணும்
சேலயக் கட்டிவரணும்
ஆம்பிளயா இருந்தா—நீ
அருப்பத்த எடுத்திரணும்"[2]

என்று ஒய்யம்மாள் சல்லிக்கட்டில் அறிவித்திருக்கின்றாள். அவளின் அறிவிப்பு முறைமாப்பிள்ளைகளுக்குச் சினத்தை ஏற்படுத்துவதாக அமைந்துள்ளது. மேலும் ஒய்யம்மாள் தன் காளைகளைப் பிடித்தவன் தன்னைத் தாலிகட்டிக்கொள்ளலாம் என்று கூறியிருப்பது தன்னுடைய காளைகளை எவராலும் பிடிக்கமுடியாது என்ற நம்பிக்கையினை வெளிப்படுத்துகின்றது.

**அழகத்தேவன் மாடுபிடித்தல்**

ஒய்யம்மாள் சல்லிக்கட்டில் தன்னுடைய காளைகளை அவிழ்த்துவிடும்பொழுது அறிவிப்புச் செய்யும் வார்த்தைகளைக் கேட்டு அழகத்தேவனுக்குச் சினம் ஏற்படுகின்றது. இதனால் அழகத்தேவன் நாளடைவில் சல்லிக்கட்டிற்குச் சென்று மாடுபிடித்துப் பழகி வருகின்றான்.

நான் என்னைக்காவது ஒருநாள் ஏழு களைகளையும் பிடித்து ஒய்யம்மாளைத் திருமணம் செய்வேன் என்று அழகத்தேவன் சபதம் எடுத்துக் கொண்டான். பின்னர் அழகத்தேவன் தன் தம்பிமார்களோடு கீழப்பட்டிச் சல்லிக்கட்டிற்குச்சென்று அவிழ்த்துவிட்ட காளைகளையெல்லாம் பிடித்து வேட்டிகளையம் மாலைகளையும் பரிசாகப் பெற்றுக்கொள்கின்றான். கருப்புச்சாமியிடம் அழகத்தேவனின் தந்தை மண்ணவாரித் தூற்றியதனால் ஒய்யம்மாளின் காளைகளைப் பிடித்தால் கருப்புச்சாமியின் கோபத்தால் தனக்கு ஆபத்து ஏற்படும் என எண்ணி அழகத்தேவன் ஒய்யம்மாளின் காளைகளைப் பிடிக்காமல் விட்டுவிடுகின்றான்"[3]

ஒய்யம்மாள் ஒவ்வொரு சல்லிக்கட்டிலும் மீசைவைத்த ஆம்பிளையாக இருந்தால் என்னுடைய காளைகளைப் பிடிக்கவேண்டும் என்றும் இல்லையென்றால் மீசையை எடுத்துவிடவேண்டும். மஞ்சள் பூசிக் கொள்ளவேண்டும். சேலையைக் கட்டிக்கொள்ளவேண்டும் என்று அறிவிப்பதனை அழகத்தேவன் கேட்டுக் கொண்டிருந்தான். இதனால் அழகத்தேவனுக்குச் சினம் ஏற்பட்டு மாடுபிடித்துப் பழகினான் என்பதனைக் கதைப்பாடல் தெளிவுபடுத்துகின்றது. போட்டிக்கு ஒருவனை இழுக்க வேண்டுமானால் மீசையை எடுத்துக் கொள்ளவேண்டும் மஞ்சள் பூசிரணும் சேலையைக் கட்டிக்கொள்ளவேண்டும் என்று சொன்னால்

இன்றுள்ள ஆடவர்களுக்கும் சினம் ஏற்பட்டுபோட்டியில் கலந்து கொள்வார்கள்.

## ஒய்யம்மாளும் அழகத்தேவனும் சவால் விடுதல்

ஒய்யம்மாள் தன்னுடைய தந்தைக்குத் தெரியாமல் தோட்டியின் மூலம் அழகத்தேவனுக்குக் கடிதம் கொடுத்துவிடுகின்றாள். அதில் எழுதியிருந்த வார்த்தைகள் அழகத்தேவனைச் சினப்படுத்துவனாவாக இருந்தன.

"புத்திகெட்ட மானங்கெட்டபய
செருப்படிதான் பெறப்போறான்
அத்தமகனே பொடிப்பயலே—ஏலே
அருமையைத்த சிறுபயலே
மாடு வருது பங்குனிலயும்
மாட்டப்புடிக்க தவறினாக்க—ஏடா
மானங்கெட்ட பொடிப்பயலே
அருப்பத்தான் எடுத்திரணும் —நீயி
மஞ்சளத்தான் குளிச்சிரணும்—எங்க
வீடுவந்து சேந்திரணும்
அண்ணன்தம்பி நாலுபேரும்—எனக்கு
அடிமைவேல பண்ணுங்கடா"[4]

என்று ஒய்யம்மாள் எழுதியிருந்தாள். இதனைத் தோட்டியிடம் வாங்கிப்படித்த அழகத்தேவன் தன்னுடைய தம்பிகளிடம் விபரத்தைச் சொல்லிவிட்டு ஒய்யம்மாள் எழுதிக்கொடுத்த கடிதத்தை வைத்துக்கொண்டான். பின்னர் அழகத்தேவன் பதில் கடிதம் எழுதித் தோட்டியின் மூலம் ஒய்யமாளுக்கு அனுப்பினான் அதில்

"மாமன்மகளே மாயக்காரி
சூதுக்காரி ஒய்யம்மா ஒய்யம்மா—ஒன்
மாமன்மகன் திருவோலையைப்
பாரம்மா பாரம்மா—ஒன்
ஏழுகாளை கண்டிப்பாக வரவும் வேணும்—அடியே
நான் ஏழுகாளை கண்டிப்பாகப் பிடிக்கவும் வேணும்
காயிதத்தே கண்டவுடன் கண்டவுடன்—நீ
காளை கொண்டு வராவிட்டா வராவிட்டா
அண்ணன்தம்பி வருவமடி மாலய வாங்க

கீழக்குடி வருவமடி மாலய வாங்க
கீழக்குடி கிராமம் பூராம் கிராமம் பூராம்
பட்டப்பகல் கொளுத்திருவோம் கொளுத்திருவோம்''

என்று எழுதியிருந்தான். இதனைப் படித்துப்பார்த்த ஒய்யம்மாள் அழுதுகொண்டே தன் தந்தையிடம் கூறினாள். ஒய்யம்மாளின் தந்தை 'கீழக்குடி' ஊர்மக்களைக் கூட்டி அழகத்தேவன் எழுதியிருந்த கடிதத்தைக் காண்பித்தார். இதனைப் படித்துப்பார்த்த ஊர்மக்கள் சொரிக்கான்பட்டிக்குத் தோட்டியினை அனுப்பி அழகத்தேவனை அழைத்துவரச் சொன்னார்கள். இதனை அறிந்த அழகத்தேவனும் தன் ஊரிலுள்ள மக்களுடன் சொரிக்கான்பட்டியிலிருந்து கீழக்குடிக்கு வந்தான். பின்னர் அழகத்தேவன் ஒய்யம்மாள் எழுதிய கடிதத்தைக் கீழக்குடி ஊர்மக்களிடம் கொடுத்தான். இதனைக் கீழக்குடிமக்கள் படித்துப்பார்த்துவிட்டு தவறு பெண் மீது உள்ளது. அதனால் பெண்ணைப் பெற்றவர்கள் அழகத்தேவனுக்கு அபராதம் கட்டவேண்டும் என்று தீர்ப்புக் கூறினார்கள். இதற்கு அழகத்தேவன் எனக்குப் பணம் வேண்டாம் என் அத்தை மகளை என் வண்டியில் ஏறிவரச் சொல்லுங்கள் என் படிவாசல்ல காலை வைத்துவிட்டு வரட்டும் என்றார். இதனைக் கேட்ட சுக்கிரத்தேவர் "விருதாப்பயலே என் மகள் உன்வீட்டில் கால் வைக்கமாட்டாள்"[6] என்றார். இதன் பின்னர் அழகத்தேவன் உன்னுடைய ஏழு காளைகளையும் பிடித்து உன்மகள் கழுத்தில் தாலி கட்டுகிறேன். உன்னுடைய ஏழுகாளைகளையும் பிடிக்கவிலையென்றாள் என் மீசையை எடுத்துக் கொள்கின்றேன் என்று சபதம் கூறியுள்ளான். மேற் கூறியவற்றிலிருந்து அழகத்தேவன் சினப்படுமாறு ஒய்யம்மாள் எழுதிய கடிதத்தின் விளைவால் கீழக்குடிக்கும் சொரிக்கான்பட்டிக்கும் பகையாக மாறிப் பின்னர் அழகத்தேவனுக்கும் சுக்கிரத்தேவருக்கும் போட்டி ஏற்பட்டுவிட்டதனை அறிந்துகொள்ளமுடிகின்றது.

**காளைகளின் குணங்கள்**

அழகத்தேவன் சுக்கிரத்தேவரிடம் சபதம் எடுத்துச் சென்றவுடன் ஒய்யம்மாள் தன்னுடைய பண்ணைக்காரனை அழைக்கின்றாள். பின்னர் அவனிடம் ஒய்யம்மாள் நம்மிடம் உள்ள ஏழு காளைகளில் எது நல்லதிறமையுள்ளது. அதனைச் சல்லிக்கட்டில் விடுவோம் என்று கூறுகின்றாள். அதற்குப் பண்ணைக்காரன் காளைகளின் குணங்களை,

"உள்ளான வெரட்டிப்பாயும்
ஊசிக்கொம்பு வெள்ளைக்காளை

ஊள்ளான ஓடிப்பாயும்
ஊசிக்கொம்பு வெள்ளைக்காளை
கரிச்சான வெரட்டிப்பாயும்
கண்ணாடி மயிலக்காளை
பச்சப்புல்லு தின்னுங்காளை
. . . . . கொல்லுங்காளை
பத்தாளப் பாஞ்சிருமாம்
சந்தனப் பில்லைக்காளை
கூட்டத்த வெரட்டிப்பாயும்
கொடிமாயன் வெள்ளைக்காளை
ஏழுகாளை ஏழுவெதமும்"

என்று கூறினான். இப்பாடலில் உள்ள

"உள்ளான வெரட்டிப்பாயும்
கரிச்சான வெரட்டிப்பாயும்"

என்றவரிகள் வழி அளவில் சிறியதாகவும் விரைவாகப் பறக்கக்கூடியதாக இருக்கும். 'உள்ளான்', 'கரிச்சான்' ஆகிய பறவைகளையே குறிவைத்துத் தாக்கக்கூடிய திறமையான காளைகள் என்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் 'பத்தாளப் பாஞ்சிரும்', 'கூட்டத்த வெரட்டிப்பாயும்' என்ற வரிகள்வழிக் காளைகள் சல்லிக்கட்டுக்கூட்டத்தைக் கண்டு அச்சம்கொண்டு ஓடாமல் மாடுபிடிவீரர்களை நின்று குத்தும் திறமைவாய்ந்த காளைகள் என்பதனையும் அறிந்துகொள்ளமுடிகின்றது.

## அழகத்தேவன் சகுனம் பார்த்தல்

அழகத்தேவன் சல்லிக்கட்டில் ஒய்யம்மாளின் காளைகளைப் பிடிப்பதற்குச் சகுனம் பார்க்கின்றான். இதற்காக அழகத்தேவன் தன் தந்தை மண்ணைவாரித் தூற்றி ஒய்யமாளின் குடும்பத்தின்மீது பழிபோட்ட கருப்புச்சாமி கோயிலுக்குச் சென்று ஒய்யம்மாளின் காளைகளைச் சல்லிக்கட்டில் பிடிக்கலாமா என்று உத்தரவு கேட்கின்றான். இதற்காக அவன் "வெள்ளை (திருநீறு), சிவப்பு (குங்குமம்), மஞ்சள் (மஞ்சள் பொடி) ஆகியவற்றைத் தனித்தனியே காகிதத்தில் மடித்துக் கருப்புச்சாமிக்கு முன்னர் போட்டுள்ளான். மடித்துப்போட்ட மூன்று நிறங்களுள் வெள்ளை வந்தால் சல்லிக்கட்டில் வெற்றிபெற்று அத்தை மகளைத் தாலிகட்டலாம் என்று அழகத்தேவன் எண்ணியுள்ளான். சிவப்புவந்தால் அவன் இறந்துவிடுவான் என்றும் மஞ்சள் வந்தால் வெற்றியும் இல்லை

தோல்வியும் இல்லை என்றும் அழகத்தேவன் நினைத்துள்ளான். பின்னர் மடித்துப் போட்டவற்றுள் ஒன்றை எடுக்கும் பொழுது சிவப்பு வந்துள்ளது. இதனைப் பார்த்த அழகத்தேவனின் தம்பிகள் அழுது புலம்பி அண்ணனைச் சல்லிக்கட்டிற்குச் செல்லவேண்டாம் என்று கூறினர். அதனையும் மீறி அழகத்தேவன் சல்லிக்கட்டிற்குச் சென்றுள்ளான்"[8] என்று கதைப்பாடல் கூறுவதன் மூலம் சல்லிக்கட்டிற்குச் சென்று ஒய்யம்மாளின் காளையினைப் பிடித்தால் தனக்குத் தீமைவரும் என்று அறிந்தும் அழகத்தேவன் சல்லிக்கட்டிற்குச் செல்கின்றான் என்பதனை அறியமுடிகின்றது. மேலும் அழகத்தேவன் தன்னுடைய உயிரைக்கூடப் பெரிதாக எண்ணாமல் தான் எடுத்த சபதத்தினை நிறைவேற்றவேண்டும் என்ற எண்ணம் கொண்டவன் என்பதனையும் கதைப்பாடல்வழி அறியமுடிகின்றது.

### அழகத்தேவன் காளைகளைப் பிடித்து ஒய்யம்மாளை மணம் முடித்தல்

அழகத்தேவன் கீழக்குடியில் சுக்கிரத்தேவரிடம் எடுத்த சபதத்தின்படி விக்கிரமங்கலம் சல்லிக்கட்டில் ஒய்யம்மாளின் காளைகளைப் பிடிக்கச் செல்கின்றான். அங்குச் சென்றவுடன் அழகத்தேவன் உலகமே அழிந்தாலும் மாட்டின்மேல் நான் மட்டும் தான் விழுந்து பிடிக்கவேண்டும் என்று தன் தம்பிகளிடம் கூறினான். பின்னர் அழகத்தேவன் காளைகளைப் பிடிக்கத் தயாராக நின்றான் அப்பொழுது

"உள்ளான ஓடிப்பாயும்—அந்த
ஓடிப்பாயும் ஓடிப்பாயும்—அந்த
உள்ளிக்கொம்பு வெள்ளைக் காளையைச் சாட்டுறாக
வலதுபெறம் பக்கத்திலே அழகுத்தேவர்
. . . . . கருப்புச்சாமியை வணங்கினாரு
அப்பிடி திட்டிவிட்டு எட்டியத்
தவ்விட்டு தவ்விட்டு
எட்டிநிண்டு ஓட்டிவிட்டு தொரத்திட்டாரு
பொட்டப்பிள்ளை கொண்டுபோன வெள்ளைக்காளை
அய்யா கையில் சிக்கி நல்லா காயமாகுது
உள்ளான வெரட்டிப்பாயும்
கண்ணாடி மயிலக் காளை—அவர்
எல்லையில் தானிருந்து
வாலக் கரும்புறாரு—அந்த

கண்ணாடி மயிலக்காளை
ஓடுது கீழக்குடி
அஞ்சு காளை பிடிச்சாச்சு
ரெண்டு காளை மிச்சமிருக்கு"[9]

சந்தனப்பில்லைக்காளை இடதுபுறம் மயிலக்காளை இதில் சந்தனப்பில்லைக்காளை அழகத்தேவனைக் கண்டு மிரண்டு ஓடிப்போய்விட்டது. கடைசிமாடாக கருப்புமாடு உள்ளது. அந்தக் கருப்புநிறக்காளையினை அழகத்தேவன் பிடிக்கும்பொழுது அழகத்தேவனுக்கு வலதுபுறம் வயிற்றில் காயம் ஏற்பட்டுவிட்டது. அழகத்தேவன் தனக்கு ஏற்பட்ட காயத்தினைத் தன் துண்டால் இறுக்கிக் கட்டிக் கொண்டு கருப்புநிறக் காளையினைப் பிடித்து வெற்றிகொண்டான். பின்னர் அவன் தன் அத்தைமகள் ஒய்யம்மாளைத் திருமணம் செய்து ஆறுமாதகாலம் வாழ்ந்து இறந்துவிட்டான். அடுத்து அழகத்தேவனின் தம்பிகள் அழகத்தேவனுக்குச் சிலை செய்து வைத்துள்ளனர். சொரிக்கான்பட்டியில் உள்ள மக்கள் அழகத்தேவனின் சிலையைத் தெய்வமாக நினைத்து வணங்கும் வழக்கம் இன்றும் உள்ளது. மேற்கூறிய செய்திகள் வழி அழகத்தேவன் தன்னுடைய உயிரைவிடத் தான் எண்ணிய செயலைச் செய்துமுடிக்க வேண்டும் என்ற மனஉறுதி கொண்டவனாக வாழ்ந்துள்ளான் என்பதனை அறியமுடிகின்றது.

### கருப்பத்தேவன் கதைச்சுருக்கம்

கருப்பத்தேவன் கதையில் கன்னிவாடி சமீன்தார் தன்னுடைய ஏழுகாளைகளை அடக்கிய வீரனுக்குத் தன்னுடைய நாடு நகரத்தில் பாதியைத் தருவதாகத் தோட்டியின் மூலம் அறிவிப்புச் செய்கின்றார். இதனைக் கேட்ட கருப்பத்தேவன் நாடுநகர்க்குப் பதிலாகச் சமீன்தாரின் இளைய மனைவியைப் பரிசாகக் கேட்கின்றான். இதற்குக் கன்னிவாடி சமீன்தார் ஒப்புக்கொள்கின்றார். இதன்பின்னர் சல்லிக்கட்டில் கன்னிவாடி சமீன்தாரின் ஏழுகாளைகளையும் காயம்பட்ட நிலையில் கருப்பத்தேவன் அடக்கி வெற்றியெற்று சமீன்தாரின் இளைய மனைவியைத் தன்னோடு அழைத்துச் செல்கின்றான். பின்னர் சிலநாட்களுக்குள் அவன் இறந்துவிடுகின்றான். இவனின் சகோதரர்கள் இவனுக்குச் சிலையெடுத்துப் பொங்கல் வைத்து வழிபடுகின்றனர் என்பதோடு கதை முடிகின்றது.

### சமீன்தார் பரிசு அறிவித்தல்

கன்னிவாடி சமீன்தார் தன்னுடைய காளைகளைச் சல்லிக்கட்டில்

பிடித்த வீரனுக்குப் பரிசு கொடுப்பதனைத் தோட்டியின் மூலம் அறிவிக்கின்றார். இவ்அறிவிப்பில் நாடு, நகர், நஞ்செய், புஞ்செய் ஆகியவற்றில் பாதியைத் தருவதாகக் கன்னிவாடி சமீன்தார் கூறுகின்றார். இதனைக் கேட்ட கருப்பத்தேவன் சமீன்தாரின் இளைய மனைவியைப் பரிசாகக் கேட்கின்றான். இதற்கும் சமீன்தார் சம்மதம் தெரிவிக்கின்றார். இதனை,

"ஏசாமி வங்காருசாமி
வரமிருந்து தவமிருந்து
வளத்ததோர் ஏழுகாளை
காளைபுடிக்க—ஒரு
கருத்தாளு உண்டுமோப்பா?
ஏழுகாளை புடிக்க—ஒரு
எதிராளி உண்டுமோப்பா?
இப்படி சொல்லில்லவோ—அவென்
வங்காரு சாமி
கன்னிவாடி சமீன்தாரு
சாட்டிவரும் காலத்திலே
எட்டயவரத்து கருப்பத்தேவரு
கன்னிவாடியில் நிக்கும்போது
அவர் என்னதான் சொல்லுறாரு
சக்கிலியன் மாதாரி
சாட்டிவரும் காலத்திலே
நாடுநகர் பேர் பாதி
நஞ்செ பிஞ்செ பேர்பாதி
பூமிபுலம் பேர்பாதி
இத்தனையும் தாரமென்று
சாட்டுறானாம் சந்தையிலே
நாடுநகர் வேணாமேடா
நஞ்செபிஞ்செ வேணாமேடா
பூமிபுலம் வேணாமேடா—உங்க
வங்காரு சாமிக்கு
எத்தனை பெண்சாதிடா
எங்க வங்காரு சாமிக்கு
ரெண்டு பெண்சாதி என்று சொல்லும்போது

எளயவள என் பின்னாடி
அனுப்பித்து வைத்தால்—அந்த
ஏழுகாளையும் பிடித்துத்தாரமுண்டு
எட்டயவரத்துக் கருப்பத்தேவரு
சம்பிராயம் கூறுறாரே
சக்கிலியின் மாதாரி ஓடி
கிடுகிடுண்டு ஓடிப்போயி
என்னா சொல்றான் கன்னிவாடி சமீன்தார்கிட்ட
சாமி அவர் ஊருந் தெரியவில்ல
பேருந்தெரியவில்லை
அவரு சொத்துச் சொகம் வேணாம்சாமி
பூமிபுலம் வேணாம் சாமி
நாடுநகர் வேணாம் சாமி
நஞ்செ பிஞ்செ வேணாம்சாமி
நம்ம அம்மாள
அனுபித்து விடுங்களென்று கேக்குறாரு
எளய அம்மாள
ஏழு காளையும் பிடிச்சுத் தாரமென்று
சொல்றாரு அன்னேரம்
அவன் ஊருமென்னா பேருமென்னா—அவன்
உத்த நாடுமென்னா
கேட்டுட்டு வாடா பயலே.
அப்படிச்சொல்லும்போது
அழகாக என்னா சொன்னான்
அவுரு ஊரே எட்டயபுரமாம்—அவரு
சத்தம் கேட்டா எட்டயபுரத்தில்
காகம் தண்ணி குடியாதாம்.
அப்ப காகம் தண்ணி குடியாதென்று
சொல்றாக சாமியிண்டு
வந்து சொல்லும்போது
கன்னிவாடி சமீன்தாரு
வெள்ளிக்கெழம விடிஞ்சஞ்சு நாழியளுக்கு
சல்லிக்கு வந்திருங்க
என்று போயி சொல்லிட்டு வாடா பயலே"[10]

என்ற வரிகளின் மூலம் கன்னிவாடி சமீன்தார் தன் இளைய

மனைவியினைச் சல்லிக்கட்டுப் பரிசாக அறிவித்தனை அறியமுடிகின்றது. மேலும் சமீன்தாருடைய ஏழுகாளைகளும் திறமைமிக்கன. அவை தன்னுடைய மானத்தைக் காக்கும் என்ற நம்பிக்கையில் சமீன்தார் தன்னுடைய இளைய மனைவியைப் பரிசாக அறிவித்துள்ளார் என்பதனையும் உணரமுடிகின்றது.

### கருப்பத்தேவன் ஆசிபெறல்

கருப்பத்தேவன் கன்னிவாடி சமீன்தாரின் காளைகளை அடக்கச் சல்லிக்கட்டிற்குப் புறப்படுகின்றான். அப்பொழுது அவன் தாயிடமும் அண்ணன் மனைவியிடமும் ஆசிபெறுகின்றான்.

எட்டயபுரத்துக் கருப்புத்தேவரு
குளிச்சு முழுகி ஆத்தாள நமஸ்காரம் செய்து
இடம்புரி வலம்புரிசுத்தி—ஒரு
நல்வாக்கு கேக்கும்போது
உள்ளங்கை சாத்திரத்த
ஊடுருவிப் பாத்திட்டாளே
பெறங்கையி சாத்திரத்தப்
பெரட்டியே பாத்திட்டாளே
அடநான் பெத்த மகனே
குடலுஞ் சரிய நானே
ரத்தக்குறி காணுறேனே
அண்ணன் பொண்டாட்டி
நாகம்மாளப் போயி
அவர் இடம்புரி வலம்புரிசுத்தி
நமஸ்காரம் செய்து
நல்வாக்கு கேக்கும்போது—அவ
பொங்குறாளாம் பொங்குறாளாம்
புதுப்பான பால்வடிய
ஆக்குறாளாம் ஆக்குறாளாம்
அடுப்பெல்லாம் நெய்யொழுக
பொங்கிக் கறிசமைத்துக்
கருப்பத்தேவருக்கு சோறும் வைத்து
போங்களேன் என்று சொல்லி—அவ
நல்வாக்கு குடுத்தல்லவோ
சம்பிராயம் வேணாமுடாதம்பி—நீ

போட்ட சம்பிராயத்துக்கு
நாங்க போறமென்று அவுக
கேக்குமே வேள
நான் போட்ட சம்பிராயத்துக்கு
நீங்க போனா—நான்
தோத்தவனா ஆகுமேடா என்று
கருப்புத் தேவரு
கண்ணுசெவந்து கடுங்கோவமாகி
மீசை துடிச்சு மின்கோவமாகி"[11]

என்ற கதைப்பாடல் வரிகள் மூலம் சல்லிக்கட்டிற்கு முன்பு தீயசகுனங்கள் ஏற்பட்டுள்ளதனை அறியமுடிகின்றது. தீயசகுனங்கள் கண்டு கருப்பத்தேவனின் தாயும் சகோதரர்களும் கருப்பத்தேவனைச் சல்லிக்கட்டிற்குச் சென்று காளைபிடிக்க வேண்டாம் என்று கூறுகின்றனர். இதனைக் கேட்ட கருப்பத்தேவன் கோபம் கொண்டுள்ளான். இருப்பினும் கருப்பத்தேவன் தன்னுயிரைவிடத் தான் எடுத்த சபதத்தினை முடிக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவன் என்பதனைக் கதைப்பாடல் செய்திவழி அறியமுடிகின்றது.

### கருப்பத்தேவன் காளைகளைப்பிடித்தல்

கருப்பத்தேவன் தனக்கு நிகழ்ந்த தீயசகுனங்களைக் கண்டு அச்சம் கொள்ளாமல் கன்னிவாடி சமீன்தாரின் காளைகளைச் சல்லிக்கட்டில் பிடிக்கின்றான். அப்பொழுது காளைகளின் பெருமையினைத் தோட்டி சொல்லக் காளைகளை வளர்த்தவர்கள் அவிழ்ந்துவிடுகின்றனர்.

"சக்கிலியன் வளர்த்தகாளை
சாஞ்ச கொம்பு பில்லக் காளை
ஒந்தேகத்தத் தொட்டவனை—இந்தக்
கொம்புக்குச் சங்கரந்தான சேத்துறனும்
கருப்பத்தேவர் திட்டிவாசலில் நிண்டு
வாரியெறிஞ்சுட்டாரே—ஒரு
வலதுபொறம் சாப்புப் பொறம்
கண்ணக் கெடுத்துட்டாராம்—அவர்
காலை ஒடிச்சிட்டாரே
நண்டெத் திரட்டிக் குடுத்து
நாட்டான் வளத்த காளை
நாலுகாலும் சுட்டி

நெத்தி வெள்ளக்காள—அவென்
தேகத்தத் தொட்டவனை
இந்தக் கொம்புக்குத்தான்
சங்கிரம்தான் சேக்கவேணும்
ஒங்களுக்கு என்ன அழிமோசம் வந்ததெண்டு
சொல்லிலல்லவோ கழத்திவிடு அன்னேரம்
வாரியெறிஞ்சுட்டாரு—ஒரு
வலது கையி சாப்புப் பொறம்—ஒரு
கண்ணெக் கெடுத்திட்டாரு
காதக் கரும்பிட்டாரு
காராம்பசு கன்னுக்குட்டி
அது காரிநெறக் காளங்கண்டு
வாரியெறிஞ்சு மண்டிபோட்டு உக்காந்து
கருப்பத்தேவர் நிக்கும்போது
தூக்கியெறிஞ்சிருச்சு காரிநெறக் காளங்கண்டு
தூக்கியெறிஞ்சல்லவோ குடலுஞ் சரிஞ்சிருச்சு
ரத்தப்பலி கண்டிருச்சு
மண்டிபோட்டு ஒக்காந்து—அவர்
ஒடம்போட சேத்திருக்கிட்டாரே அன்னேரம்
அது கம்மாக் கரையோரம்
மாடுதான் போயில்லவோ—அது
அந்தக் கம்மாக்கரை யோரத்திலே
மண்ண மேலாகக் கீழாக—அது
செருக்கடிக்கு நிக்குங் காலம்
நீ காத்தாப் பறந்தாலும்
கண்டதுண்டம் செஞ்சிருவேன்
தீயாப் பறந்தாலும்
இருதுண்டம் போட்டிருவேன்
அப்படி ஓட்டமுந் தன்னடையும்
வாரியடித்திட்டாரு மணவாளன் கருப்புத்தேவர்
வாரியெறிஞ்சல்லவோ கண்ணக் கெடுத்திட்டாரே
அவர் காதக் கரும்பிட்டாரே இவ்வாறு
சில்லானை தொரட்டிக் கூட்டம்
சின்னமாக் காளையும்
பள்ளன் வளத்த காளை
முதுகொம்பு மாருக்காளை"[12]

என்ற வரிகள்வழிக் கருப்பத்தேவன் ஏழு காளைகளை அடக்கியதாகக் கருப்பத்தேவன் கதைப்பாடல் கூறுகின்றது. கருப்பத்தேவன் பிடிக்கும் காளைகள் சமீன்தாரின் காளைகளாக இருந்தாலும் காளைகளை வளர்த்தவர்கள் வேறுசிலர் என்பதனை அறியமுடிகின்றது. காளைகளின் நிறம், அவற்றின் கொம்புகள், அவற்றின் திறமை ஆகியனவற்றைக் கதைப்பாடல் சுட்டுகின்றது. கருப்பத்தேவன் காரிநிறக்காளையினைப் பிடிக்கும்பொழுது காரிக்காளை அவன் வயிற்றில் குத்திவிட்டது. வயிற்றில் குத்துப்பட்ட நிலையிலும் கருப்பத்தேவன் காரிநிறக்காளையினைப் பிடித்து வெற்றிபெற்றுள்ளான். இதனால், மாடுபிடிவீரனான கருப்பத்தேவன் தான் எடுத்த சபதத்தில் தோல்வியடையக் கூடாது என்ற மனஉறுதி கொண்டவனாக இருக்கின்றான் என்பதனைக் கதைப்பாடல் மூலம் அறியமுடிகின்றது.

### கருப்பத்தேவன் சமீன்தாரின் மனைவியைப் பெறுதல்

கன்னிவாடி சமீன்தாரின் ஏழுகாளைகளையும் சல்லிக்கட்டில் கருப்பத்தேவன் அடக்கி வெற்றிபெற்றுள்ளான். கன்னிவாடி சமீன்தார் தன்னுடைய அறிவிப்புப்படி தன்னுடைய இளைய மனைவியைக் கருப்பத்தேவனோடு அனுப்பிவிடுகிறார் என்ற கருத்தைக் கீழ்க்காணும் வரிகள்மூலம் அறியலாம்.

“ஏழு மாட்டையும் பிடிச்சுக்
கருப்பத்தேவர் வண்டியில் ஒக்காந்து
மாட்டக் கட்டிப் போகும் போது
கன்னிவாடி சமீன்தாரு
பொண்டாட்டியக் கொண்டுபோயி
வண்டியில் ஏத்தி வைத்துட்டு
அந்த அரண்மனையாரு
கன்னிவாடி சமீன்தாரு
முக்காட்டப் போட்டு வீட்டுக்கு வாரானே”[13]

பின்னர் சமீன்தார் தன்னுடைய காளைகளினால் சல்லிக்கட்டில் அவருக்கு அவமானம் ஏற்பட்டதை எண்ணித் தலையில் முக்காடு போட்டுக்கொண்டு வீட்டிற்குச் சென்றார் என்பதனையும் கதைப்பாடல் கூறுகின்றது. ‘முக்காடு’ என்பது ஒருவன் தன் தோளில் போட்டிருக்கும் துண்டினை எடுத்துத் தலையில் விரித்துத் தொங்கவிடுவதாகும். இவ்வாறு போடுவதனைப் பெரும் அவமானமாகக்கருதும் வழக்கம் நாட்டுப்புற மக்களிடையே இன்றும் இருந்து வருகின்றது.

**கருப்பத்தேவனைப் புகழ்தல்**

சல்லிக்கட்டில் வெற்றிபெற்ற கருப்பத்தேவனை சல்லிக்கட்டுப் பார்க்கவந்த மக்கள் கூட்டத்தார் புகழ்ந்திருக்கின்றனர். சல்லிக்கட்டு முடிந்தவுடன் கருப்பத்தேவன் சமீன்தாரின் மனைவியைப் பரிசாகப் பெற்றுக் கொண்டு புறப்படும்பொழுது மக்கள்கூட்டம் அவனைச் சுற்றி சூழ்ந்து கொண்டு இவனைப் போன்ற வல்லமை படைத்தவனை எங்கும் பார்த்ததில்லை என்று பேசியதனை,

"இப்படிக் கொண்ட வல்லவென
எங்குமே கண்டதில்லை யென்று
அந்த ஊரு உலகமே
வண்டிக்கு வழியில்லாம"[14]

என்ற பாடல் வரிகளின்மூலம் அறியமுடிகின்றது. இன்றைய காலத்திலும் சல்லிக்கட்டில் மாடுபிடிக்கும் மாடுபிடிவீரர்களும் பணத்திற்காகவும் வேட்டித் துண்டிற்காகவும் மட்டும் மாடுபிடிக்காமல் புகழுக்காகவும் மாடுபிடித்து வருகின்றனர்.

**சமீன்தாரின் மனைவி உடன்கட்டை ஏறுதல்**

காளைகளைப் பிடித்து வெற்றிபெற்ற கருப்பத்தேவனுக்கு வயிற்றில் ஏற்பட்ட காயத்தினால் அவன் வீட்டிற்குச் சென்றவுடன் இறந்துவிடுகின்றான். அவனின் உடலுக்குத் தீ மூட்டியவுடன் கன்னிவாடி சமீனதாரின் இளைய மனைவியும் உடன்கட்டை ஏறிவிடுகின்றாள். இதனை,

"வங்காரு சாமி பொண்டாட்டிய
கூப்பிட்டுக்குப் போயி நல்ல
தீவைக்கும் காலத்திலே
பத்தி புடிச்சுருக்க
கருப்பத்தேவர் மேல
பதறி யெரியதில்
உங்கலைய்யா உன்சோறு—நான்
உடுத்தலைய்யா உன் துயில
போடலைய்யா உன்பாக்க
குதிச்சாளே கருப்பத்தேவர் மேலே
உடங்கட்டை ஏறினா அன்னேரம்"[15]

என்ற வரிகள் வெளிப்படுத்துகின்றன. சமீன்தாரின் இளையமனைவி மாடுபிடிவீரனான கருப்பத்தேவனையே கணவனாக ஏற்றுக் கொண்டுள்ளாள் என்பதனை அவள் கருப்பத்தேவன் மீது உடன்கட்டை ஏறியதன் மூலம் அறியமுடிகின்றது.

*மன்னன் சின்னாண்டி கதைச்சுருக்கம்*

மன்னன் சின்னாண்டி தன் மனைவியின் சகோதரனான முத்துமாயனால் கொலை செய்யப்படுகின்றான்.இவன் கொலைசெய்யப்பட்ட செய்தியினைக் கேட்டதும் இவன் மனைவி பிச்சையம்மாளும் இறந்துவிடுகின்றாள். மன்னன் சின்னாண்டிக்கு ஒரு பெண் குழந்தையும் இரண்டு ஆண் குழந்தைகளும் உள்ளன. இக்குழந்தைகளில் மூத்த குழந்தை பெண் குழந்தை. ஆண் குழந்தைகள் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்திருக்கின்றன. பெண் குழந்தையின் பெயர் கருத்தவர்ணம். ஆண் குழந்தைகள் படைக்கஞ்சாச் சின்னன், சாத்திரவாளி எனப் பெயர் பெற்றிருந்தன. கருத்தவர்ணம் காலப்போக்கில் தன் சகோதரர்களை வளர்த்துத் தன் தந்தையைக் கொன்ற மாமனைப் பழிவாங்கவேண்டும் என எண்ணுகின்றாள். படைக்கஞ்சாச் சின்னன் வளர்ந்து பெரியவனாக வந்ததும் தன்னுடைய நிலத்தில் உழுது கொண்டிருக்கின்றான். அப்பொழுது அவன் மாமன் முத்துமாயன் அவனிடம் சண்டை செய்கின்றான். சண்டையில் படைக்கஞ்சாச்சின்னன் வெற்றி பெறுகின்றான். தோல்வியுற்ற மாமன் முத்துமாயன் நான் சாவக்கட்டு வைத்திருக்கின்றேன். அந்தப்போட்டியில் நீ கலந்துகொள்ள வேண்டும். இல்லையென்றால் உன் அக்காள் கருத்தவர்ணத்தை நான் சிறைஎடுப்பேன் என்று கூறினான். இதனைக் கேட்ட படைக்கஞ்சாச்சின்னன் தன் தம்பி சாத்திரவாளியிடம் சென்று சாத்திரம் (குறிகேட்டல்) கேட்கின்றான். இதனைக் கேட்ட சாத்திரவாளி சாத்திரம் பார்த்துப்படைக்கஞ்சாச் சின்னனுக்குச் சாவக்காட்டில் வெற்றி கிடைக்கும் என்று கூறுகின்றான். பின்னர் படைக்கஞ்சாச் சின்னன் 'சாவக்கட்டு' என்னும் சேவல்சண்டை விளையாட்டிலும் கலந்துகொண்டு மாமன் முத்துமாயனை வென்றுவிடுகின்றான். இதனால் கோபம் கொண்ட முத்துமாயன் வெள்ளிக்கிழமை 'சல்லிக்கட்டு' நடத்துகின்றேன். அதில் நீ கலந்துகொண்டு வெற்றிபெறவில்லையெனில் உன் அக்காள் கருத்தவர்ணத்தை நான் சிறைஎடுப்பேன் என்று படைக்கஞ்சாச் சின்னனிடம் கூறுகின்றான். இதனைக் கேட்ட படைக்கஞ்சாச்சின்னன் தன் தம்பியிடம் சாத்திரம் (குறிகேட்டல்) பார்க்கின்றான். இன்று

வெள்ளிக்கிழமை உன் பேர்ராசிக்கு நல்லநாள் இல்லை. மற்றநாள் சென்று மாடுபிடித்தால் உனக்கு வெற்றி கிடைக்கும் என்று சத்திரவாளி கூறினான். படைக்கஞ்சாச்சின்னன் இன்று நான் சல்லிக்கட்டுக்குப் போகவில்லையெனில் முத்துமாயன் நம் அக்காளைச் சிறைஎடுப்பான் என்று தன் தம்பி சாத்திரவாளியிடம் சொல்லிவிட்டுச் சல்லிக்கட்டுக்குச் செல்கின்றான். சல்லிக்கட்டில் மாமன் முத்துமாயனின் ஏழு காளைகளையும் சின்னன் பிடித்து வெற்றிபெற்ற பின்னர் இறந்துவிடுகின்றான். பின்னர் படைக்கஞ்சாச் சின்னனின் தம்பி சாத்திரவாளி முத்துமாயனைக் கொலைசெய்வதோடு கதைமுடிகின்றது.

***படைக்கஞ்சாச் சின்னன் காளைகளை அடக்குதல்***

முத்துமாயனுக்கும் படைக்கஞ்சாச் சின்னனுக்கும் ஏற்பட்ட போட்டியில் சல்லிக்கட்டு நடைபெறுகின்றது. இச்சல்லிக்கட்டில் மாமன் முத்துமாயன் ஏழு காளைகளை அவிழ்த்துவிடுகின்றான். இவற்றைப் படைக்கஞ்சாச் சின்னன் அடக்கி வெற்றிபெற்ற பின்னர் இறந்துவிடுகின்றான். இதனை,

“மொதலாளி வளத்தகாளை
முன்கொம்பு பில்லக் காளை
வருகுதென்று அடிடா தமுக்குகள
அதையும் மேலவிழுந்து
கொம்பறுத்து கொலவபோட்டு வாரானாம்
படைக்கஞ்சா சின்னன்
ஏலே சக்கிலியா முருகா சில்லான சிமிட்டிப்பாயும்
சிறுமாடு காளை வருகுதென்று
அடிடா தமுக்குகள
அதையும் மேலவிழுந்து
கொம்பறுத்துக் கொலவபோட்டு
வாராராம் படைக்கஞ்சா சின்னன்,
மடிக்கொம்பு மட்டமாக்காள வருகுதென்று
அடிடா தமுக்குகள
அதையும் மேலவிழுந்து
கொம்பறுத்துக் கொலவபோட்டு
வாராராம் படைக்கஞ்சா சின்னன்
சில்லான சிமிட்டிப்பாயும் சிறுமாடு காளை வருகுதென்று
அடிப்பா தமுக்குகள
கொம்பறுத்துக் கொலவபோட்டு

வாராராம் படைக்கஞ்சா சின்னன்
காக்காயத் துரத்திப்பாயும் கரிசமா காரிக்காளை
வருதுதென்று அடிடா தமுக்குகள
அதையும் மேல விழுந்து
கொம்பறுத்துக் கொலவபோட்டு
வாராராம் படைக்கஞ்சா சின்னன்
மடிக்கொம்பு மட்டமாக்காள வருகுதென்று
அடிடா தமுக்குகள
அதையும் மேல விழுந்து
கொம்பறுத்துக் கொலவபோட்டு
வாராராம் படைக்கஞ்சா சின்னன்
சக்கிலியன் வளத்தகாளை
சாஞ்சகொம்பு சந்தனப்பில்லைக் காளை வருகுதென்று
அடிடா தமுக்குகள
இடது கையி சிமில கொம்ப வலதுகையி
பிடிச்சுப் போகும்போது
பேருபாதி தூரங் கொண்டு போயி
குத்திக் குடலச் சரிச்சிருச்சாம்
அத்தன சனத்துக்கும் தெரியாம
குடல உள்ள திணிச்சு
ஏழு மொழ மல்லுவேஷ்டியும் போட்டுக்கட்டி
ரெண்டாவது கிடுகிடுண்டு ஓடிப்போயி
அந்த மாட்ட மேலவிழுந்து
கொம்பறுத்துக் கொலவபோட்டு
வாராராம் படைக்கஞ்சா சின்னன்
அப்போது பேருபாதி தூரம் வரும்போது
கிறுகிறுன்னு வந்து என்னதான் நினைக்கிறானாம்
இவன் எல்லையிலையா நம்ம விழுந்து
உயிர விடுவதென்று நினைச்சுக்
கீழபடுத்து தகப்பனார் குழிமேட்டுக்குக்
கடகடண்டு உருண் டானே"[16]

என்ற வரிகளின்வழிப்படைக்கஞ்சாச் சின்னன் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடித்ததனை அறியமுடிகின்றது. மேலும் முத்துமாயனின் ஏழு காளைகளையும் அடக்கிய படைக்கஞ்சாச் சின்னனை ஏழாவது காளைமட்டும் வயிற்றில் குத்தியிருக்கின்றது. வயிற்றில் காயம்பட்ட

நிலையிலும் படைக்கஞ்சாச் சின்னன் தன்னைக் குத்திய காளையினை அடக்கியிருக்கின்றான். இவ்வாறு படைக்கஞ்சாச் சின்னன் முத்துமாயனின் காளைகள் அனைத்தையும் அடக்கிவிட்டு வரும்பொழுது அவனுக்கு மயக்கம் வந்துள்ளது. இதனால் தன்னுடைய உயிர் பகைவனின் எல்லையில் பிரிந்துவிடக்கூடாது என்று நினைத்துக் கீழே படுத்து தன்னுடைய எல்லைக்குப் படைக்கஞ்சாச் சின்னன் உருண்டு வந்ததனைக் கதைப்பாடல் கூறுகின்றது. மேலும் பகைவனின் எல்லையில் உயிர் நீப்பதனைப்படைக்கஞ்சா சின்னன் அவமானமாகக் கருதியிருக்கின்றான் என்பதும் தெளிவாகின்றது.

### வாடிவாசல் நாவலின் சுருக்கம்

'அம்புலி' என்னும் மாடுபிடிவீரன் சிறந்த மாடுபிடிவீரன், அவன் உசிலனூரைச் சேர்ந்தவன். அவன் உசிலனூர்ச் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்கும்பொழுது ஒரு காரிக்காளை அவனைக் குத்திக் காயப்படுத்தியது. இதனால், அவன் ஆறுமாதம் கழித்து இறந்துவிட்டான். அம்புலியைக் குத்திய காரிக்காளையினைத் 'தேவர்' என்பவரிடம் பெரியபட்டி சமீன்தார் வாங்கிவிட்டார். பின்னர் பெரியபட்டி சமீன்தார் செல்லாயிஅம்மனுக்குச் சல்லிக்கட்டு நடத்துகின்றார். இச்சல்லிக்கட்டிற்கு அம்புலியின் மகன் பிச்சி தன் தந்தையைக் குத்திய காரிக்காளையினை அடக்கிக் காட்டவேண்டும் என்ற எண்ணத்துடன் வந்துள்ளான். பிச்சிக்குத் துணையாக மருதன் என்பவன் வந்துள்ளான். பிச்சி மருதன் இருவரும் வாடிவாசல் முன் நின்று காளைகளின் போக்குகளையும் குணங்களையும் அறிந்துகொண்டிருக்கின்றானர். அப்பொழுது அங்கு ஒரு பெரியவரின் நட்பு இவர்களுக்குக் கிடைத்தது. அப்பெரியவர் பிச்சிக்கும் மருதனுக்கும் சல்லிக்கட்டில் கலந்துகொள்ள வந்திருக்கும் அனைத்துக் காளைகளின் குணங்களையும் போக்குகளையும் கூறினார். பின்னர் சல்லிக்கட்டுத் தொடங்கியது. பிச்சி சல்லிக்கட்டில் திறமைவாய்ந்த காளைகளைப் பிடித்து சமீன்தாரிடம் பரிசுகளையும் பாராட்டையும் பெற்றான். பின்னர் பிச்சி பிடிக்கவேண்டும் என்று எண்ணிய காரிக்காளை வாடியிலிருந்து வெளியேறியது. இக்காரிக்காளையினைப் பிச்சி அடக்கிவிட்டு விலகும்பொழுது கீழே விழுந்துவிட்டான். இதனால் அவனின் தொடையில் காரிக்காளை குத்திவிட்டுச் சல்லிக்கட்டுக் கூட்டத்தில் புகுந்து பலரையும் குத்தியது. காரிக்காளை பிடிபட்ட ரோசத்தில் தன்னைப் பராமரித்து வந்தவனையும் நெருங்கவிடாமல் தன் போக்கை மாற்றிக்கொண்டு கண்ணில் பட்டவர்களையெல்லாம் குத்தித்தள்ளியது.

இதனையறிந்த சமீன்தார் தன் கைத்துப்பாக்கியால் காரிக்காளையைச் சுட்டுக்கொன்றுவிட்டார் என்பதோடு நாவல் முடிகின்றது.

**பரிசுகளைச் சாற்றி காளைகளை அவிழ்த்தல்**

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளையினை அவிழ்த்து விடுமுன்னர் அதனைப் பிடித்தால் கொடுக்கக்கூடிய பரிசுகளை அறிவிப்பதனை விழாக்குழு வழக்கமாகக் கொண்டுள்ளது. இதனோடு காளையின் பெருமையினையும் அதன் உரிமையாளரின் பெயரினையும் ஊரினையும் விழாக்குழு அறிவிக்கின்றது. ஒருசில ஊர்களில் வீரமிருந்தா காளையைப் புடிச்சுக்கோ ஆம்பளைன்னா காளையைப் புடிச்சுக்கோ என்று விழாக்குழுவினர் அறிவிப்புச் செய்வதனையும் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

"ஈரேழு உலகம் அட்டதிக்குகளிலும் சயக்கொடி நாட்டிய தீரவீர பராக்கிரம பெரியபட்டி சமீன்தார் எசமானுடைய இந்தக் காரிக்காளை கொம்புக்கு நடுவே நெத்தித்திட்டுலே ரெண்டு பவுனு தங்கமா நடுவே கோத்துத் தொங்கவிட்டு இருக்குது. மாடு அணைகிறவன்னு சொல்லிக்கிட்டு அப்பன் முப்பாட்டான் பெருமையைப் பேசிக்கிட்டு இருக்கிற ஆம்புள மீசை முறுக்கிகள், பெண்சாதி பிள்ளைகுட்டி இல்லாதவங்க திறமிருந்துச்சுன்னா பொஞ்சாதியை அணையறாப்லே இந்தக் காரியை அணைஞ்சு அதைஅவுத்துக்கிடலாம். அத்தோட புடிச்ச அந்த வீரனுக்குச் சமீன்தாரு தன் கையாலே ஒரு சரிகைத் துப்பட்டாவும் இனாமாகக் கொடுப்பாரு. ஆம்புளையா இருந்தா புடுச்சிக்க பொம்பளையா இருந்தா ஓடிப்போ என்று தமுக்கடித்து அறிவிக்கப்படுகின்றது"[17] என்று வாடிவாசல் நாவல் கூறுகின்றது. இவ்வறிவிப்பில் மீசைமுளைத்த ஆண்மகனாக இருந்தால் காரிக்காளையைப் பிடித்துக்கொள். பெண்ணாக இருந்தால் ஓடிப்போ என்று கூறிச் சல்லிக்கட்டில் மாடுபிடிக்க வந்திருக்கும் வீரர்களைச் சினப்படுத்தியுள்ளனர். இதனால் காளையினை எப்படியாவது பிடித்தாக வேண்டும் என்ற எண்ணம் மாடுபிடிவீரர்களுக்கு உருவாகின்றது.

**பிச்சி காளைகளைப் பிடிக்கும்முறை**

செல்லாயி அம்மனுக்குப் பெரியபட்டி சமீன்தார் சல்லிக்கட்டு நடத்துகின்றார். இதில் மாடுபிடிவீரன் பிச்சி தன் தந்தையைக் குத்திய காரிக்காளையைப் பிடிக்கவேண்டும் என்று எண்ணி வந்து பல காளைகளைப் பிடித்துள்ளான்.

"பளையூர் காளை கொரால் வருகுது! என்ற குரல்கள் எழுந்தன. பிச்சி உசாராகி மருதனையும் உசார்படுத்தினான். பிச்சித்தம்பி! கொராலு பிசாசு! பில்லைக் காளை மாதிரி இல்லை என்று கிழவன் அவன் காதுகளில் பரபரப்புடன் சொன்னான். கொம்பு இம்புட்டுத்தான் புடிக்குக் கூட வராது. களவாணிக் கழுதை. தலையைத் திட்டிக்கு வெளியே நீட்டாது. மொட்டைக் கொம்புப் புடி வளுக்கி தட்டிச்சுன்னா விலா எலும்பு பொடிப்பொடியாய் போயிடும் வால்பக்கம் வந்து நிக்கிறபோது அந்த ஒரு மினிட்டுலே அணைஞ்சாத்தான். நல்லா பளக்கி இருக்கானுங்க இந்த முருகுப் பய இடது தோள்ளே தெரியுதே கையகல தழும்பு. மூணாம் வருசம் இது மச்சம் வச்சதுதான். கிழவன் காளைகளைப் பற்றி தனக்குத் தெரிந்த சூட்சுமத்தையெல்லாம் படபடத்துச் சொல்லிவிட்டான்.

கிழவன் சொல்லி முடிக்கவும் 'மருதா' என்று கத்தினான் பிச்சி. மருதன் பாய்ந்து குறுக்கே ஓடி இடது அணைமரத்தை அணைத்து நின்று அடைப்புக்குள் எட்டுமேல் எட்டாக வைத்து வந்த கொராலை உன்னிப்பாய்ப் பார்த்து தன்னைத் தயார்படுத்திக் கொண்டிருந்தான். கிழவன் கொடுத்த விவரங்கள் பிச்சிக்கு இருந்தன. அவன் அந்தப் பக்கத்துக்கே புதுசு. நூற்றுக்கணக்கா எங்கிருந்தெல்லாமோ வரும் மாடுகள் எல்லாவற்றின் போக்கு சுபாவத்தை முழுக்க அறிந்துவைத்து ஒருவன் வாடிவாசலில் நிற்கமுடியாது. பாதை காட்டும்போது அது கொம்பலைத்து போகிற போக்கு, வாடிக்குள்ளே அது செய்யும் தந்திரம், அது பார்க்கிற பார்வை கொம்பலைப்பு, திரும்புகிற விரைவு. இதுகளைக் கொண்டு மாட்டை நிதானிச்சு, அதுக்குத் தக்கபடி தன் உத்தியை அப்போதைக்கு அப்போது மாற்றி உபயோத்துப் பார்க்க வேண்டியதுதான். அந்தக் காளைக்கு சமாளிப்பாக என்ன நிலை எடுத்துக் கொள்வதென்று பிச்சி தனக்குள் கேள்விப் பதில் போட்டுக் கொண்டிருந்தான். வலது பக்க அணைமரத்தின் மீது கைவைத்து அவிழ்க்கப்பட்டுக் கொண்டிருந்த காளையை அளவிட்டுக் கொண்டே காளையை உருவிவிட்டு மாட்டுக்காரன் 'டுர்ரீ' என்று கத்திக்கொண்டே பிடிகயிறு தலையில் புரள பாதையை நோக்கி ஓடினான். ஓடினவன் சற்று ஒதுங்கி நின்று நடக்கப்போவதைப் பார்க்கத் தயாரானான்.

அந்தக் குறுகிய அடைப்புக்கள் நீண்டு நின்றுகொண்டு காளை முன்னால் பார்ப்பதும் பக்கங்களில் பார்ப்பதுமாக கபடமாக இருந்தது. அதன் கொம்புகள் திட்டி வாசலுக்கு ஒரு முழத்துக்கு மேலேயே அடைப்புக்குள் உள்ளடங்கி இருந்தன. மருதன் எட்டிப்பிடிக்கப் பார்த்தும்

கொம்புகள் விரலுக்குக் கூட அகப்படவில்லை. தலையைத் தூக்கி மூச்சை உதறுவதும், கொம்பை ஆட்டுவதுமாக இருந்தது.

வேறெந்த மாட்டையும் விட இது அலுக்கும்படியாக அடைப்புக்குள் அதிகநேரம் பம்மி நின்றது. வெளியே பாயும் நினைப்பே இல்லாத மாதிரி. உள் வாடிக்குள் நின்றவர்கள் கம்பால் அதன் புட்டாணியிலும் வாலுக்கடியிலும் குத்தி அதைத் தூண்டியதனைக் கூட லட்சியம் செய்யாமல் வாலை மட்டும் சுழற்றிக் கொடுத்துவிட்டு, வாடிமுன் நிழலாடும் கைகளைப் பார்த்துக் கொண்டே இருந்தது.

பெரியவர் சொன்னது விவேகமான பேச்சு என்று பிச்சி புரிந்துகொண்டான். வாடிவாசலில் நின்று அதன் கொம்பை பிடிக்க முடியாது; திமில் மீது கை போடவும் முடியாது. பின்னாலிருந்து குத்துபவர்கள் உபத்ரவம் தாங்காமல் காளை ஒரு முடிவுக்கு வந்ததுபோல் சற்று பம்மவும் அது செய்யப்போவதை யூகித்துவிட்டான். மருதா! அப்படியே கையை வீசிக்கிட்டிரு என்று சடாரென அணைமரத்திலிருந்து அட்டத்தில் விலகி மத்தி வாடிவாசலுக்கு பாய்ந்து வளைத்து நின்ற கூட்டத்தின் முன் விளும்பில் பிச்சி ஆளோடு ஆளாக நின்றான்.

அதே சமயம், கொரால் அடைப்புக்குள் இருந்தாவறே வசமாக எகிறிப் பாய்ந்து மருதன் கைக்கு மேலே உயர்ந்து, நான்கு கால்களும் தட்டென்று வாடி மத்தி தரையில் அடித்து புழுதி கிளம்ப நின்றது. எம்பி விழுந்த வேகத்தில் அதன் பரு உடல் பளுவின் அழுத்தத்தில் கால்கள் இலேசாக மடிந்தன. அந்த ஒரு வினாடிதான் பிச்சிக்கு வேண்டும். அடுத்த கணம் சமாளித்துக் கொண்டு ஆளை நெருங்கவிடாதபடி ஒரு வளையம் வந்துவிடும் காளையின் மடிந்த பின்கால்கள் பிச்சி நின்ற இடத்திற்கு நேராக இருந்தன. பாயப் போகின்றவன் மாதிரி காலை எடுத்துவைத்தவன் தடாரென நெடுஞ்சாங்கிடையாக கீழே படுத்தான். அவன் வலது கை காளையின் வலது கால்பிடிக்கு வசமாக நெருங்கிவந்தது. கையை வீசி குளம்புக்கு மேலே அடிக் கணுக்காலைப் பிடித்து மறுகையை தரையில் பதித்து உந்தி எழுந்து காளையின் காலை இழுத்தான். இமைப்பொழுதில் நடந்தது இது, தன் கால்பிடித்து இழுக்கப்படுவதை உணர்ந்து காளை விர்ரென்று உதைக்க முற்படுவதற்கு நேரம் இல்லாதபடி மூன்று கால்களால் திரும்பி, காலை இழுத்தவனைக் குத்தப் பார்த்த காளை, கால் சுண்டிய வேகத்தில் நிலைக்கமுடியாமல் பரு உடலுடன் முன் கால்கள் மடிய இடது பக்கமாக சரிந்தது. காளையின் காலை உதறிவிட்டு பிச்சி,

கொம்புக்குப் பாய்ந்தான் காலை மண்டியிட்டு கொம்பு இரண்டையும் சேர்த்து அசைக்க முடியாமல் பிடித்து அமுக்கி வலது கையால் உருமால் சுருக்கை உருவினான் பொலபொலவென அவிழ்ந்து புரண்ட உருமாலை கையில் இடுக்கிக் கொண்டு மாடு முண்டி எழுந்திருக்கும் முன்பே பிச்சி பின் பாய்ந்துவிட்டான்.

விடுபட்டதும் உதறி எழுந்த காளை ஒரு தரம் சுற்றி குறிப்பு இல்லாமல் கொம்பை அலைத்துக் கொண்டு பிடிபட்ட ரோசத்தில் பாதை தெரியாமல் வளைந்து நின்ற கூட்டத்திற்குள் நுழைந்து ஆட்களை உருட்டித் தள்ளி மொட்டைக் கொம்புகளால் தட்டிக்கொண்டும் மிதித்துக் கொண்டும் போய் பலவீனமாக இருந்த ஒரு வேலியை முட்டித் தள்ளிக்கொண்டு திசை பார்க்காமல் தன்போக்கில் ஓடியது. மாட்டுக்காரனும் அவன் கூட்டாளிகளும் அதை மறித்து பிடித்துக்கட்ட பின்னால் விரட்டி ஓடினார்கள். பின்னர் பெரியபட்டி சமீன்தார் காரிக்காளையினை அவிழ்த்துவிட்டார். காரிநிறக் காளை வாடியிலிருந்த வெளியேறியது. இதனை மாடுபிடிவீரன் பிச்சி ஒரு கையில் திமிலையும் மற்றொரு கையில் அதன் கொம்பினையும் பிடித்துக்கொண்டான். பிச்சியின் பிடியிலிருந்து விடுபட காரிக்காளை துள்ளிக் குதித்தது. காரிக்காளை துள்ளிக்குதிக்கும் பொழுது மூன்று தவ்வுக்கும் கீழே விழாமல் பிடித்து பிச்சி வெற்றிபெற்று பட்டுத்துணி அலங்காரச் சிறு தங்க நகைகள் கோர்த்திருந்த சங்கிலி ஆகியவற்றை கழற்றிக்கொண்டு காரிக்காளையினை விட்டு தாவி விழுந்து எழுந்து செல்லும் முன்னர் காரிக்காளை பிச்சியின் தொடையில் குத்திக் காயப்படுத்தியது. காரிக்காளை பிச்சியை மீண்டும் குத்தினால் அவன் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும் என்று அவனின் உதவியாளனாக வந்திருந்த மருதன் காரிக்காளையின் வாலைப்பிடித்துத் திசை திருப்பி விட்டுவிட்டு மருதன் கூட்டத்திற்குள் புகுந்துவிட்டான்"[18] என்று நாவல் கூறுவதின் மூலம் சல்லிக்கட்டில் பிச்சி காளைகளைப் பிடிக்கக் கையாண்ட உத்திமுறைகள் தெளிவாகின்றது. மேலும் மாடுபிடிவீரன் ஆபத்தில் சிக்கிக்கொண்டபொழுது அதிலிருந்து அவன் தப்பிக்க அவன் உதவியாளன் கையாண்ட முறையும் தெளிவாகின்றது. இந்த உத்திமுறைகளைப் போன்றே இன்றைய மாடுபிடிவீரர்களும் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்கும்பொழுது கையாள்கின்றனர்.

### சல்லிக்கட்டில் பிடிபட்ட காளையின் நிலை

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளை மாடுபிடிவீரனால் பிடிக்கப்படாமல் வெற்றிபெற்றால் அதற்குச் சல்லிக்கட்டு பார்க்கும்

மக்களிடத்திலும் காளையின் உரிமையாளரிடத்திலும் மதிப்பும் மரியாதையும் இருக்கின்றது. அதேகாளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனால் பிடிக்கப்பட்டுவிட்டால் சல்லிக்கட்டு பார்க்கவந்த மக்கள்கூட்டத்தினர் கேவலமாகப் பேசுகின்றனர். இதனை,

"கொராலு சாணி போட்டுக்கிட்டு போதுகுடோய்
உடையடிச்சு உளவுலெ கட்டுங்கடா
பொழிச்சலுக்குக்கூட லாயக்கு இல்லே"[19]

என்று 'வாடிவாசல்' என்னும் நாவல் கூறுகின்றது. 'குரால்' நிறத்தினையுடைய காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனால் பிடிக்கப்பட்டுவிட்டது. இதனைச் சல்லிக்கட்டுப் பார்க்கவந்த மக்கள்கூட்டம் 'சாணி போட்டுக்கிட்டுப்போகுது' என்று கூறுவது மாடுபிடிவீரனுக்குப் பயந்து ஓடுகின்றது என்பதனைக் குறிக்கின்றது. 'உடையடிச்சு உளவுலெ கட்டுங்கடா' என்பது ஆண்மைநீக்கம் செய்து (உடையடிச்சு—காயடித்தல்) உழவுத்தொழிலுக்குப் பயன்படுத்தவேண்டும் என்பதனைக் குறிக்கின்றது. மேலும் இந்தக்காளை மாடுபிடிவீரனால் சல்லிக்கட்டில் பிடிபட்டுவிட்டதால் இதற்கு வீரம் இல்லை என்றும் இவ்வாறு வீரம் இல்லாத காளையின் மூலம் இனப்பெருக்கம் (பொழிச்சல்) செய்வதால் வீரம் இல்லாத கன்றுகளே பிறக்க வாய்ப்புள்ளது. இதனால் இந்தக்காளை இனப்பெருக்கம் செய்வதற்குத் தகுதியற்றது (லாயக்கு இல்லே) என்று சல்லிக்கட்டு பார்க்கவந்த மக்கள்கூட்டம் கூறுகின்றது என்பதனை 'வாடிவாசல்' என்னும் நாவல் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும்,

" 'காரிக்காளை மண்ணைக் கவ்விரிச்சு"

'சமீன்மாட்டை கிளக்கத்தியான் பிதுக்கிப்போட்டான்'

'பெரியபட்டி சமீன்மாடு களிஞ்சிருச்சு வாடிவாசல்லே'.

'காரிக்காளை செத்துப்போச்சு'

'சமீன்தாரு சுட்டுக் கொன்னுட்டாரு"[20]

என்று சல்லிக்கட்டு பார்க்கவந்த மக்கள்கூட்டம் பேசுகின்றது என்று 'வாடிவாசல்' நாவல் கூறுகின்றது. பெரியபட்டி சமீன்தாரின் காரிக்காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனால் பிடிக்கப்பட்டுவிட்டது. இதனைச் சல்லிக்கட்டு பார்க்கவந்திருந்த மக்கள்கூட்டம் 'காரிக்காளை மண்ணைக் கவ்விரிச்சு', 'சமீன்மாடு களிஞ்சிருச்சு' என்று கேவலமாகப் பேசியுள்ளனர். இதனைக் கேட்ட சமீன்தார் தனக்கு அவமானம் ஏற்பட்டுவிட்டது என்று நினைத்து

காரிக்காளையினைக் கைத்துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிட்டார் என்பதனை 'வாடிவாசல்' நாவல் கூறுகின்றது. இன்றைய காலகட்டத்தில் சல்லிக்கட்டிற்காக மாடுவளர்க்கும் காளையின் உரிமையாளர்கள் தங்களின் காளை சல்லிக்கட்டில் பிடிபட்டுவிட்டால் உழவுத்தொழிலுக்குப் பயன்படுத்துவது, விலைக்கு விற்றவிடுதல் ஆகியவற்றை வழக்கமாகக் கொண்டுள்ளனர். சல்லிக்கட்டில் தோல்வியினைப்பெற்ற காளையினைக் காளையின் உரிமையாளர் கொன்றுவிடுவது என்ற பழக்கம் இன்றைய காலத்தில் காணப்படவில்லை.

### காளைகளுக்குச் சிலை எடுத்தல்

சல்லிக்கட்டில் மாடுபிடித்து வெற்றிபெற்று இறந்த மாடுபிடிவீரர்களுக்குச் சிலை எடுத்து அவர்களின் உறவினர்கள் வணங்கிவருவதனைப் போன்றே காளைகளுக்கும் சிலை எடுத்து வணங்கும் பழக்கம் நாட்டுப்புறமக்களிடம் காணப்படுகின்றது. காளை சல்லிக்கட்டில் கலந்துகொண்டு மாடுபிடிவீரர்களிடம் பிடிபடாமல் சிறப்பான முறையில் வெற்றிபெற்றுள்ளது. அக்காளை சல்லிக்கட்டில் தன்னைப் பிடிக்கவரும் மாடுபிடிவீரர்களை நின்றுகுத்தி வெற்றிபெற்று 'வீரபாண்டி' என்னும் ஊருக்குப் பெருமை சேர்த்துள்ளது. செல்லத்தம்மன் கோயில் காளையினைச் 'செல்லாயி காளை' என்று வீரபாண்டி ஊர்மக்கள் அழைத்து வந்தனர். அக்காளை வயதாகி இறந்தவுடன் ஊர்மக்கள் செல்லத்தம்மன் கோயிலின் முன்பு சமாதிகட்டி வைத்துள்ளனர். மேலும் செல்லத்தம்மன் கோயிலின் உட்புறமுள்ள சுவரில் செல்லத்தம்மன் கோயில் காளையின் ஓவியமும் புகைப்படமும் இருக்கின்றன. செல்லத்தம்மனுக்குப் பங்குனிமாதம் வளர்பிறைநாளில் திருவிழா நடைபெறும் பொழுது ஊர்மக்கள் செல்லத்தம்மன் கோயில்காளையின் நினைவாக மண்ணில் ஒருகாளை செய்கின்றனர். மண்ணால் செய்த காளையினை ஊர்மக்கள் செல்லத்தம்மன் கோயில் காளையின் சமாதியின் மீது வைத்து வணங்கி வருகின்றனர்."[21] மேலும் மதுரை மாவட்டத்திற்கு அண்டை மாவட்டமான சிவகங்கை மாவட்டத்திலும் ஒருசில ஊர்களில் கோயில் காளைகளுக்குச் சிலையெடுத்து வணங்கிவரும் பழக்கம் இருந்து வருகின்றது.

"சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர்" வட்டத்தில் ஆ. தெக்கூர் என்னும் ஊர் உள்ளது. இவ்வூரில் பச்சை மூங்கிலுடைய அய்யனார் கோயிலுக்கு ஒரு காளையினை ஊர்மக்கள் நேர்ந்துவிட்டுள்ளனர். பச்சை மூங்கிலுடைய அய்யனார் கோயிலுக்காக நேர்ந்துவிடப்பட்டுள்ள காளை சல்லிக்கட்டில் பிடிபடாமல் பலவீரர்களைக் குத்திக் குடலை

வெளியேற்றியிருக்கின்றது. இதனால் இக்காளை இவ்வூர் மக்களால் 'குடக்குத்திக்காளை' என்று அழைக்கப்பட்டு வந்துள்ளது. 'குடக்குத்திக்காளை' வயதாகி இறந்தவுடன் ஆ.தெக்கூர் மக்கள் கல்லில் சிலைசெய்து அதனை வணங்கி வருகின்றனர். பச்சை மூங்கிலுடைய அய்யனார்க்குக் குதிரையெடுப்புவிழா நடைபெறும் பொழுது ஊர்மக்கள் குடக்குத்திக்காளைக்கு மாலை, துண்டு, அணிவித்துச் சாம்பிராணி போட்டு வணங்குகின்றனர்."[22] இதனை வணங்குவதனால் தங்களின் துன்பங்கள் விலகிவிடும் என்று ஆ.தெக்கூர் மக்கள் நம்புகின்றனர். இதனைப் போன்றே "சிவகங்கை மாவட்டம் சிங்கம்புணரிக்கு அருகிலுள்ள முறையூரில் கருப்புச்சாமிக்காக நேர்ந்துவிடப்பட்ட காளைக்கும் சிலை எடுக்கப்பட்டுள்ளது. இச்சிலை சிங்கம்புணரியிலிருந்து திருப்பத்தூர் செல்லும் சாலையிலுள்ள மு.கோவில்பட்டி என்னம் ஊரில் அமைந்துள்ளது. கருப்புச்சாமிக்காக நேர்ந்துவிடப்பட்ட காளை சல்லிக்கட்டில் மாடுபிடி வீரர்களைக் குத்தித்தள்ளி வெற்றிபெற்று வந்துள்ளது. இக்காளை சாகும்வரை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரர்களிடம் பிடிபடாமல் வெற்றி பெற்று இறந்ததனால் இதற்கு மு.கோவில்பட்டி ஊர்மக்கள் சிலை செய்து வைத்து வணங்கி வருகின்றனர்"[23] இவ்வாறு காளைகளுக்குச் சிலை எடுத்து வணங்குவதன் மூலம் காளைகளுக்குக் கிடைத்த வெற்றியினைப் போன்று தங்களின் செயல்களும் எண்ணங்களும் வெற்றிபெறும் என்று அவ்வூர் மக்கள் நம்புகின்றனர்

***சல்லிக்கட்டுச் சிந்து***

மதுரை மாவட்டத்தில் அடங்கியிருந்த 'உத்தமபாளையம்' என்னும் ஊர் தற்பொழுது தேனிமாவட்டத்தில் அடங்கியுள்ளது. இவ்வூரில் 'கருத்தராவுத்தர்' என்பவர் வாழ்ந்திருந்தார். அவர் உத்தமபாளையத்தில் மிகவும் சிறப்பான முறையில் சல்லிக்கட்டு நடத்தியிருக்கின்றார். இச்சல்லிக்கட்டு எவ்வாறு நடந்தது என்பதனைப் புலவர் அந்தோணிமுத்துப்பிள்ளை சிந்துக்கவிதையாக எழுதியுள்ளார்:

"மற்றோர் போர் கேவலமாய் நடத்தாமலே

சரியான ஆடம்பரத்தோடு புவிமேலே

சல்லிக்கட்டுவோம் நல்லதுங்கள் மனம்போலே

ஆகட்டுமென்றார் — தோட்டிதமுக்

கடிக்கச் சொல்லென்றார்.

பாளையம் கீலகவருடம் பங்குனிமாதம்
பதினைந்தாம் தேதி பகரும் ஞாயிறு வாரம்
காளைகளுற்சவ மிக்க ஆடம்பரம்
கருத்த ராவுத்தர் நடத்திடும் விவரம்
அவ்விதமென்றே — தோட்டியுந்தமுக்
கடிக்கின்றான் சென்றே.
பத்து நாளைக்கு முன்பேரி முழங்குது
பச்சை மூங்கில் பாரம் வந்து நிறைகுது
உச்சிதமாய்ப் பலவேலை நடக்குது
ஓங்கும் சிங்காரம் நான் சொல்லமுடியாது
நல்லலங்காரம் — பிறந்தது
ஞாயிறு வாரம்.
சல்லிக்கட்டு சமீன் மாடுகள் வந்தது
தக்கபடி கோவில் ரிசபங்கள் வந்தது
கல்கவுண்டர் கருமயிலையும் வந்தது
காணும் சுருளிப்பட்டி காளையும் வந்தது
சேர்ந்ததநேக — மாடுகளும்
சிறப்புகளாக.
மாடு திறக்கும் சமயம் வந்ததென்று
மருவுங் குப்பையாண்டித் தேவர் முதலன்று
கூடி ராவுத்தரைப் போயழைக்க வென்று
கொம்பு தம்பூர் வெடி முழக்கத்துடன் சென்று
கண்டு கொண்டார்கள் — ராவுத்தரும்
நன்று என்றார்கள்.
அடிக்கடி வானம் அதிர்வெடி முழங்கவே
அதைக்கண்டு போகிற மாடுங் கலங்கவே

இடங்கிடையாமல் சனங்கள் நெருங்கவே
இன்பமாய் வாத்தியம் பம்பித் துலங்கவே
மேடையிலேற — உருவினார்கள்
மாடுகள் மீற.
அதிவேகமாய் முதல் கோவிலின் மாடும்
அந்தா வருகிற தாளைக் குத்திப்போடும்
எதிரே நில்லாமல் விலகியே ஓடும்
இதன்வேடிக்கை யொருநாள் சொல்லக் கூடும்
போகுது பாரே — அதிவேக
மாகவே நேரே.
சுருளிப்பட்டிக் காளை வருகுது பாரென்று
தூரத்திலோடுஞ் சனங்களுந் தானின்று
வரட்டும் அதையும் பிடிக்கிறேன் நான் சென்று
வாங்குகிறேன் கண்டை வேட்டியும் தானென்று
தொடுத்திடு வாரும் — அதன் வாலைப்
பிடிக்கப் போவாரும்
எரசயம்பதி சமீன்தார் காரிக்காளை
இந்தா வந்து நின்று பாய்கிற தாளை
குறியுடன் தானதைப் பிடிக்கவே தோளை
கொட்டியார்த்தார் பிடித்தால் மண்டை மூளை
தெறிக்கு மென்பாரும் — அதன்கிட்டே
நெருங்காத பேரும்.
செப்பருங் கோம்பைச் சமீன்கருமயிலை
சீறி வருகுது பாருங்கள் ஒயிலை
அப்பா அதனைப் பிடித்தவர் கயிலை
யங்கிரி சேரும் படியான அயிலைப்
போற்கொம்பு வேய்ந்து — நின்றல்லவோ
போகுது பாய்ந்து.

அந்தாபார் கல்கவுண்டர் காளை வருகுது
அதனுடன் ஆட்டுக்கடாவொன்று தெரியுது
விந்தையாகச் சனங்கள் நெருங்குது
மிக்கவே ஆளை விலக்கியே பாயுது
பிடித்தாலே பாரும் — பவுன்மாலை
கிடைக்கு மென்பாரும்.
ஆட்டுக்க டாய் கூட வேநின்று பாயுது
அப்பா அதனைப் பிடிக்க முடியாது
தாட்டிகமாகவே தன் வாலைத் தூக்குது
தன்கிட்ட வருவோரை முட்டியே தாக்குது
போகுது பாரே — கல்கவுண்டர்
காளையும் நேர.
பாருங்கள் பாளையம் காளைதா னொன்று
பாய்ந்து வருகிற வேடிக்கை நன்று
போராடுதே யெதிர் நின்றாலோ கொன்று
போடுமப்பா லெட்டி ஓடுங்களென்று
சொல்லுவார் கூடி — மரங்களில்
தொத்துவார் ஓடி.
இந்த மதுரை இலாக்காவிற்குள்ளே
இப்படிப் பேரான வேடிக்கையில்லை
வந்து மாடுபிடித் தோர்க்கெல்லாம் முல்லை
மாலை கழுத்தினில் சூட்டியே வில்லை
சந்தனம் மார்பில் — பூசுவார்கள்
விந்தையாய் நேரில்.
அரிதான மாடு பிடித்தோர்க்கும் வேட்டி
அரை மொட்டைக் காளையைப் பிடித்தோக்கும் வேட்டி
கருத்த ராவுத்தர் புகழைப் பாராட்டி
கணக்கின்றி வாங்கினார்கள் கையை நீட்டி

வேடிக்கை பாரீர் — சல்லிக்கட்டில்

விநோதத்தைக் கேளீர்."[24]

என்ற கவிதைவரிகளின் மூலம் கீலகவருடம் பங்குனிமாதம் பதினைந்தாம்தேதி கருத்தராவுத்தர் உத்தமபாளையத்தில் சல்லிக்கட்டு நடத்தியுள்ளார் என்பதனை அறிந்துகொள்ளமுடிகின்றது. மேலும் சல்லிக்கட்டு நடக்கும் சிலநாட்களுக்கு முன்பே தமுக்கடித்துப் பிற ஊர்களுக்குத் தெரியப்படுத்துதல், சல்லிக்கட்டுத் தொடங்கு முன்னர் ஊர்மக்கள் கருத்தராவுத்தரை அழைத்துவருதல், சல்லிகட்டில் முதல்மாடாகக் கோயில்மாட்டை அவிழ்த்துவிடுதல், சமீன்தார்களின் காளைகள், சுருளிப்பட்டி காளை, பாளையம்காளை, கல்கவுண்டர் காளை ஆகியவற்றினை மாடுபிடிவீரர்களால் பிடிக்கமுடியாமை, திறமையான காளைகளைப் பிடித்தவர்களுக்கும் திறமையற்ற காளைகளைப் பிடித்தவர்களுக்கும் வேட்டிகள் பரிசாக வழங்கப்பட்டிருத்தல் ஆகியவற்றையெல்லாம் கவிதை வரிகள் விளக்குகின்றன. இதனைப் போன்றே இன்றைய காலத்திலும் சல்லிக்கட்டுத் தேதியினை அறிவித்தல், ஊர்மரியாதைக்காரரை அழைத்தல், முதலில் கோயில்மாட்டை அவிழ்த்தல், சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகள் அனைத்திற்கும் வேட்டியினைப் பரிசாக அறிவித்தல் ஆகியவற்றினைச் சல்லிக்கட்டு நடத்தும் விழாக்குழுவினர் செய்துவருகின்றனர்.

### சல்லிக்கட்டில் முறைகேடுகள்

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டில் ஒருசில முறைகேடான செயல்கள் நடைபெறுகின்றன. இம்முறைகேடுகள் காளைவளர்ப்பவர்களில் ஒருசிலராலும் மாடுபிடிவீரர்களில் ஒருசிலராலும் முறைப்படுத்தப்படுகின்றன.

### காளைவளர்ப்பவர்களிடம் காணப்படும் முறைகேடுகள்

காளைவளர்ப்போரில் ஒருசிலர் சல்லிக்கட்டில் தங்களின் காளை மாடுபிடிவீரனிடம் பிடிபடாமல் வெற்றிபெற வேண்டும் என்பதற்காகக் காளை வளர்ப்பவர்கள் சிலமுறைகேடான செயல்களைச் செய்துவருகின்றனர். "சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளின் கொம்புகள் சிறியதாகவும் கூர்மையற்றும் இருந்தால் காளைகளின் உரிமையாளர்களில் ஒருசிலர் தகரத்தில் கொம்புகளைச்செய்து அதனைக் காளைகளின் கொம்புகளில் செருகிவிடுகின்றனர்"[25] தகரக்கொம்புகள் செருகப்பட்ட காளையைச் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரன் பிடிக்கும் பொழுது காளை மாடுபிடிவீரனைக் குத்தினால் காளைக்கு இயல்பாக உள்ள கொம்புகள் குத்தப்படுவதைக் காட்டிலும் அதிக வேதனையும் உயிருக்கு ஆபத்தும் ஏற்பட வாய்ப்புள்ளது. தகரக்கொம்புகள் செருகப்பட்டுள்ள காளைகளைக் காளைவளர்ப்போர்

சல்லிக் கட்டில் காளைகளை அவிழ்த்து விடுவதிலுள்ள உண்மைத்தன்மை கெட்டுவிடுகின்றது.

### காளைக்கு மது கொடுத்தல்

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் ஒருசில காளைகளுக்குக் காளைவளர்ப்போரில் ஒருசிலர் மது கொடுத்துச் சல்லிக்கட்டில் அவிழ்த்து விடுகின்றனர். "காளைவளர்ப்போரில் ஒருசிலர் 'சாராயம்' என்னும் மதுவைக் கொடுத்துச் சல்லிக்கட்டில் தங்களின் காளையினை அவிழ்த்து விடுகின்றனா"[26] காளைவளர்ப்போரால் மது கொடுக்கப்பட்ட காளை சல்லிக்கட்டில் மக்கள்கூட்டத்தையும் மாடுபிடிவீரர்களையும் பார்த்து அச்சம் கொள்ளாமல் தன்னைப் பிடிக்க வருபவர்களைத் தாக்க முற்படும் எனக் காளைவளர்ப்போர் கருதுகின்றனர். காளைவளர்ப்பவர்களின் ஒருசிலர் தங்களின் காளைக்குச் சாராயம் கொடுத்துச் சல்லிக்கட்டில் அவிழ்த்துவிடுவது சல்லிக்கட்டின் உண்மைத்தன்மையைக் கெடுக்கக் கூடிய முறைகேடான செயலாக இருப்பதனையும் அறிந்து கொள்ளமுடிகின்றது.

### காளைவளர்ப்போர் மாடுபிடிவீரன் மோதல்

காளைவளர்ப்போர் தங்களின் காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரர்களால் அடக்கப்பட்டுவிட்டால் காளைவளர்ப்பவர்களில் ஒருசிலர் தன்னுடைய ஆட்களை வைத்து மாடுபிடிவீரர்களைத் தாக்குகின்றனர். சல்லிக்கட்டில் மாடுபிடிக்க வரும் மாடுபிடிவீரர்கள் நான்கு அல்லது அய்ந்து பேராகத்தான் வந்திருப்பார்கள். ஆனால், காளை வளர்ப்போர் சல்லிக்கட்டிற்குக் காளைகளைக் கொண்டுவரும்பொழுது சுமார் பத்து அல்லது பதினைந்து ஆட்களுடன் வந்திருப்பார்கள். இதனால், காளைவளர்ப்பவர்கள் தங்களின் காளையினைப் பிடித்த மாடுபிடிவீரனைத் தாக்கவேண்டும் என எண்ணினால் காளை வளர்ப்பவர்களுக்கு மாடுபிடிவீரனைத் தாக்குவது எளிதாகின்றது. சில இடங்களில் மாடுபிடிவீரன் காளைவளர்ப்பவரால் கொலை செய்யப்பட்டுள்ள செய்தியும் இடம்பெற்றுள்ளது. அழகாபுரியில் நடந்த சல்லிக்கட்டு நிகழ்ச்சி சிறியதுதான். ஆனால், கொலையில் முடிந்தது.

"மாட்டை அவிழ்த்துவிட்டவுடன் அது அடங்காத காளை என்பதைப் புரிந்துகொண்ட ஒருத்தன் அணைகிற பாவனையில் சடக்கென்று கீழே குனித்து ஒரு கை மண் அள்ளி மாட்டு மூஞ்சியில் வீசியிருக்கின்றான். நிலைதப்பிய அந்தக்காளை சமாளித்துப் பயங்காட்டி

அகப்படாமல் ஓடித்தப்பியது. ஆனால், மாட்டை அவிழ்த்துவிட்டு அதன் பின்னாடியே ஓடிவந்தவனுக்கும் மண் வீசியவனுக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது. அடுத்தடுத்து மாடுகள் ஓடிவந்து கொண்டிருந்த நிலையிலும் அவ்விருவரும் கட்டிப்புரண்டார்கள். மஞ்சுவிரட்டு நடத்தியவர்கள் குறுக்கிட்டுச் சமாதானம் செய்திருக்கிறார்கள். அதற்குள் மாடு வளர்ப்புக்காரர்களுக்குச் சேதி போய்விட்டது. "யெல... மாடு மூஞ்சியிலே *மண் வீசலடா... நீ... எம் முகத்தில் வீசியிருக்கே... மூணுநாளைக்குள்ள* அதோட பலன் தெரியும்... என்று கருவிவிட்டுப் போன மூணாவது நாளில் மண்வீசியவர் பிணமாகக் கிடந்தார்."[27] சல்லிக்கட்டு என்னும் விளையாட்டில் கலந்துகொள்ளும் காளைகளை மாடுபிடிவீரன் அடக்கிப் பரிசு பெறுவதே சல்லிக்கட்டு விளையாட்டின் மையநிகழ்ச்சியாகும். இதில் மாடுபிடிவீரன் காளையின் மூஞ்சியில் மண் அள்ளி வீசிக் காளையினைப் பிடிக்க மாடுபிடிவீரன் முயற்சித்த சிறுதவற்றினைக் காளையின் உரிமையாளர் பொறுத்துக் கொள்ளும் மனப்பக்குவம் இல்லாமல் காளையின் உரிமையாளர் சல்லிக்கட்டு நடந்து முடிந்த இரண்டு நாட்கள் கழித்து மாடுபிடிவீரனைக் கொலைசெய்துள்ளார் என்ற கருத்தின் மூலம் சல்லிக்கட்டில் மாடுபிடிக்கச் செல்லும் மாடுபிடிவீரர்களின் உயிருக்குப் பாதுகாப்பு இல்லை என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது. "மேல்சாதிக்காரங்க மாட்டத் தாழ்ந்தசாதிக்காரன் புடிச்சிட்டா அடிக்க வந்துராங்க என்று வருத்தத்துடன் கூறினார். தாழ்த்தப்பட்ட பிரிவைச் சார்ந்தவரும் அலங்காநல்லூரில் பலமுறை பரிசுபெற்றவருமான அய்யூர் அயோத்தி"[28] மேல்சாதிக்காரர்களின் காளையினைச் சல்லிக்கட்டில் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த மாடுபிடிவீரன் பிடித்தால் காளையின் உரிமையாளர் மாடுபிடிவீரனை அடிக்க வருவதாக அயோத்தி சொல்வது சரியான கருத்து என்றாலும் தாழ்த்தப்பட்ட பிரிவைச் சாராத மாடுபிடி வீரனும் சல்லிக்கட்டில் காளையின் உரிமையாளர்களால் தாக்கப்படுகின்றான் என்ற செய்தியினை உறுதிசெய்யும் கருத்துக்களும் இடம்பெற்றுள்ளன. "சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னர் 'சாப்டூர்' என்னும் ஊரில் நடைபெற்ற சல்லிக்கட்டில் 'பெரிய பூலாம்பட்டி' என்னும் ஊரிலுள்ள தவசித்தேவர் என்னும் மாடுபிடிவீரன் 'வடக்கத்தியான்பட்டி' என்னும் ஊரிலுள்ள பள்ளர் சமூகத்தைச் சார்ந்த ஒருவரின் காளையைப் பிடித்து விழாக்குழுவினரிடம் பரிசுகளைப் பெற்றுள்ளார். இதனை அறிந்த வடக்கத்தியான்பட்டி என்னும் ஊரிலுள்ள பள்ளர் சமூகத்தினர் தங்களின் ஊரைச் சார்ந்தவரின் காளையைச் சல்லிக்கட்டில் அடங்கிய மாடுபிடிவீரனைத் தாக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் 'தவசித்தேவர்'

என்னும் மாடுபிடிவீரனைத் தாக்க முற்படும்பொழுது 'பெரிய பூலாம்பட்டி' என்னும் ஊரிலுள்ள தேவர் சமூகத்தினர் தங்கள் ஊரிலுள்ள 'தவசித்தேவர்' என்னும் மாடுபிடிவீரனைத் தாக்கமுற்படும் வடக்கத்தியான்பட்டி பள்ளர் சமூகத்தினரோடு சண்டையிட்டுக் கலவரம் செய்துள்ளனர். இந்தச் சல்லிக்கட்டுச் சம்பவம் சாதிக்கலவரத்தில் முடிந்தது."[29] மேலும் 'உசிலம்பட்டி' என்னும் ஊருக்கருகிலுள்ள 'பொட்டுலுப்பட்டி' என்னும் ஊரில் நடைபெற்ற சல்லிக்கட்டில் 'மட்டப்பாறை' என்னும் ஊரில் வசிக்கும் அய்யர் (பிராமணர்) என்ற இனத்திலுள்ள ஒருவரின் காளையை 'தவசித்தேவர்' என்னும் மாடுபிடிவீரன் அடக்கி விழாக்குழுவினரிடம் பரிசினைப் பெற்றுள்ளார். இதனைக் கண்ட அய்யரின் ஆதரவாளர்கள் 'தவசித்தேவர்' என்னும் மாடுபிடிவீரனை அடித்துத் தாக்கினார்கள். அப்பொழுது பொட்டுலுப்பட்டி ஊர்மக்கள் அய்யரின் ஆதரவாளர்களைத் தடுத்துநிறுத்தி 'தவசித்தேவர்' என்னும் மாடுபிடிவீரனைக் காப்பாற்றியுள்ளார்கள்."[30] மேற்கூறிய தகவல்களின் அடிப்படையில் நோக்கும் பொழுது சல்லிக்கட்டில் காளையினைப் பிடித்த மாடுபிடிவீரன் தாழ்த்தப்பட்ட சாதிக்காரனாக இருந்தால் மட்டும் ஒருசில காளைவளர்ப்போரால் தாக்கப்படுகின்றான் என்ற கருத்து மறுக்கப்படுகின்றது. மேலும் சல்லிக்கட்டில் காளையினைப் பிடித்த மாடுபிடிவீரன் எந்தச்சாதிக்காரனாக இருந்தாலும் ஒருசில காளைவளர்ப்போரால் தாக்கப்படுகின்றான் என்ற கருத்து வலியுறுத்தப்படுகின்றது.

### *மாடுபிடிவீரர்கள்-காளைவளர்ப்போரின் முறைகேடுகள்*

மாடுபிடிவீரர்களும் காளைவளர்ப்பவர்களும் சேர்ந்து சல்லிக்கட்டில் முறைகேடான செயலைச் செய்துவருகின்றனர். காளைவளர்ப்போரில் ஒருசிலர் சல்லிக்கட்டில் தங்களின் காளைபிடிபடாமல் வருவதற்குச் சல்லிக்கட்டு நடைபெறும் பகுதியிலுள்ள திறமைமிக்க மாடுபிடிவீரர்களுக்குக் காளைவளர்ப்போரில் ஒருசிலர் பணம் கொடுத்துத் தங்களின் காளையினைச் சல்லிக்கட்டில் பிடிக்கமுடியாதபடிச் செய்துவிடுகின்றனர் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளையினை மாடுபிடிவீரர்கள் பிடித்துவிட்டால் காளையின் உரிமையாளருக்குச் சல்லிக்கட்டு வட்டாரத்தில் பெருமை இழக்கப்படும் என்பதற்காகக் காளை வளர்ப்போரில் ஒருசிலர் மாடுபிடி வீரர்களுக்குப் பணம் கொடுத்துச் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் தங்களின் காளையினைப் பிடிக்கமுடியாதபடி செய்துவிடுகின்றனர். மாடுபிடிவீரர்கள் காளைவளர்ப்பவரிடம் பணம் வாங்கினால் பணம்

கொடுத்தவரின் காளையினை மாடுபிடிவீரர்கள் பிடிப்பதுபோல் பாவனை செய்து மற்ற மாடுபிடிவீரர்களையும் பிடிக்கவிடாமல் தடுத்துக் காளையினை வெற்றிபெறச் செய்துவிடுகின்றனர். மாடுபிடிவீரர்கள் காளைவளர்ப்பவரிடம் பணம் வாங்கிக் கொண்டு சல்லிக்கட்டில் காளையினைப் பிடிக்காமல் விட்டுவிடுவது சல்லிக்கட்டு விளையாட்டில் மாடுபிடிப்பதிலுள்ள உண்மைத்தன்மை சிதைந்துவிடுகின்றது. இது தவிர மாடுபிடிவீரர்கள் கடைபிடிக்கும் முறைகேடான செயல்கள் சல்லிக்கட்டு சார்ந்த நம்பிக்கைகள் என்ற இயலில் விளக்கப்பட்டுள்ளது.

### சல்லிக்கட்டு விளையாட்டில் பணிகள்

'சல்லிக்கட்டு' என்னும் வீரவிளையாட்டினைத் தொடங்கி முடிப்பதற்குள் ஊர்மக்கள் சிலபணிகளைச் செய்துவருகின்றனர். சல்லிக்கட்டு நடத்தும் பொருட்டு, சல்லிக்கட்டு நடத்தப்படும் தெய்வத்திற்குப் பூசாரியாக இருத்தல், வாடிகட்டுதல், காவல், பறைசாற்றுதல் போன்ற பணிகளை ஊர்மக்கள் செய்துவருகின்றனர். இப்பணிகள் வெவ்வேறு சாதியினரால் செய்யப்பட்டு வருகின்றன.

### பூசாரியாக இருத்தல்

'சல்லிக்கட்டு' என்னும் வீரவிளையாட்டு ஊர்த்தெய்வங்களுக்காக ஊர்மக்களால் நடத்தப்பட்டு வருகின்றது. ஊர்த்தெய்வங்களுக்குக் கோயில் பூசாரியாக ஊரிலுள்ள ஒருசில இனமக்களே பணிசெய்து வருகின்றனர். அய்யனார் கோயிலுக்கு நடத்தப்படும் சல்லிக்கட்டு விழாவில் வேளார் (குயவர்) என்ற சாதியினைச் சேர்ந்தவர் பூசாரியாக இருக்கின்றார். அய்யனார் சாமிக்குரிய குதிரையினைக் குயவர்கள் செய்வதனால் அய்யனார்சாமி குயவர்களுக்குக் கட்டுப்படும் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர் என்று கருதப்படுகின்றது. இதனடிப்படையில் நாட்டுப்புறங்களிலுள்ள அய்யனார்கோயிலுக்குப் பூசாரியாகக் குயவர் இனத்தவர்களை ஊர்மக்கள் நியமித்திருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. இவர்களுக்கு ஊர்மக்கள் மானியமாக நிலம் வழங்கியுள்ளனர். ஓர் ஊரில் பெருமாள்சாமி ஊர்ப்பொதுத்தெய்வமாக இருந்தால் அவ்வூரில் பலஇனங்கள் இருந்தாலும் பூசாரியாக நாயக்கர் இனத்தில் ஒருவரை ஊர்மக்கள் நியமித்துள்ளனர். முக்கம்பட்டியில் சிவனாயிஅம்மன் கோயிலுக்குப் பறையர் இனத்தவரில் ஒருவரைப் பூசாரியாக ஊர்மக்கள் நியமித்துள்ளனர். இக்கோயிலுக்கு ஊர்ப்பொதுமக்கள் சல்லிக்கட்டு நடத்துகின்றனர். மேலும் அச்சம்பட்டி என்னும் ஊரில் நொண்டிச்சாமிக்குப் பூசாரியாகப் பறையார் இனத்தவர்களில் ஒருவரைப் பூசாரியாக ஊர்மக்கள்

நியமித்துள்ளனர் இக்கோயிலுக்கும் ஊர்மக்கள் சல்லிக்கட்டு நடத்துகின்றனர். சிவனாயி அம்மன், நொண்டிச்சாமி ஆகிய கோயில்கள் பறையர்களின் குலதெய்வமாக இருந்திருக்கலாம். பின்னர் இத்தெய்வத்தின் சீற்றத்தைப்போக்க அவ்வூர்மக்கள் சல்லிக்கட்டு நடத்தி ஊர்ப்பொதுத் தெய்வமாக ஏற்றுக்கொண்டிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. இக்கோயில்களில் அருளாடியாகப் பறையர் இனத்தவர்களே உள்ளனர்.

**காவல்**

மதுரைப் பகுதிகளில் விவசாயப் பொருட்களைத் திருடர்களிடமிருந்து பாதுகாக்க முக்குலத்தோர் இனத்தவர்களை ஊர்மக்கள் நியமித்துள்ளனர். இப்பழக்கம் பழங்காலம்முதல் இன்றுவரை மதுரை மாவட்டத்தில் நடைமுறையில் உள்ளது. இதனைப் போன்றே முக்குலத்தோர் இனத்தவர்களையே ஊர்மக்கள் ஊர்த்தெய்வ வழிபாட்டிற்கும் காவலாகப் பயன்படுத்தியுள்ளனர். ஊர்த்தெய்வ வழிப்பாட்டின்போது ஊர்த்தெய்வ வழிபாடு நடத்தக்கூடிய ஊரின்மீது பகையுணர்வு கொண்டுள்ள ஊர்மக்கள் ஏதேனும் ஒருவகையில் தீங்கு செய்து வழிபாட்டினைத் தடுக்காமல் இருப்பதற்குக் காவல்பணி பயன்படுகிறது. மேலும் ஊர்த்தெய்வ வழிப்பாட்டில் ஒன்றான சல்லிக்கட்டின்போது கலவரம் ஏற்படாமல் தடுப்பதற்கும் காவல்பணி பயன்படுகிறது. முக்குலத்தோர் என்று சொல்லப்படுகின்ற கள்ளர்,மறவர்,அகமுடையர் ஆகிய இனங்களில் கள்ளர் என்ற இனத்திற்குக் காவல்பணியினை ஊர் மக்கள் கொடுத்துள்ளனர். கள்ளர் என்ற இனம் இல்லாத ஊர்களில் மறவர் இனத்திற்குக் காவல்பணியினை ஊர்மக்கள் கொடுக்கின்றனர். கள்ளர்,மறவர் ஆகிய இனங்கள் இல்லாத ஊர்களில் அகமுடையர் என்ற இனத்திற்குக் காவல் பணியினை ஊர்மக்கள் கொடுத்துள்ளனர். முக்குலத்தோர் இனம் இல்லாத ஊர்களில் காவல்பணிக்குப் பக்கத்திலுள்ள ஊரில் வாழும் கள்ளர் இனத்தவர்களை ஊர்மக்கள் நியமித்துள்ளனர்.

**வாடி கட்டுதல்**

'வாடி' என்பது 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டில் காளைகளை நிறுத்தி அறிவிப்புச் செய்துவிட்டு அவிழ்த்துவிடும் இடமாகும். இவ்வாறு பலஊர்களில் வாடிநிரந்தரமாகக் கட்டப்பட்டிருக்கும் சிலஊர்களில் வாடி தற்காலிகமாகக் கட்டப்பட்டிருக்கும்.

**நிரந்தரமான வாடி**

வாடி என்பதனை ஊர்மக்கள் ஊரின் பொதுவிடத்தில் கட்டி வைத்துள்ளனர். வாடியின் சுவர்கள் செங்கல் அல்லது கல்லால்

கட்டப்பட்டிருக்கும். ஒருசில ஊர்களில் வாடியின் சுவர்கள் மண்ணால் எழுப்பப்பட்டிருக்கும். வாடிக்கு இரண்டு வாயில்கள் உள்ளன. பின் வாயிலின் வழியே காளையைக் காளையின் உரிமையாளர்கள் கொண்டுவந்து நிறுத்தி முன்வாயிலின் வழியாக வெளியேற்றுவார்கள்.

### தற்காலிகமான வாடி

வாடிகட்டுவதறகுச் சுவர் எழுப்பப்படாமல் மரக்கட்டைகளை ஊன்றி அவற்றில் கம்பு அல்லது பலகைகளை ஆணியால் அறைந்து வைத்து ஊர்மக்கள் வாடியாகப் பயன்படுத்தப்படுகின்றனர். தற்காலிகமான வாடியினைக் கட்டும்பணியினை ஆசாரி, பள்ளர், பறையர் இனத்தவர்களில் ஊர்வேலை பார்க்கின்றவர்கள் செய்துவருகின்றனர்.

### அறிவிப்புச் செய்தல்

ஓர்ஊரில் சல்லிக்கட்டு நடைபெற இருந்தால் அதனை அவ்வூர்மக்கள் பிறஊர்களுக்குத் தெரியப்படுத்துகின்றனர். பிற ஊர்களுக்குத் தெரியப்படுத்தும் வேலையினை ஊர்த்தோட்டி வேலைசெய்யக் கூடியவர் ஒப்புக்கொள்கின்றார். ஊர்த்தோட்டி வேலையினைபறையர் இனத்தவர்களில் ஒருவர் ஏற்றுச்செய்து வருகின்றார். பறையர் இனம் இல்லாத ஊர்களில் சக்கிலியர் இனத்தில் ஒருவர் ஊர்த்தோட்டி வேலையினை ஏற்றுச் செய்துவருவதும் நாட்டுப்புறத்தில் ஊரகப்பணி அமைப்பில் வழக்கமாகவுள்ளது. ஓர் ஊரில் சல்லிக்கட்டு நடைபெற இருந்தால் அவ்வூரில் தோட்டி வேலைபார்க்கக் கூடியவர் சந்தைகளிலும் பிறஊர்களில்நடைபெறும் சல்லிக்கட்டுகளிலும் 'தமுக்கு' என்னும் இசைக்கருவியினை இயக்கி சல்லிக்கட்டு நடைபெறும் ஊர்,நாள் ஆகியவற்றை அறிவிப்பார். தமுக்கு என்னும் இசைக்கருவியினை இயக்கி அறிவிப்புச் செய்வதோடு மட்டுமல்லாமல் இக்காலத்தில் சுவரொட்டி விளம்பரம், செய்தித்தாள், வானொலி ஆகியவற்றின் மூலமும் சல்லிக்கட்டு நடைபெறுவதனை விழாக்குழுவினர் பிறஊர்மக்களுக்குத் தெரியப்படுத்துகின்றனர்.

### சமூக ஒற்றுமை

நாட்டுப்புறங்களில் பல இனக்குழுமக்கள் வாழ்கின்றனர். இவ்வினக்குழுமக்கள் தங்களுக்குள் கருத்து வேறுபாடின்றி ஒற்றுமையுடன் ஊர்த்தெய்வ வழிபாட்டினை நடத்திச் 'சல்லிக்கட்டு ' என்னும் விளையாட்டினையும் நடத்துகின்றனர்.

**தாழ்த்தப்பட்ட மக்கள் பெறுமிடம்**

நாட்டுப்புறங்களில் பெரும்பாலும் மேல்சாதியினரே ஊர்த்தெய்வ வழிப்பாட்டினை நடத்திச் சல்லிக்கட்டுவிழா நடத்துகின்றனர். ஊர்த்தெய்வ வழிப்பாட்டில் பெரும்பாலும் மேல்சாதியினரே "அருளாடி"[32] களாக இருந்து சல்லிக்கட்டுவிழா தொடங்க உத்தரவு கொடுத்தவுடன் சல்லிக்கட்டுத் தொடங்குகின்றது. ஒருசில ஊர்களில் ஆதிதிராவிட இனத்தவர்கள் அருளாடியாக இருந்து சல்லிக்கட்டுவிழா தொடங்க உத்தரவு கொடுத்தவுடன் சல்லிக்கட்டுத் தொடங்குகின்றது. இதற்குச் சான்றாக அலங்காநல்லூர்க்கு அருகிலுள்ள அச்சம்பட்டி என்னும் ஊரில் நொண்டிச்சாமி என்னும் ஊர்த்தெய்வத்திற்காக ஊர்மக்கள் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர். இவ்வூரில் ஆதிக்கச் சாதியினராகக் கருதப்படும் கள்ளர் இனத்தவர்கள் சல்லிக்கட்டு நடத்தும் முழுப்பொறுப்பினையும் ஏற்றுக்கொள்கின்றனர். ஆனால் நொண்டிச்சாமியின் அருளாடி, பூசாரி ஆகிய பொறுப்பினைப் பறையர் இனத்தவர்கள் ஏற்றுக்கொண்டு நொண்டிச்சாமியின் வழிபாட்டினை முடித்துவிட்டு வந்து சல்லிக்கட்டு நடத்துவதற்கு ஊர்மக்களிடம் உத்தரவு கொடுக்கின்றனர். பின்னர் கள்ளர் இனத்தவர்களும் கவுண்டர் இனத்தவர்களும் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளவிருக்கும் வீரர்களுக்கும் காளைகளுக்கும் கொடுக்கப்படவுள்ள விருதுத்துணிகளைத் தூக்ககிக்கொண்டு பெருமாள்கோவிலில் வழிபட்டுத் தீர்த்தம் தெளித்துவிட்டுப் பின்னர் வாடிவாசலுக்குச் சென்று சல்லிக்கட்டினைத் தொடங்குகின்றனர். இதனைப் போன்றே திருவாதவூருக்கு அருகிலுள்ள முக்கம்பட்டி என்னும் ஊரில் சிவனாயிஅம்மன் கோவிலின் அருளாடியாகப் பறையர் இனத்தவர்கள் இருந்து இறைவழிபாட்டுச் சடங்கினை முடித்துவிட்டு வந்தபின்னர் சிவனாயிஅம்மனின் அருளாடியின் உத்தரவின்பேரில் கள்ளர் இனத்தவர்கள் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர். மேலும் செக்காணூரனி என்னும் ஊருக்கு அருகில் கொ.புளியங்குளத்தில் பிரமலைக்கள்ளர் இனத்தவர்கள் நடத்தும் சல்லிக்கட்டில் தப்படித்துத் (தப்பு என்னும் இசைக்கருவியினை இயக்கிப் பறைசாற்றிய) தோட்டி வேலைபார்த்த பறையருக்குச் சல்லிக்கட்டு முடிந்தவுடன் பரிவட்டம் கட்டி வெற்றிலை, பாக்கு, சந்தனம் ஆகியவற்றை ஊர்மக்கள் கொடுத்து மரியாதை செய்கின்றனர். நாட்டுப்புறமக்களிடம் உள்ள மரபுவழிப் பழக்கங்களை வைத்துக்கொண்டு நோக்கும்பொழுது ஒருசில ஊர்களில் ஆதிதிராவிட இனத்தவர்களும் சல்லிக்கட்டு விழாவில் பங்கு பெற்றதோடு

மட்டுமல்லாமல் முக்கியப்பங்கினையும் வகித்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. இதுதவிர ஆதிதிராவிட இனத்தவர்கள் மட்டும் வசிக்கக்கூடிய ஊர்களில் அவர்களே எல்லாப் பொறுப்புக்களையும் வகித்துக் கொண்டுச் சல்லிக்கட்டினை நடத்திவருகின்றனர்.

### கள்ளரும் பள்ளரும்

சமீபகாலமாகத் தமிழகத்தின் தென்மாவட்டங்களில் முக்குலத்தோர் இனத்திற்கும் பள்ளர் இனத்திற்கும் கருத்து முரண்பாட்டினால் கலவரம் ஏற்பட்டுப் பொருட்சேதம், உயிர்ச்சேதம் ஏற்பட்டுள்ளன. ஆனால் முக்குலத்தோர் என்று சொல்லப்படுகின்ற தேவர் இனத்தின் ஒரு பிரிவினராகக் கருதப்படும் கள்ளர் இனத்தினர்களும் தேவேந்திரகுல வேளாளர் என்று சொல்லப்படுகின்ற பள்ளர் இனத்தவர்களும் இணைந்து குலதெய்வ வழிபாட்டினை முடித்துச் சல்லிக்கட்டு நடத்தும் ஊரும் மதுரை மாவட்டத்தில் உள்ளது. மதுரைக்குக் கிழக்கில் 13 கி.மீ. தொலைவில் சக்குடி என்னும் ஊர் உள்ளது. "இவ்வூரில் 'முப்புலி'என்னும் நாட்டுப்புறத் தெய்வம் உள்ளது. இதனை அவ்வூரில் வசிக்கும் கள்ளர் இனத்தில் ஒரு பிரிவினரும் பள்ளர் இனத்தில் ஒருபிரிவினரும் இணைந்து வழிபடுகின்றனர். 'முப்புலி' என்னும் தெய்வத்தின் அருளாடிகளாகக் கள்ளர் இனத்தில் சிலரும் பள்ளர் இனத்தில் சிலரும் இருக்கின்றனர். ஆனால் 'முப்புலி' என்னும் தெய்வத்தின் பூசாரியாகக் கள்ளர் இனத்தில் ஒருவர் இருக்கின்றார். இவர்கள் அனைவரும் ஒன்றுகூடி மாசிமாதம் பாரிவேட்டை என்னும் நாளில் 'முப்புலி' என்னும் தெய்வத்தின் அருளாடிகள் 'முப்புலி' சாமியை வணங்கி அருளாடிவிட்டுச் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர்."[33] இச்சல்லிக்கட்டு குலதெய்வ வழிபாட்டில் நடைபெறுவதால் அதற்கான நிதிகளைக் குலதெய்வக் குடும்பங்களே கொடுக்க வேண்டியுள்ளதால் சல்லிக்கட்டிற்குப் போதுமான நிதியினைச் சேகரிக்க முடியவில்லை. எனவே, சல்லிக்கட்டிற்குரிய பரிசுப்பொருட்கள் மிகவும் குறைவாகவே சேகரிக்க முடிகின்றதாகையால் காளைகளும் மாடுபிடிவீரர்களும் அதிகமாகச் சல்லிக்கட்டில் கலந்துகொள்வதில்லை. இதனால் சக்குடியில் நடைபெறும் சல்லிக்கட்டு மிகவும் எளியமுறையில் நடைபெறுகின்றது. மேலும், சக்குடியில் நடைபெறும் குலதெய்வ வழிபாட்டுச் சல்லிக்கட்டினை வைத்துப்பார்க்கும்பொழுது பழங்காலத்தில் சாதிய வேற்றுமை இல்லாமல் நாம் எல்லோரும் தமிழ் இனம் என்ற உணர்வோடு மக்கள் வாழ்ந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

## சல்லிக்கட்டில் மரியாதைகள்

சல்லிக்கட்டு என்னும் விளையாட்டு இறைவழிபாடு செய்து முடித்த பின்னரே தொடங்குகின்றது. இறைவழிப்பாட்டின்போது கோயில் பூசாரி இறைவனுக்குப் பூசை செய்துவிட்டுத் திருநீறு முதலில் யாருக்குக் கொடுக்கவேண்டும என மக்கள் வரிசைப்படுத்தியுள்ளனர். இந்த மரியாதை ஒவ்வொரு ஊருக்கும் சற்றுமாறுதல்களுடன் அமைந்துள்ளது. ஓர்ஊரில் இறைவழிபாட்டு விழா எடுக்கும்பொழுது அவ்வூரில் அய்யர் என்று சொல்லக்கூடிய அந்தணர் இனம் வசித்துவந்தால் அந்தணர் இனத்தில் ஒருவருக்கும் அந்தணர் வசிக்காத ஊர்களானால் பிள்ளை அல்லது முதலியார் இனத்தில் ஒருவருக்கும் மரியாதை கொடுக்கப்படுகின்றது. இரண்டாவதாக அவ்வூரில் அதிகமாக வசிக்கும் மக்களில் ஒருசில கூட்டத்தார்களுக்கும் அடுத்தப்படியாகக் குறைவாக வசிக்கக்கூடிய இனத்திற்கும் மரியாதை கொடுக்கப்படுகின்றது. மரியாதைக்காரர்களுக்குத் திருநீறு கொடுக்கும்பொழுது மரியாதைக்காரர்களில் யாரேனும் வரவில்லையெனில் அவர்களுக்குரிய திருநீறு கோயிலின் படிக்கட்டிலோ அல்லது வானோக்கியோ பூசாரியினால் எறிந்துவிடப்படுகின்றது. இறைவழிபாட்டின்போது திருநீறு கொடுப்பதில் படிநிலைகள் இருப்பதனைப் போன்றே சல்லிக்கட்டில் காளைகளை அவிழ்த்துவிடுவதிலும் படிநிலைகள் உள்ளன. சல்லிக்கட்டு எந்தத் தெய்வத்திற்கு நடத்தப்படுகின்றதோ அந்தத் தெய்வத்திற்கு ஊர்மக்களால் நேர்ந்துவிடப்பட்ட காளைகளில் சல்லிக்கட்டிற்குத் தகுதியான கோயில் காளை ஒன்றை விழாக்குழுவினர் அவிழ்த்துவிடுகின்றனர். இதனையடுத்து அவ்வூரிலுள்ள வேறு தெய்வங்களின் காளைகள் சல்லிக்கட்டில் இடம்பெறுகின்றன. இதனையடுத்து ஊர் மரியாதைக்காரர்களின் காளைகள் வரிசைப்படி சல்லிக்கட்டில் விழாக்குழுவினரால் அவிழ்த்துவிடப்படுகின்றன. மரியாதைக்காரர்களிடம் காளை இல்லையெனில் மரியாதைக்காரர்களின் நிலங்களைக் குத்தகைக்கு விவசாயம் செய்யும் பண்ணைக்காரன் தன்னுடைய காளையைச் சல்லிக்கட்டில் மரியாதைக்காரர்களின் பெயரில் அவிழ்த்து விடுவதும் ஒருசில ஊர்களில் பழக்கமாக உள்ளது. இதனையடுத்து வெளியூர்களிலிருந்து சல்லிக்கட்டிற்காகக் கொண்டுவரப்பட்டுள்ள காளைகள் சல்லிக்கட்டில் இடம்பெறுகின்றன.

## சமய ஒற்றுமை

தமிழகத்தில் இந்து, இசுலாம், கிறிஸ்தவம் ஆகிய மதங்கள்

உள்ளன. சமீபகாலத்தில் இந்துக்களுக்கும் இசுலாமியர்களுக்கும் கருத்து வேறுபாடு காரணமாக மதக்கலவரங்கள் ஏற்பட்டுள்ளன. இவற்றில் கோயம்புத்தூரில் நடைபெற்ற கலவரம் இந்துக்களுக்கும் இசுலாமியர்களுக்கும் பெரும்பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது. கிறிஸ்தவர்களுக்கும் இந்துக்களுக்கும் கருத்து வேறுபாட்டால் குமரி மாவட்டத்தில் சமயப்பூசல்கள் இருந்துவருகின்றன. ஆனால், சல்லிக்கட்டு என்னும் விளையாட்டினை இந்துக்கள் இசுலாமியரின் சமாதியில் நாட்டுப்புற வழிபாட்டுச் சடங்குமுறைப்படி வணங்கி நடத்துகின்றனர். என்பதனைக் குலமங்கலம் சல்லிக்கட்டின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் திண்டுக்கல் மாவட்டத்தில் கொசவப்பட்டி என்னும் ஊரிலுள்ள கிறிஸ்தவர்கள் தங்களின் தெய்வமான புனித அந்தோணியார் ஆலயத்தில் சல்லிக்கட்டு நடத்துகின்றனர். இதனை வைத்துப் பார்க்கும்பொழுது தமிழர்களின் வீரவிளையாட்டான சல்லிக்கட்டு தமிழகத்திலுள்ள மதங்களுக்குப் பொதுவானதாக விளங்குகின்றது என்பதனை அறியமுடிகின்றது.

## இந்து–இசுலாம் ஒற்றுமை

சல்லிக்கட்டு என்னும் விளையாட்டு இந்து நாட்டுப்புறத் தெய்வத்திற்கு மட்டுமே பெரும்பாலான ஊர்களில் நடைபெறுகின்றது. ஆனால், இசுலாமியச் சமாதியிலும் சல்லிக்கட்டு இடம்பெறுகின்றது. "மதுரைக்கு அருகில் குலமங்கலம் என்னும் ஊர் உள்ளது. இவ்வூரில் பங்குனிமாதம் முருகன் திருக்கல்யாணம் என்னும் நாளில் வருடந்தோறும் ஊர்மக்களால் சல்லிக்கட்டு நடத்தப்படுகின்றது. சல்லிக்கட்டு 'ராவுத்தர்பட்டி' என்னும் இசுலாமியச் சமாதிக்காகக் குலமங்கலத்தில் உள்ள இந்துமத மக்கள் நடத்துகின்றனர். இசுலாமியச் சமாதிக்குச் சல்லிக்கட்டினை இந்துமதத்தில், தேவர் இனமான அகமுடையர் இனத்தினரே நடத்துகின்றனர். ராவுத்தர்பட்டி என்னும் இசுலாமியச் சமாதிக்குச் சல்லிக்கட்டு நடத்தும் முன்னர் ஊர்மக்கள் கொட்டுமேளத்துடன் 'ராவுத்தர்பட்டி' என்னும் இசுலாமியச் சமாதியினை இந்துமத முறைப்படி வணங்கிவிட்டு வந்தபின்னாரே ஊர்மக்கள் சல்லிக்கட்டினைத் தொடங்குகின்றனர்."[34] இதனோடு மட்டுமல்லாமல் "மதுரைக்கு அருகிலுள்ள களிமங்கலம் என்னும் ஊரில் அதிகமாக இசுலாமியர்களே வாழ்கின்றனர். இவ்வூரில் இந்துக்களில் பள்ளர், சக்கிலியர், கோனார், ஆசாரி ஆகிய இனங்கள் மிகவும் குறைந்த எண்ணிக்கை யுடையவர்களாகவே வாழ்கின்றனர். பள்ளர் இனத்தவர்கள் தங்களின்

குலதெய்வமாகிய முனியாண்டிசாமிக்கு வருடந்தோறும் சல்லிக்கட்டு நடத்துகின்றனர். இதில் இசுலாமிய மதத்தைச் சேர்ந்த நாட்டாண்மைக்காரர் கூட்டத்தினர் பங்கு கொண்டு முனியாண்டிசாமியின் அருள் இறங்கி வழிபட்டுச் சல்லிக்கட்டினையும் முன்னின்று இந்து பள்ளர் இனத்தோடு இணைந்து நடத்துக்கின்றனர். மேலும் இந்துமத மக்கள் வேண்டுதல்களின் பேரில் இந்துக்கோயில்களுக்குக் காளைகளை நேர்ந்துவிடுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர். இதனைப் போன்றே 'சக்குடி' என்னும் ஊருக்கு அருகிலுள்ள 'அனஞ்சியூர்' என்னும் ஊரில் இந்துமதத்தைச் சார்ந்த ஒருவர் இசுலாமியப் பள்ளிவாசலுக்கு வேண்டுதலின் பேரில் காளை ஒன்றினை நேர்ந்துவிட்டுள்ளார். பள்ளிவாசலுக்கு நேர்ந்து விட்ட காளையினையும் 'அனஞ்சியூர்' என்னும் ஊர்மக்கள் சல்லிக்கட்டிற்குக் கொண்டுவந்து அவிழ்த்துவிடுகின்றனர்.''[36] இக்கருத்துக்களின் மூலம் நாட்டுப்புறங்களில் வாழும் இந்துமத மக்கள் இசுலாமிய மக்களோடு ஒற்றுமையாகவே வாழ்கின்றனர் என்பது தெளிவாகின்றது. மேலும் இந்துமத மக்கள் தங்களின் வேண்டுதல்களை இசுலாமியக் கடவுளிடமும் வேண்டியுள்ளனர் என்பதனையும் அறிந்துகொள்ளமுடிகின்றது.

### *சல்லிக்கட்டில் கிறிஸ்தவர்களின் பங்கு*

தமிழகத்திலுள்ள கிறிஸ்தவர்கள் பெரும்பாலும் இந்துக்களாக இருந்து மதம் மாறியவர்களாக உள்ளனர். இவர்கள் வழிபடும் தெய்வமும் சடங்குமுறையும் கிறிஸ்தவ மதத்தினைச் சார்ந்திருப்பினும் பழக்கவழக்கங்களும் பண்பாடும் தமிழினத்தைப் பின்பற்றியுள்ளதாகவே இருக்கின்றன. "திண்டுக்கல் என்னும் நகருக்கு அருகிலுள்ள கொசவபட்டி என்னும் ஊரில் வன்னியர் என்ற இனத்தவர்கள் கிறிஸ்தவ மதத்தினைத் தழுவி வாழ்ந்துவருகின்றனர். இவர்கள் வருடந்தோறும் சனவரி மாதம் 26 ஆம் நாள் தங்களின் புனித அந்தோனியார் ஆலயத்திற்குச் சல்லிக்கட்டு நடத்துவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.''[37] மேலும் 'உத்தமபாளையம்' வட்டாரத்திலுள்ள "ஆணை மலையான்பட்டி என்னும் ஊரிலுள்ள கிறிஸ்தவர்கள் ஆதிதிராவிட இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தைமாதம் இரண்டாம்நாள் மாட்டுப்பொங்கலன்று தங்களின் மாடுகளைக் குளிப்பாட்டிப் பொட்டு வைத்து அலங்கரிக்கின்றார். பின்னர் கிறிஸ்தவ இளைஞர்களும் பெரியவர்களும் சிலுவை பொறித்த கொடியேந்தி அலங்கரிக்கப்பட்ட மாடுகளை ஊர்வலமாகத் தங்களின் தெருக்களில் கொண்டு வருகின்றனர். இவ்வாறு கொண்டு வரப்பட்டுள்ள

மாடுகளை வைத்துக் கிறிஸ்தவர்கள் ஊரின் பொதுவிடத்தில் சல்லிக்கட்டு நடத்துகின்றனர். இதில் உள்ளூர் இளைஞர்கள் கலந்துகொண்டு காளைகளைப்பிடித்து அடக்குகின்றனர்"[38] கிறிஸ்தவர்கள் தமிழரின் பண்பாட்டை விட்டு விலகாமல் இன்றும் கடைபிடித்து வருகின்றனர் என்பது தெளிவாகின்றது.

### காளைவளர்ப்போரின் மனநிலை

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் சிலகாளைகள் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரர்களால் பிடிக்கமுடியாதபடி மாடுபிடிவீரர்களை முட்டித் தள்ளிவிட்டுச் சல்லிக்கட்டில் வெற்றிபெறுகின்றன. மாடுபிடிவீரர்களால் சல்லிக்கட்டில் பிடிக்க முடியாத காளைகளை வளர்த்த காளைகளின் உரிமையாளர்களுக்குச் சல்லிக்கட்டு வட்டாரத்தில் மதிப்பும் மரியாதையும் கிடைக்கின்றன. இதனைப் பெருமையாகக் கருதிக்கொண்டு காளை வளர்ப்பவர்கள் சல்லிக்கட்டுக் காளைகளை வளர்ப்பதில் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். காளைவளர்ப்பவர்கள் தங்களின் வீட்டிலுள்ள பிள்ளைகளோடு பிள்ளைகளாக நினைத்துச் சல்லிக்கட்டுக் காளையினையும் வளர்த்து வருகின்றனர். "கொம்பு முளைக்காத கன்றுக்குட்டிப் பருவத்திலே முட்டுவதற்குப் பழகித் தரவேண்டும். நேரத்துக்கு நேரம் தீனி வஞ்சகமில்லாமல் போடவேண்டும். வளர்ந்து பெரிசாகிய பிறகு யாரும் தொடமுடியாத மாடு என்று பெயர் வாங்கிவிட்டால் போதும். மாலை மரியாதை வீடு தேடி வரும். 'எங்க ஊர்ச் சல்லிக்கட்டுல உங்க மாடு கலந்துகொள்ளனும்' என்று ஊர்ப்பெரியவர்கள் நேரில் பார்த்து வெத்தலை பாக்கு வைத்து அழைப்புவிடுவதும் நடக்கும். இந்த வெத்தலை பாக்கு மரியாதைக்கு ஏங்கித் தவிக்கும் கிராமத்து ஆட்கள் அதிகம்"[39] என்ற கருத்தின் மூலம் காளைவளர்ப்பவர்கள் கௌரவத்திற்காகக் காளை வளர்த்துவருகின்றனர் என்பது தெளிவாகின்றது. இது தவிரக் காளைவளர்ப்பவர்களில் ஒருசிலர் தங்களின் காளை பல சல்லிக்கட்டுக்களில் மாடுபிடிவீரர்களிடம் பிடிபடாமல் சிறப்பான முறையில் வெற்றிபெற்று வந்தால் அதனைப் பல ஆயிரக்கணக்கான ரூபாய்க்கு விற்றுவிடலாம் என நினைத்தும் காளை வளர்ப்பவர்கள் சல்லிக்கட்டுக் காளைகளை வளர்த்துவருகின்றனர். மேலும் கௌரவத்திற்காகக் காளை வளர்ப்பவர்கள் தங்களின் காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனிடம் பிடிபட்டுவிட்டால் அதனை விற்றுவிடுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர். ஒருசில காளை வளர்ப்போர் சல்லிக்கட்டில் தோல்வியுற்ற காளையினை உழவுத்தொழிலில் ஈடுபடுத்தவும் செய்துள்ளனர்.

### சல்லிக்கட்டும் பெண்களும்

சங்ககாலத்தில் 'ஏறுதழுவர்' என்னும் விளையாட்டு சங்ககாலமக்களால் விளையாடப்பட்டு வந்துள்ளது. ஏறுதழுவி வெற்றிபெற்ற ஆடவனையே சங்ககாலப் பெண்கள் திருமணம் செய்து வாழ்ந்துள்ளனர் என்பதனை முல்லைக்கலியின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. இதுதவிரச் சல்லிக்கட்டில் காளையை அடக்கிய வீரனுக்குப் பெண் கொடுப்பதாகக் காளையின் உரிமையாளர்கள் அறிவித்து சல்லிக்கட்டில் தங்களின் காளைகளை அவிழ்த்துவிட்டுள்ளனர் என்பதனை மாடுபிடிவீரர்களின் கதைப்பாடல்கள் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. காளைகளை அடக்கியவனைப் பலசாலி என்று சில ஆண்டுகளுக்கு முன்னர் பெண்கள் நினைத்தனர். ஆனால், இக்காலத்தில் காளையை அடக்கிய வீரனை முரடன் என்று பெண்கள் நினைக்கின்றனர். சல்லிக்கட்டுக் காளையைக் கொட்டத்திலிருந்து அவிழ்த்துக் கொண்டு கிளம்பினால் போதும்... வீட்டிலிருக்கும் பொம்பளைகளுக்கு ஒரே திக்...திக்... தான் மூச்சு வாங்கும். வீட்டிலுள்ள பெண்கள் நல்லபடியாத் திரும்பி வரணும் என்று வேண்டிக் கொண்டே இருப்பார்கள். பருத்திக் கொட்டை ஆட்டி ஊத்துவது முதல் கொட்டத்தைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தமாக வைத்திருப்பதுவரை அந்தக் காளையோடு நெருங்கிப் பழகும் வாசனை இவர்களுக்கே உண்டு. ஊரெல்லாம் பயமுறுத்தும் காளையாக இருந்தாலும் இந்தப்பெண்கள் பின்னால் அடங்கி ஒடுங்கி நடந்து வருகின்றது. மாட்டைப் பிடித்துவிட்ட தகவல் தெரியப்படுத்தப்பட்டால் வீடு முழுவதும் துக்கநாள்"[40] காளை, சல்லிக்கட்டில் பல வீரர்களைக் குத்திக் காயப்படுத்தி வீடு திரும்பினால் அதனை வளர்த்த வீட்டிலுள்ள பெண்கள் மகிழ்ச்சியோடு வரவேற்று ஆரத்தி எடுக்கும் வழக்கம் காளை வளர்ப்பவர்களின் வீடுகளில் காணப்படுகின்றது.

### சல்லிக்கட்டும் இன்றைய நிலையும்

சல்லிக்கட்டிற்காகக் காளை வளர்ப்பவர்களின் எண்ணிக்கை இன்று குறைந்து கொண்டே வருகின்றது. சல்லிக்கட்டுக்காளையினை வளர்ப்பதில் அதிகச்செலவு ஏற்படுவதாலும் அதனைச் சல்லிக்கட்டுக்குக் கொண்டு செல்வதற்குப் பலஇளைஞர்கள் தேவைப்படுவதாலும் பலர் சல்லிக்கட்டிற்காகக் காளை வளர்ப்பதனைத் தவிர்த்து விட்டுள்ளனர். மேலும் மாடுபிடிவீரர்களும் பரிசுப்பொருட்களின் மதிப்பு அதிகவிலை உள்ளதாகக் கொடுக்கப்படும் சல்லிக்கட்டில் மட்டுமே கலந்துகொண்டு காளைகளைப் பிடித்து வருகின்றனர். பரிசுப்பொருட்களின் மதிப்பு விலை

குறைவாகக் கொடுக்கப்படும் சல்லிக்கட்டில் வெளியூர்களிலிருந்து வரும் மாடுபிடி வீரர்கள் கலந்துகொள்வதில்லை. காளை வளர்ப்போர்களும் தங்களின் காளைகளை வெளியூர்களில் நடைபெறும் சல்லிக்கட்டில் கலந்துகொள்வதற்கு வாகனச்செலவுக்குப் பணம் கொடுக்கும் சல்லிக்கட்டுகளில் மட்டுமே காளைவளர்ப்போர் தங்களின் காளைகளைச் சல்லிக்கட்டிற்குக் கொண்டு செல்கின்றனர்.

### *சல்லிக்கட்டும் பொதுமக்களும்*

'சல்லிக்கட்டு' என்னும் வீரவிளையாட்டு தமிழகம் முழுவதும் போற்றப்பட்ட நிலைமாறி, அது 'சல்லிப்பயல்' விளையாட்டு என்று சல்லிக்கட்டில் ஆர்வமில்லாதவர்கள் கூறுகின்றனர். சல்லிப்பயல் என்பது குடும்பத்திற்கு எந்தவித நன்மையும் தேடாமல் வீண் பிரச்சினைகளை மட்டுமே தேடிக்கொண்டு குடும்பத்திற்குத் துன்பத்தைத் தரக்கூடிய ஆடவனைச் சல்லிப்பயல் என்று நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர். சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் மாடுபிடிவீரர்களுக்குக் காயம் ஏற்பட்டாலும் காளையைச் சல்லிக்கட்டில் பிடித்த மாடுபிடிவீரர்களைக் காளைவளர்ப்பவர்கள் தாக்கிக் காயப்படுத்தினாலும் மாடுபிடிவீரர்களின் குடும்பத்திற்குத் துன்பம் ஏற்படுகின்றது. மேலும் காளைவளர்ப்பவர்களும் தங்களின் காளையைப் பிடித்த மாடுபிடிவீரனைத் தாக்குவானேயானால் மாடுபிடிவீரனின் ஊர் மக்களுக்கும் காளையின் உரிமையாளர்களின் ஊர்மக்களுக்கும் கலவரம் ஏற்படுகின்றது. இதனால் மாடுபிடிவீரன் காளையின் உரிமையாளர் ஆகியவர்களின் ஊர்களுக்கு ஊர்ப்பகை ஏற்படுகின்றது. இதனால் இருதரப்பு ஊர்மக்களுக்கும் துன்பம் ஏற்படுகின்றது. இக்கருத்துக்களின் அடிப்படையிலேயே சல்லிக்கட்டில் ஆர்வமில்லாத மக்கள் 'சல்லிப்பயல் விளையாட்டு' என்று கூறுகின்றனர். மேலும் சல்லிக்கட்டு விளையாட்டினைப் பார்க்கச் செல்பவர்களின் உயிருக்கும் ஆபத்து ஏற்பட வாய்ப்புள்ளதால் பொதுமக்களில் பெருபாலானோர் சல்லிக்கட்டு விளையாட்டினைப் பார்ப்பதனைத் தவிர்த்து விடுகின்றனர்.

### *சல்லிக்கட்டும் தனியார் நிறுவனங்களும்*

சல்லிக்கட்டு என்னும் விளையாட்டிற்குப் போதிய நிதியுதவியினை ஊரின் பொதுப்பணத்திலிருந்து எடுத்துக்கொள்வதோடு மட்டுமல்லாமல் தனியார் நிறுவனங்களிடமிருந்தும் சிறுவியாபாரிகளிடமிருந்தும் விழாக்குழுவினர் வசூலிக்கின்றனர். 1998—ஆம் ஆண்டில் அலங்காநல்லூரில் நடைபெற்ற சல்லிக்கட்டிற்குச் 'சிசர்ஸ்' என்னும் நிறுவனத்தினர் ஓரளவு நிதிகொடுத்து உதவியுள்ளதோடு மட்டுமல்லாமல்

தங்களின் நிறுவனத்தினர் விளம்பரங்களைச் சல்லிக்கட்டு நடத்தும் இடத்தில் விளம்பரம் செய்துள்ளனர். இதுதவிர ராம்கோ சிமெண்ட்,பெப்சி போன்ற தனியார் நிறுவனங்களும் நிதியுதவி செய்துள்ளன. இதனால், அலங்காநல்லூரில் நடைபெறும் சல்லிக்கட்டில் தொலைக்காட்சிப்பெட்டி (டி.வி.), அரைவை இயந்திரம் (கிரைண்டர்), மிதிவண்டி (சைக்கிள்), தங்கக்காசு, சுவர்க்கடிகாரங்கள், பாத்திரங்கள் போன்றவற்றுடன் வேட்டி துண்டு முதலியனவும் மாடுபிடிவீரர்களுக்கும் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளுக்கும் பரிசாகக் கொடுக்கப்படுகின்றன. மேலும் குலமங்கலம் என்னும் ஊரில் நடைபெறும் சல்லிக்கட்டுதான் மதுரை மாவட்டத்தில் முதன்முதலில் தொலைக்காட்சிப்பெட்டி (டி.வி.), மிதிவண்டி (சைக்கிள்), தங்கக்காசு போன்ற விலையுயர்ந்த பரிசுப்பொருட்களை அறிமுகப்படுத்தியது. குலமங்கலம் என்னும் ஊரிலுள்ள மக்களின் வரிப்பணத்தோடும் பெரிய நிறுவனங்களின் நிதியுதவியோடும் குலமங்கலம் என்னும் ஊரிலுள்ள 'மூவேந்தர் பண்பாட்டுக் கழகம்' என்னும் அமைப்பு சல்லிக்கட்டினை நடத்திவருகின்றது. அலங்காநல்லூர், குலமங்கலம் ஆகிய ஊர்களைப் போன்றே 'சத்திரப்பட்டி' என்னும் ஊரிலும் சிறப்பான முறையில் சல்லிக்கட்டு நடைபெற்று வந்தது. ஆனால், நிதிப்பற்றாக்குறையால் கடந்த இரண்டு ஆண்டுகாளகச் சத்திரப்பட்டி என்னும் ஊரில் சல்லிக்கட்டு நடைபெறவில்லை. சல்லிக்கட்டு நடத்துவதற்குக் குறைந்தது 75,000 ரூபாய் தேவைப்படுவதால் சிறப்பான முறையில் சல்லிக்கட்டு நடத்தவேண்டும் என்ற எண்ணம் கொண்ட ஊர்மக்கள் நிதிநிறுவனங்களின் உதவியோடு சல்லிக்கட்டினை நடத்துகின்றனர்.

### சல்லிக்கட்டும் எதிர்காலமும்

சல்லிக்கட்டு ஒருகாலத்தில் மதுரை மாவட்டம் முழுவதும் பரவலாக நடைபெற்று வந்திருக்கின்றது. சல்லிக்கட்டினால் ஏற்படுகின்ற கலவரத்தின் காரணமாக மதுரை மாவட்டத்தில் பலஊர்களில் சல்லிக்கட்டு நடைபெறுவது நிறுத்தப்பட்டுவிட்டது. இக்காலத்தில் 'சல்லிக்கட்டு என்னும் விளையாட்டில் கொடுக்கப்படுகின்ற பரிசுப்பொருட்களின் மதிப்பைப் பொறுத்தே காளைகளின் எண்ணிக்கை அதிகரிப்பதால் பல சிறந்த காளைகளைப் பிடித்து வெற்றி பெறலாம் என்று நினைத்து மாடுபிடி விரர்களும் சல்லிக்கட்டில் கலந்து கொள்கின்றனர். சல்லிக்கட்டில் கொடுக்கப்படும் விலையுயர்ந்த பரிசுப்பொருட்கள் சல்லிக்கட்டு விறுவிறுப்பாக நடைபெறுகின்றது. பரிசுப்பொருட்கள் எதுவும் இல்லாமல் வேட்டி, துண்டு மட்டும் காளைகளுக்கும் மாடுபிடிவீரர்களுக்கும் பரிசாகக் கொடுக்கப்படும் சல்லிக்கட்டும் ஒருசில ஊர்களில் நடைபெற்று வருகின்றது. இவ்வாறு பரிசுப்பொருட்கள் குறைவாக உள்ள ஊர்களில் நடைபெறும் சல்லிக்கட்டில்

கலந்துகொள்ளும் காளைகளின் எண்ணிக்கை குறைவாக உள்ளதால் சல்லிக்கட்டு மந்தமான நிலையில் நடைபெறுகின்றது மதுரை மாவட்டத்திலுள்ள மக்கள் ஊர்த்தெய்வ நம்பிக்கையோடு தொடர்புபடுத்திச் சல்லிக்கட்டினை நடத்திவருவதானல் மதுரை மாவட்டத்தில் சிலஊர்களில் ஆண்டுதோறும் சல்லிக்கட்டு நடைபெற்று வருகின்றது. நாட்டுப்புறமக்கள் ஊர்த்தெய்வ வழிபாட்டினை நடத்திவருகின்ற பழக்கம் இருக்கும்வரை 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு தமிழக மக்களால் விளையாடப்பட்டுக் கொண்டேயிருக்கும் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. நாட்டுப்புறமக்கள் தங்களின் ஊர்த்தெய்வங்களுக்குச் செய்யும் வழிபாட்டுச் சடங்குகள் நிறுத்தப்பட்டால்தான் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டும் நடைபெறாமல் போய்விடும் எனக் கருதப்படுகின்றது.

மேற்கூறியவற்றிலிருந்து ஏறுதழுவல் என்னும் விளையாட்டில் பெண்ணின் பொருட்டு மாடுபிடிவீரர்கள் ஏறுதழுவியதைப் போன்றே 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டிலும் பெண்ணின் பொருட்டு மாடுபிடிவீரர்களும் காளைகளை அடக்கியுள்ளனர் என்பதனை அழகத்தேவன், கருப்பத்தேவன், மன்னன் சின்னாண்டி ஆகியோரின் கதைப்பாடல்கள் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. மாடுபிடிவீரர்களான அழகத்தேவனுக்கும் கருப்பத்தேவனுக்கும் நடுகல்லவழிபாடு நடந்து வருகின்றது என்பதனை கதைப்பாடல்கள் விளக்குகின்றன. தன் தந்தையயைச் சல்லிக்கட்டில் குத்திய காளையினைப் பிடித்தாக வேண்டும் என்று வஞ்சம் வைத்து அதனைப் பிச்சி பிடித்துள்ளான் என்பதனை 'வாடிவாசல்' என்னும் நாவல் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனால் பிடிக்கப்பட்டுவிட்ட தன்னுடைய காளையினைச் சமீன்தார் தன்னுடைய கைத்துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிட்டார் என்பதனை 'வாடிவாசல் என்னும் நாவல் விளக்குகின்றது. சல்லிக்கட்டில் வெற்றி பெற்றுப் பெயரும் புகழும் சேர்த்த ஊர்த்தெய்வத்தின் காளைகளுக்குச் சிலைசெய்து ஊர்மக்கள் வணங்கி வருகின்றனர். 'உத்தமபாளையம்' என்னும் ஊரில் கருத்தராவுத்தர் என்பவர் மிகவும் சிறப்பான முறையில் சல்லிகட்டு நடத்தியிருக்கின்றார் என்பதனைச் சல்லிக்கட்டுச் சிந்துக் கவிதை விளக்குகின்றது. காளைவளர்ப்பவர்களில் ஒருசிலர் தங்களின் காளை வெற்றிபெற வேண்டும் என்பதற்காகச் சிலமுறைகேடான செயல்களைச் செய்துவருகின்றனர் என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் மாடுபிடிவீரர்களில் ஒருசிலர் காளையின் உரிமையாளரிடம் பணம் வாங்கிக் கொண்டு காளையினைப் பிடிக்க முடியாதவாறு செய்துவிடுகின்றனர் என்பதும் தெளிவாகின்றது. 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு ஊர்த்தெய்வ வழிபாட்டோடு இணைந்து நடைபெறுவதால் சல்லிக்கட்டு

நடைபெறும் ஊரில் வசிக்கின்ற ஒவ்வொரு சாதியினருக்கும் சல்லிக்கட்டுத் தொடர்பான பணிகள் பிரித்துத் தரப்பட்டுள்ளன என்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் சாதிய ஒற்றுமை, சமய ஒற்றுமை ஆகியனவும் தெளிவாக்கப்பட்டுள்ளன.

சல்லிக்கட்டில் தொடர்ந்து காளை மாடுபிடிவீரர்களிடம் பிடிபடாமல் வெற்றி பெற்று வந்தால் சல்லிக்கட்டு வட்டாரத்தில் தங்களுக்கு மதிப்பும் மரியாதையும் கிடைக்கும் என்று காளைவளர்ப்போர் கருதுகின்றனர். சல்லிக்கட்டில் காளை வெற்றிபெற்று வரும்பொழுது காளை வளர்ப்போரின் வீட்டிலுள்ள பெண்கள் மகிழ்ச்சியோடு ஆரத்தி எடுக்கின்றனர். வெளியூர்களில் நடைபெறும் சல்லிக்கட்டுகளில் காளைகள் கலந்து கொள்வதற்கு வாகனச்செலவுக்குப் பணம் கொடுக்கும் விழாக்குழுவினர் நடத்துகின்ற சல்லிக்கட்டுகளில் மட்டுமே காளை வளர்ப்போர் தங்களின் காளைகளைக் கலந்துகொள்ளச் செய்கின்றனர். சல்லிக்கட்டு என்னும் விளையாட்டு சல்லிப்பயல் விளையாட்டு என்று சல்லிக்கட்டில் ஆர்வமில்லாத பொதுமக்களால் பேசப்பட்டு வருகின்றது. சல்லிக்கட்டு என்னும் விளையாட்டினைச் சிறப்பாக நடத்த வேண்டுமானால் பணம் அதிகம் தேவைப்படுவதால் சிலதனியார் நிறுவனங்களிடமும் வியாபாரிகளிடமும் நிதியுதவினைப் பெற்று ஊர்மக்கள்சல்லிக்கட்டு நடத்துகின்றனர் என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது. சல்லிக்கட்டினால் சில ஆபத்துகளும் ஏற்படுகின்ற காரணத்தினால் பல ஊர்களில் சல்லிக்கட்டு நடைபெறுவது நின்றுவிட்டது. ஆனாலும், நாட்டுப்புறமக்கள் ஊர்த்தெய்வ வழிப்பாட்டினை நடத்திவருகின்ற பழக்கம் இருக்கும் வரைக்கும் சல்லிக்கட்டு என்னும் விளையாட்டு நாட்டுப்புறமக்களால் விளையாடப்பட்டு வரும் என்பதனையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

## குறிப்புகள்

1. கா. கலைச்செல்வி, மதுரை மாவட்ட நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், பி.இ.ப.20
2. மேலது, பி.இ.ப.40
3. மேலது, பி.இ.பக்.40,41.
4. மேலது, பி.இ.ப.47.
5. மேலது, பி.இ.ப.49
6. மேலது, பி.இ.ப.49.
7. மேலது, பி.இ.ப.55.
8. மேலது, பி.இ.ப.63.
9. மேலது, பி.இ.பக்.67—70.
10. மேலது, பி.இ.பக்.102—104.
11. மேலது, பி.இ.பக்.104—106
12. மேலது, பி.இ.பக்.109—112.
13. மேலது, பி.இ.பக்.112.
14. மேலது, பி.இ.ப.112.
15. மேலது, பி.இ.ப.112.
16. மேலது, பி.இ.பக்.341—344.
17. சி.சு.செல்லப்பா, வாடிவாசல், பக். 29—30.

இன்றைய காலத்தில் நடைபெறும் சல்லிக்கட்டிலும் காளைகளை அவிழ்த்து விடும்பொழுது விழாக்குழுவினர் அறிவிப்புச் செய்கின்றனர். அப்பொழுது காளையின் திறமை, காளையின் உரிமையாளரின் பெயரும் ஊரும் விழாக்குழுவினரால் அறிவிக்கப்படுகின்றது. பின்னர் காளைக்கு விழாக்குழு கொடுக்கும் பரிசுகளையும் விழாக்குழு அறிவிக்கின்றது.

18. மேலது,பக்.41—61.
19. மேலது,ப.65.
20. மேலது,ப.65—67.

21.தகவல், ந. கோபால், வீரபாண்டி, நாள் 21.1.2000.

22.தகவல், அ. பழனிச்சாமி, ஆ.தெக்கூர், நாள் 5.6.1999.

23.தகவல், சி, சிவலிங்கம், மு.கோவில்பட்டி, நாள்.5.6.1999.

24.கோ.ச. அந்தோணிமுத்துப்பிள்ளை, சந்தமார் சிந்துக்கவிதைகள், பக்.68—70.

25.தகவல், சா.த. சுந்தரபாண்டியன், திருவாதவூர், நாள் 15.1.1997.

26.மேலது.

27.சு.சி.கணேசன் (க.ஆ.), தினமணிக்கதிர், ப.24, நாள் 3.4.1994.

28.அரவிந்தன் (க.ஆ.), இந்தியா டுடே, ப.37, நாள் 14.1.1998

29.தகவல், சு.தவசித்தேவர், பெரியபூலாம்பட்டி, நாள் 15.7.1997

30.மேலது.

31.கோ. ஸ்ரீதரன், அலங்காநல்லூர், நாள் 14.1.1996.

32."அருளல் — அசைதல், உத்தரவு பண்ணல், காத்தல், கிருபை செய்தல் சிருட்டித்தல், சொல்லல், நித்திரை விழித்தல், நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ் மொழியகராதி, ப.124 என்று அகராதி விளக்கம் தந்துள்ளது. 'அருளல்' என்ற சொல்லின் அடியாக வந்த 'அருளாடி' என்ற சொல் நாட்டுப்புறமக்கள் ஊர்த்தெய்வ அல்லது குலதெய்வ வழிபாட்டின் போது ஒருவரின் மீது தெய்வத்தின் அருள் ஏறி அவர் ஊர்மக்களுக்கு குறிசொல்லுதல், உத்தரவுக்கொடுத்தல் போன்றவற்றைச் செய்கின்றவரைக் குறிக்கின்றது. அருளாடி' என்பவரைச் 'சாமியாடி' என்று கூறும் வழக்கமும் நாட்டுப்புறமக்களிடத்தில் உள்ளது.

33.தகவல், மு.பூரணச்சந்திரன், சக்குடி, நாள் 14.1.1996

34.தகவல், செ. அரிராமநாதன், குலமங்கலம், நாள் 10.3.1995.

35.தகவல், மு.அரிச்சந்திரன்,களிமங்கலம், நாள். 20.4.1996.

36.தகவல், கா.சிக்கந்தர்பாட்சா, அனஞ்சியூர், நாள் 15.2.1996.

37.தகவல், அ. வேளாங்கண்ணி, கொசவபட்டி, நாள் 18.2..1997.

38.தவல்,கா.சாமிபிள்ளை,ஆனைமலையான்பட்டி,நாள் 27.6.1998.

39.சு.சி. கணேசன்(க.ஆ.), தினமணி கதிர், ப.26, நாள் 3.4.1994.

## முடிவுரை

ஆய்வில் கண்டறிந்தமுடிவுகள் கீழே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

சங்ககாலத் தமிழர்கள் விளையாடிய ‘ஏறுதழுவல்’ என்னும் விளையாட்டிலிருந்து பெற்ற வளர்ச்சி நிலையாகச் சல்லிக்கட்டு என்னும் விளையாட்டு விளங்குகின்றது. இவ்விளையாட்டில் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் காளையினை அடக்கிய மாடுபிடிவீரனை மட்டுமே வெற்றி பெற்றவனாக விழாக்குழுவினர் அறிவிக்கின்றனர். இவ்விளையாட்டு தமிழகத்தில் தெய்வ வழிபாட்டோடு தொடர்புபடுத்தப்பட்டுள்ளது.

சல்லிக்கட்டிற்குக் கொண்டுவரப்படுகின்ற முரட்டுக்காளைகளை மாடுபிடிவீரர்கள் தழுவிப்பிடித்து வெற்றிகொள்ளும் நிகழ்ச்சி ‘சல்லிக்கட்டு’ என்ற விளையாட்டாக வடிவம் பெற்று விளங்குகின்றது. முரட்டுக் காளைகளை அடக்கியவீரனுக்குக் காசுகளைப் (சல்லி) பரிசாக விழாக்குழு வழங்கியதால் ‘சல்லிக்கட்டு’ எனப் பெயர் பெற்றிருக்கவேண்டும்.

பழங்கால மக்கள் விளையாடுவதன் மூலம் தங்களின் உடலை வலிமைப்படுத்திக் கொள்ளலாம் என்ற நோக்கத்தில் உடல்திறன் கொண்ட விளையாட்டுக்களை விளையாடியிருக்கின்றனர். சிலம்பாட்டம், குத்துச்சண்டை, கல் தூக்குதல், ஏறுதழுவல் போன்ற விளையாட்டுக்கள் உடல் வலிமைக்காவும் போட்டிக்காகவும் விளையாடப்படும் விளையாட்டுக்களாகும். இவ்விளையாட்டுக்களுள் ‘ஏறுதழுவல்’ என்னும் விளையாட்டிலிருந்து தோற்றம் பெற்ற ‘சல்லிக்கட்டு’ என்னும் விளையாட்டு காலமாற்றத்தால் பல்வேறு மாறுதல்களைப் பெற்றுள்ளது.

சங்ககாலத்தில் வலிமையான காளைகளை ‘ஏறுதழுவல்’ என்னும் விளையாட்டில் அடக்கி வெற்றிபெற்ற ஆண்மகனுக்கே பெண்ணைத் திருமணம் செய்துகொடுக்கும் வழக்கம் அக்கால மக்களிடம் இருந்துள்ளது என்பதனை முல்லைக்கலி, சிலப்பதிகாரம் ஆகிய இலக்கியங்களின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

‘ஏறுதழுவல்’ என்னும் விளையாட்டிலிருந்து தோன்றிய ‘சல்லிக்கட்டு’ என்னும் விளையாட்டு திருமண உறவுக்காக நடத்தப்பட்ட நிலைமாறித் தற்பொழுது சமயச்சடங்கோடு தொடர்புபடுத்தப்பட்டு நடைபெறுகின்றது. ஊர்த்தெய்வத்திற்கு மனித இரத்தப்பலி கொடுக்கவேண்டும் என்பதற்காகப் பல ஊர்களில் தெய்வ வழிபாட்டோடு தொடர்புடைய சமயவிழாவாகச் சல்லிக்கட்டு இடம்பெற்று வருகின்றது. ஊர்த்தெய்வங்களுக்குச் ‘சல்லிக்கட்டு’ என்னும் விளையாட்டினை

ஊர்மக்கள் நடத்தவில்லையெனில் ஊர்த்தெய்வங்களால் ஊர்மக்களுக்குத் தீமை (பஞ்சம், காலரா) ஏற்படும் என்ற நம்பிக்கையும் நாட்டுப்புறமக்களிடம் இருந்துவருகின்றது.

பண்டைக்கால மக்களிடம் உலகளவில் இறைவனுக்கு நரபலி கொடுத்துத் தாங்கள் விரும்பியதனைப் பெறும் வழக்கம் இருந்திருக்கின்றது. தமிழக மக்கள் இறைவனுக்கு நரபலி கொடுக்க யாரும் முன் வராமல் இருந்திருக்கலாம். அதனால் இறைவனுக்கு நரபலி கொடுக்க அக்காலமக்கள் 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டினைச் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டாக மாற்றம் செய்து அதில் ஏற்படுகின்ற மனித இரத்தத்தை இறைவனுக்குக் காணிக்கையாக்கியுள்ளனர்.

பண்டைக்காலத்தில் போரில் இறந்த வீரனுக்கும் வேறு வீரசாகசங்கள் செய்த வீரனுக்கும் நடுகல் எடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. இதனடிப்படையில் வீரவிளையாட்டாகிய எருதுவிளையாட்டில் இறந்த வீரர்களுக்கும் நடுகல் எடுக்கும் வழக்கம் இருந்துள்ளது என்பதனை சேலம் மாவட்டம் பெத்தநாயக்கன் பாளையத்தில் கிடைத்த நடுகல் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது. மதுரை மாவட்டம் செக்கானூராணிக்கு அருகிலுள்ள சொரிக்காண்பட்டியில் மாடுபிடிவீரன் அழகத்தேவனுக்கும் திருவாதவூர்க்கு அருகிலுள்ள முக்கம்பட்டியில் பூவந்தி என்னும் ஊரைச் சேர்ந்த செல்லச்சாமி என்ற மாடுபிடிவீரனுக்கும் அவர்களின் உறவினர்கள் நடுகல் எடுத்து வழிபடுகின்றனர்.

காளையோடு மனிதன் விளையாடும் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு, தமிழகத்தில் மட்டுமல்லாது உலகநாடுகளிலும் விளையாடப்பட்டு வருகின்றது. இவ்விளையாட்டு உலகநாடுகளில் 'காளைச்சண்டை' எனப் பெயர் பெற்று விளையாடப்படும் முறையிலும் சிற்சில மாற்றம் பெற்று நடைபெறுகின்றது. 'காளைச்சண்டை' என்னும் விளையாட்டில் காளைச்சண்டை வீரன் காளையினைக் கத்தியால் குத்திக் கொன்றுவிடுகின்றான். காளைச்சண்டை வீரனுக்குப் பரிசாகக் காளையின் காதுகாளையும் வாலையும் விழாக்குழு கொடுக்கின்றது. 'காளைச்சண்டை' என்னும் விளையாட்டு சப்பானில் 'டோக்யூ' என்னும் பெயரில் நடைபெறுகின்றது. ஜப்பானில் மற்ற நாடுகளைப் போன்று இல்லாமல் காளைக்கு எதிரே காளையே சண்டையிட்டு வெற்றிபெறும் விளையாட்டாக அமைந்துள்ளது. மேலைநாடுகளில் காளைச்சவாரி என்னும் விளையாட்டும் நடைபெற்று வருகின்றது.

காளைவிளையாட்டு இந்தியாவில் அசாம், கர்நாடகா, ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் நடைபெறுகின்றது. தமிழ்நாட்டில் நடைபெறும் காளை விளையாட்டிலிருந்து மற்ற மாநிலங்களில் நடைபெறும் விளையாட்டு வேறுபட்டுள்ளது. அசாமில் மாக்பிஹு பண்டிகையின்போது காளைக்கு எதிரே காளையே சண்டையிடும் காளைச்சண்டை, சேவலுக்கு எதிரே சேவலே சண்டையிடும் சேவல் சண்டை, எருமைக்கு எதிரே எருமையே சண்டையிடும் எருமைச் சண்டை ஆகியன நடைபெறுகின்றன. கர்நாடக மாநிலத்தின் தென்பகுதியான துளுவநாட்டில் 'கம்பளா' என்னும் விளையாட்டு நடைபெறுகின்றது. இவ்விளையாட்டினை ஊர்த்தெய்வங்களுக்கு நடத்தினால் விவசாயம் செழிப்பாக வளரும் என்று கர்நாடக மக்கள் நம்புகின்றனர். 'கம்பளா' என்னும் விளையாட்டு நுகம்பூட்டிய பல சோடி எருமைக்கடாய்களை உழவுசெய்த தொழிநிலத்தில் விரைவாக ஓட்டி வெற்றிபெறும் விளையாட்டாகவுள்ளது. கம்பளா என்னும் விளையாட்டில் வெற்றிபெற்ற எருமைக்கடாய்களுக்குப் பொன், வெண்கலம், கேடயம், கோப்பை போன்றவைகளை விழாக்குழு பரிசாகத் தருகின்றது. 'வண்டாரக்கம்பளா', 'பசுரூகம்பளா', 'கோட்டோதபகம்பளா' ஆகியவற்றைப் பார்த்தவன் மோட்சம் அடைவான் எனத் துளுவ நாட்டு மக்கள் நம்புகின்றனர்.

ஆந்திரமாநிலத்தில் 'எட்லபந்தம்' என்னும் விளையாட்டு நடைபெறுகின்றது. இவ்விளையாட்டு தமிழகத்திலுள்ள 'பொங்கல் மஞ்சு விரட்டு' என்னும் விளையாட்டினைப் போன்றுள்ளது.

நீலகிரித்தோடர்கள் வலிய எருமையை அடக்கிய ஆண்மகனுக்குப் பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர். பல ஆண்டுகளுக்கு முன்னர் காளையினை அடக்கிப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் மதுரை, திருநெல்வேலிப் பகுதிகளில் வசித்த 'கள்ளர்' இனத்தவர்களிடம் இருந்துள்ளது.

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு மதுரை மாவட்டத்தில் தைப்பொங்கல்நாளில் தொடங்கி வைகாசி மாதம்வரை நடைபெறுகின்றது. சமயச்சடங்கோடு தொடர்புள்ள 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு இக்காலத்தில் சில ஊர்களில் பரிசுப் போட்டியாகவுள்ளது. சல்லிக்கட்டில் தங்கநாணயம், தொலைக்காட்சிப்பெட்டி, சைக்கிள், அண்டா, மிதிவண்டி, சிறுகலவை இயந்திரம்(மிக்சி), பானை, குத்துவிளக்கு, இவைகளுடன் வேட்டி, துண்டு ஆகியவைகளை விழாக்குழு பரிசாகக் கொடுக்கின்றது.

சல்லிக்கட்டுக்குத் தேவையான காளைகளைக் கன்றுப் பருவத்திலேயே காளைவளர்ப்பவர்கள் தேர்ந்தெடுக்கின்றனர். காளை வளர்ப்போர் கூட்டம் கூட்டமாக மேய்ந்து வளரும் கிடைமாட்டுக் கன்றுகளைத் தேர்ந்தெடுக்கின்றனர். சல்லிக்கட்டுக் காளைக்குக் கிடைமாட்டுக் கன்றுகளில் 'புளிக்குளம்' என்னும் ஊரின் கிடைமாட்டுக் கன்றினையே நாட்டுப்புறமக்கள் தேர்ந்தெடுத்துள்ளனர் என்பதனை தர்ஸ்டன் குறிப்பு மூலமும் நாட்டுப்புறமக்களின் இன்றைய வழக்கின் மூலமும் அறிந்துகொள்ள முடிகின்றது. காளைவளர்ப்போரில் ஒருசிலர் தங்களின் வீட்டில் பிறந்து வளர்ந்த கன்றுகளையும் சல்லிக்கட்டுக்கு வளர்க்கின்றனர்.

காளைகளுக்குப் பொதுவாக உடலில் மூன்று சுழிகளே இருக்கும். (நெற்றி, முதுகு, கொண்டை) மூன்று இடங்கள் தவிர வேறு இடங்களிலும் காளைகளுக்குச் சுழிகள் அமைந்திருக்கும். அவற்றை நன்மை பயக்கும் சுழிகள், தீமை பயக்கும் சுழிகள் என்று நாட்டுப்புறமக்கள் பகுத்துள்ளனர். ரிஷபச்சுழி, பட்டரைச்சுழி, குடைமேற்குடை ஆகிய சுழிகளையுடைய காளைகளை வளர்ப்போர்க்கு நன்மை கிடைக்கும் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். இடிமேலிடி, வாய்ப்பூட்டு செவிப்பாம்பு, முற்பாடை, பிற்பாடை, விலங்கடி, நீர்ச்சுழி, உழவனைப் பார்த்த பூதம், ஏறுநாகம், இறங்குநாகம், கவ்வம், ஒற்றைக்கவ்வம், பெண்டிழந்தான், கறட்டு ஓந்தான் ஆகிய சுழிகளையுடைய காளைகளை வளர்ப்போர்க்குத் தீமை ஏற்படும் என்றும் நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர்.

காளை வளர்ப்போர் சல்லிக்கட்டுக்காகத் தேர்ந்தெடுத்த கன்றுக்கு அருகில் வேற்று ஆடவர்கள் செல்லாதவாறு ஒருவர் கவனிப்பில் கன்றினை வளர்த்து வருகின்றனர். ஒருசில காளைவளர்ப்போர் கன்றுகளுக்கு அருகில் ஆடவர்களையே நெருங்கிப் பழகாதவாறு பெண்களின் கவனிப்பில் கன்றினை வளர்த்து வருகின்றனர். பெண்கள் கன்றினை வளர்ப்பதால் ஆடவர்களைக் கண்டால் கன்று குத்தித் தள்ளும் இயல்பினைப் பெற்றுவிடுகின்றது.

'சல்லிக்கட்டு'க்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கன்றுக்கு அருகம்புல், தவிடு, புண்ணாக்கு ஆகியன உணவாகக் கொடுக்கப்படுகின்றன. கன்றினைப் பராமரிப்பாளர் ஒருவரே பிடித்து மேய்க்கும் பழக்கம் நாட்டுப்புறமக்களிடம் காணப்படுகின்றது. கன்றினைப் பராமரிப்பவரைத் தவிர மற்றவரைக் குத்தும் இயல்பு வந்துவிடுகின்றது. பனி படர்ந்த புல்வெளியில்

அருகம்புல்லினைக் கன்று மேய்ந்தால் வலிமையான உடலைப் பெற்றுவிடும் எனக் காளைவளர்ப்போர் கருதுகின்றனர். கன்றுக்கு நீச்சல் பயிற்சி கொடுப்பதன் மூலம் கன்று விரைவாக ஓடுவதற்கேற்ற வலிமையைப் பெற்றுவிடுகின்றது.

காளைவளர்ப்போர் சல்லிக்கட்டுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கன்றுக்குக் காளைப்பருவம் வந்த பின்னரே மூக்கணாங்கயிறு குத்துகின்றனர்.

காளைளவளர்ப்போர் தங்களின் காளைக்குப் பசும்புல்லோடு, சத்தான உணவுகளான கத்திரிக்காய், தேங்காய், ஊறவைத்த பருத்திவிதை, வாழைப்பழம், கடலைமிட்டாய் போன்றவற்றையும் கொடுக்கின்றனர்.

சல்லிக்கட்டிற்காக வளர்க்கப்படுகின்ற காளைகளுக்குக் காயடிக்கப்படுவதில்லை. (ஆண்மை குறைக்கப்படுவதில்லை) காயடிக்கப்படாத காளைகளே திமிரோடும் முனைப்போடும் இருக்கும். இதனால் சல்லிக்கட்டில் திறமையான முறையில் காளை கலந்துகொள்ளும் என்று காளைவளர்ப்போர் கருதுகின்றனர். மேலும் சல்லிக்கட்டுக்காக வளர்க்கின்ற காளைகளைக் காளைவளர்ப்போர் பசுவோடு சேர்ந்து இனப்பெருக்கம் செய்யவிடுவதில்லை.

காளை கட்டுத்தறியில் கட்டியிருக்கும்பொழுது யானையைப் போன்று அசைந்தால் காளைவளர்ப்போரின் குடும்பத்திற்குத் தீங்கு ஏற்படும் என்ற கருத்து நாட்டுப்புறமக்களிடத்தில் பரவலாகக் காணப்படுகின்றது.

காளையின் நிறங்களுள் மயிலை நிறக்காளை மற்ற நிறக்காளைகளைக் காட்டிலும் அழகாக இருப்பதனால் மயிலை நிறக்காளையினை நாட்டுப்புறமக்கள் பெரிதும் விரும்பி வளர்க்கின்றனர்.

காளைவளர்ப்போர் காளைகளை வாங்கும்பொழுது முகம் சிறியதாக உள்ள காளைகளையே வாங்கி வளர்க்கின்றனர். முகம் சிறியதாக உள்ள காளைகள் அதிகநேரம் உழைத்தாலும் காளைகளுக்குக் களைப்பு ஏற்படாமல் சுறுசுறுப்பாகச் செயல்படும் என்று காளைவளர்ப்போர் கருதுகின்றனர்.

ஒருசில காளைகளுக்குக் கண்கள் மற்ற காளைகளைவிட மாறுபட்ட நிலையில் இருக்கும். காளைகளின் கண்களில் வெள்ளைநிறப்புள்ளி தோன்றல், சதைபடர்ந்திருத்தல், தண்ணீர் வடிதல்

போன்ற குறைகள் இருக்கும். இவ்வாறு குறையுள்ள கண்களையுடைய காளைகளைக் காளைவளர்ப்போர் வளர்ப்பதில்லை.

காளைகளுக்குக் காதுகளை வாரிவிடுவதால் காளை ஓரப்பார்வை பார்த்துச் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனைக் குத்தும் என்பதனால் காளை வளர்ப்போர் தங்களின் காளைகளுக்குக் காதுகளை வாரிவிடுகின்றனர். குத்துக் கொம்புக்காளைகள் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனை நன்றாகக் குத்தும் என்பதனால் காளைவளர்ப்போர் குத்துக்கொம்புக் காளைகளையே பெரும்பாலும் விரும்பி வளர்க்கின்றனர்.

காளையின் கழுத்தில் தசை அதிகமாகத் தொங்கிக் கொண்டிருந்தால் காளை சுறுசுறுப்பாகச் செயல்படாமல் மந்தமான நிலையில் இருக்கும். இதனால் தொங்குதசைக் காளையினைச் சல்லிக்கட்டிற்குக் காளைவளர்ப்போர் வளர்ப்பதில்லை.

காளைகளுக்குத் திமில் அளவாக இருக்கவேண்டும் என்றும் பருத்த திமிலையுடைய காளையினை மாடுபிடிவீரன் எளிதில் அடக்கிவிடுவான் என்றும் காளைவளர்ப்போர் கருதுகின்றனர்.

காளைக்குத் தொப்பூழ் வயிற்றோடு ஒட்டியிருக்க வேண்டும். தொப்பூழ் காளையின் வயிற்றோடு ஒட்டியிராமல் தொங்கிக் கொண்டிருந்தால் காளை சற்றுத் தூரம் ஓடியவுடன் களைத்துவிடும் எனக் காளைவளர்ப்போர் கருதுகின்றனர்.

ஏறுவால் அமைப்புடைய காளைகள் விரைவாக ஓடக்கூடிய தன்மையுடையவையாக இருக்கும். ஏறுவால் காளையின் வாலை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரன் எளிதில் பிடிக்கமுடியாது என்பதனால் காளை வளர்ப்போர் ஏறுவால் காளைகளைப் பெரிதும் விரும்பி வளர்க்கின்றனர்.

காளைக்குச் சாத்துக்கால், இணையடிக்கால், பின்னுக்கால், சுண்டுவாதம், வெட்டுக்கால், மந்திக்கால் ஆகிய கால்களைப் போன்று இல்லாமல் நேராகவும், நடக்கும்பொழுது கால்கள் ஒன்றோடு ஒன்று உரசிக்கொள்ளாமலும் இருக்க வேண்டும்.

காளைக்குக் கால்குளம்பு சீர்செய்து லாடம் கட்டவேண்டும். லாடம் காட்டுவதனால் காளையின் கால் குளம்பு தேய்ந்து புண்ணாகாமல் இருக்கின்றது.

சல்லிக்கட்டில் காளை மாடுபிடிவீரனிடம் பிடிபடாமல் வெற்றி பெற காளைவளர்ப்போர் தங்களின் காளைக்குச் சில பயிற்சிகளைக் கற்றுத்

தருகின்றனர். பயிற்சிபெற்றகாளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரர்களைப் பார்த்து அச்சம் கொள்ளாமல் அவர்களைப் பாய்ந்துக் குத்தி வெற்றி பெறுகின்றது.

தமிழகத்தில் காளை விளையாட்டு சல்லிக்கட்டு, திடல் சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு, பொங்கல் மஞ்சுவிரட்டு, எருதுகட்டு, சலக் எருது, சேசப்படியெடுத்தல் என ஏழு வகைகளில் நாட்டுப்புறமக்களால் விளையாடப்பட்டு வருகின்றது.

சல்லிக்கட்டு நடத்துவதற்குச் சில நாட்களுக்கு முன்னர் ஊரின் பொதுவிடத்தில் ஊர்மக்கள் கூடிச் சல்லிக்கட்டு நடத்துவது பற்றிப் பேசி முடிவெடுக்கின்றனர். சல்லிக்கட்டு ஊர்த்தெய்வத்திற்கு நடத்த முடிவு செய்தவுடன் உள்ளூர் மற்றும் பிற ஊர் மக்களுக்குத் தோட்டியின் மூலம் விழாக்குழு அறிவிக்கின்றது.

சல்லிக்கட்டில் காளைகளை அவிழ்த்துவிடும்பொழுது முதலில் ஊர்த்தெய்வத்தின் காளை அடுத்து மரியாதைக்காரர்களின் காளைகள் அடுத்து பிற ஊர்களின் காளைகள் என்று விழாக்குழுவினர் வரிசைப்படுத்தியுள்ளனர்.

சல்லிக்கட்டில் கலந்து கொள்ளும் காளைகளை வரிசைப்படுத்தி விடுவதற்கு 'வாடி' பயன்படுகின்றது. இவ்வாடிக்குள் காளையினைக் காளைவளர்ப்போர் நிறுத்தியவுடன் விழாக்குழுவினர் காளையின் சிறப்பினையும் காளையினை வளர்த்தவரின் பெருமையினையும் அவரின் ஊரினையும் அறிவிக்கின்றனர். பின்னர் காளையினைப் பிடித்தால் மாடுபிடிவீரனுக்கும் காளையினைப் பிடிக்கவில்லையெனில் காளைக்கும் கொடுக்கப்படவுள்ள பரிசுப்பொருளை விழாக்குழு அறிவிக்கின்றது.

வாடியிலிருந்து வெளியேறுகின்ற காளை ஓடக்கூடியதாக இருந்தால் மாடுபிடிவீரன் அதனை அய்ம்பது அடிதூரம் வரை அதன் திமிலைத் தழுவி அனணந்தவாறு செல்ல வேண்டும். காளை நின்று விளையாடும் குணம் கொண்டதாக இருந்தால், அதன் திமில்பகுதியில் மாடுபிடிவீரன் விழுந்து தழுவிக் காளையின் மூன்று தாவிற்கும் கீழே விழாமல் அணைய வேண்டும். இவ்விரண்டு முறைகளும் காளையினை அடக்கும் முறைகளாகவுள்ளன.

சில ஊர்களில் சல்லிக்கட்டு வருடந்தோறும் நடைபெறும் சல்லிக்கட்டு நடத்தும் மாதமும் தேதியும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட

நாளில் இல்லாமல் வருடத்திற்கு ஒருதேதி மாறிக் கொண்டிருக்கும். இவ்வாறு தேதி மாறிச் சல்லிக்கட்டு நடைபெறும் ஊரில் நடைபெறுவதனை ஊரார் மற்ற ஊர்களுக்குத் தமுக்கடித்து சாட்டு(சாற்று) கின்றனர். இதனை நாட்டுப்புறமக்கள் சாட்டிய சல்லிக்கட்டு என்று கூறுகின்றனர்.

அலங்காநல்லூர், பாலமேடு, அச்சம்பட்டி, குலமங்கலம் ஆகிய ஊர்களில் ஆண்டுதோறும் ஒருகுறிப்பிட்ட நாளில் தவறாமல் சல்லிக்கட்டு நடைபெறுவதால் எந்தவிதமான விளம்பரங்களும் செய்யாமலேயே மாடுபிடிவீரர்களும் காளைகளும் வந்து சேர்ந்துவிடுகின்ற காரணத்தால் இதனைச் சாட்டாத (சாற்றாத) சல்லிக்கட்டு என்று நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர்.

திடல் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளுக்கும் மாடுபிடி வீரர்களுக்கும் விழாக்குழுவினரால் எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒரு குறிப்பிட்ட எண்ணுள்ள காளையினை விளையாட்டுத்திடலில் அவிழ்த்துவிட்டு ஒரு குறிப்பிட்ட எண்ணுள்ள மாடுபிடிவீரன் அணைய வேண்டும் என்று விழாக்குழுவினர் அறிவிப்புச் செய்கின்றனர். பின்னர் மாடுபிடிவீரன் திடலில் அவிழ்த்துவிட்ட காளையினை அடக்கி வெற்றிபெறுகின்றான்.

சல்லிக்கட்டு நடத்துவதற்கு முன்னேற்பாடுகள் செய்வதனைப் போன்றே மஞ்சுவிரட்டு நடத்துவதற்கும் ஊர்மக்கள் ஒன்று கூடி முடிவெடுத்து மஞ்சுவிரட்டு நடத்துகின்றனர்.

மஞ்சுவிரட்டு என்னும் விளையாட்டு 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டிலிருந்து சற்று மாறுபட்டுள்ளது. மஞ்சுவிரட்டில் கலந்து கொள்ளும் காளைகள் அனைத்தையும் காளை வளர்ப்போர் 'தொழு' விற்குள் அடைத்துவிடுகின்றனர். பின்னர் விழாக்குழுவினர் ஊர்த்தெய்வத்தினை வணங்கி விட்டுத் தொழுவினைத் திறந்துவிடுகின்றனர். தொழுவிலிருந்து வெறியேறுகின்ற காளைகள் சுமார் அய்ம்பது அடி தூரம் கடந்த பின்னரே வீரர்கள் பலர் கூடிக் காளைகளை அணைகின்றனர்.

தமிழகம் முழுவதும் உழவர்கள் தங்களுடைய உழவுத்தொழிலுக்கு உறுதுணையாக இருக்கின்ற மாடுகளுக்குத் தைமாதம் இரண்டாம்நாள் பொங்கல் வைத்து வழிபடுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளனர். பொங்கல் வழிபாடு முடிந்தவுடன் உழவர்கள் தங்களின் காளைகளை

ஊரின் பொதுவிடத்திற்குக் கொண்டுவந்து அவிழ்த்துவிடுகின்றனர். இதனை உள்ளூர் இளைஞர்கள் பிடித்து அடக்குகின்றனர். இம்முறையினைப் பொங்கல் மஞ்சுவிரட்டு என்று நாட்டுப்புறமக்கள் கூறுகின்றனர்.

'எருதுகட்டு' என்னும் விளையாட்டு அய்யனார் கோவிலில் நடைபெறும் குதிரையெடுப்பு விழாவில் நடைபெறுகின்றது. 'எருதுகட்டு' என்னும் விளையாட்டில் காளையின் கழுத்தில் பெரியவடத்தின் ஒரு நுனியினைக் கட்டிவிடுகின்றனர். வடத்தின் மறுநுனியினை ஒரு கல்தூணில் கட்டிவிடுகின்றனர். இவ்வாறு கட்டப்பட்டுள்ள காளையினை மாடுபிடிவீரர்கள் பலர்கூடி அடக்குகின்றனர்.

காளையை மனிதன் பிடித்து வெற்றிகொள்ளும் மாடுபிடிவகைகள் மட்டுமல்லாமல் வேறு வகையான காளை விளையாட்டுக்களும் நாட்டுப்புறமக்களால் நடத்தப்பட்டு வருகின்றன.

'சலக் எருது' என்னும் விளையாட்டில் வீர இளைஞர்கள் பலர் வீரமுள்ள காளைகளை வரிசையாக நிறுத்துகின்றனர். ஒவ்வோர் இளைஞரும் ஒவ்வொரு காளையின் தலையில் கொம்புகளுக்கிடையில் சுமார் ஆறடி நீளமுள்ள கம்புகளை வைக்கின்றனர். பின்னர் மறுநுனியைத் தங்களின் வலக்கையில் பிடித்துக்கொண்டு காளைகளின் வேகத்திற்கு ஏற்றவாறு ஓடி காளையின் தலையில் வைத்த கம்பு கீழே விழாமல் சுமார் ஆயிரம் அடி தூரம் ஓடி வெற்றி பெறுகின்றனர். 'சலக் எருது' என்னும் விளையாட்டு வேறுமுறையிலும் நடைபெறுகின்றது. 'சலக் எருது' என்னும் விளையாட்டில் கலந்துகொள்ள வந்த காளைகள் அனைத்தையும் அவற்றின் உரிமையாளர்கள் ஓரிடத்தில் நிறுத்துகின்றனர். பின்னர் காளைகள் அனைத்தையும் சுமார் இரண்டு கிலோ மீட்டர் தூரத்திற்குக் காளையின் உரிமையாளர்கள் அடித்து ஓட்டுகின்றனர். இதில் முதல் காளையாக ஓடி வெற்றிபெற்ற காளைக்கு விழாக்குழு எலுமிச்சைப்பழம் ஒன்றினைப் பரிசாகக் கொடுக்கின்றது. சலக் எருதில் காளை பெறும் வெற்றி காளையின் உரிமையாளர்க்கும் அவரின் ஊர்மக்களுக்கும் அவ்வட்டாரத்தில் பெருமையைத் தருகின்றது. மேலும் காளையின் கொம்புகளுக்கிடையே இளைஞன் கம்பினை வைத்து ஓடிவெற்றி பெறுவது அவனின் ஆற்றலையும் மதிநுட்பத்தையும் புலப்படுத்துகின்றது.

சேசப்படியெடுத்தல் என்னும் விளையாட்டு 'ஒன்னம்மாள் தொட்டராயர்' என்னும் தெய்வத்திற்கு அனுப்பக்கவுண்டர் இனத்தினரால்

நடத்தப்படுகின்றது. 'சேசப்படியெடுத்தல்' என்னும் விளையாட்டில் கலந்துகொள்ள பல ஊர்களிலிருந்து பசுக்களும், காளைகளும் வருகின்றன. சேசப்படியெடுத்தலில் கலந்துகொள்ள வந்துள்ள மாடுகள் அனைத்தையும் விழாக்குழுவினர் ஊரின் புறப்பகுதியிலிருந்து ஓட்டிவிடுகின்றனர். இவற்றில் எந்த மாடு முதல் மாடாக ஊரின் எல்லையினை வந்தடைகின்றதோ அந்த மாடே வெற்றி பெற்றதாக விழாக்குழுவினர் அறிவிக்கின்றனர். சேசப்படியெடுத்தலில் வெற்றி பெற்ற மாட்டுக்கு விழாக்குழுவினரின் சார்பில் எலுமிச்சைப்பழ மாலை அணிவிக்கப்படுகின்றது. சேசப்படியெடுத்தலில் வெற்றி பெற்ற காளையின் உரிமையாளருக்கு அவ்வட்டாரத்தில் பெருமை ஏற்படுகின்றது.

குங்குமம் தடவப்பட்ட எலுமிச்சைப்பழத்தைப் பூசாரி பிழிந்துவிடுவதனால் இறைவனுக்கு இரத்தப்பலி கொடுத்ததற்குச் சமம் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். காப்புக்கட்டுதல் என்னும் சடங்கினைச் செய்வதால் ஊர்மக்களுக்குத் தீமைகள் ஏற்படாமல் ஊர்த்தெய்வங்கள் காத்துக்கொள்ளும் என்று ஊர்மக்கள் நம்புகின்றனர். குறிப்பாகச் சல்லிக்கட்டு முடியும் வரையிலாவது ஊர்மக்களை ஊர்த்தெய்வங்கள் காத்துக்கொள்ளும் என்ற நம்பிக்கையும் நட்டுப்புற மக்களிடம் இருந்து வருகின்றது.

சல்லிக்கட்டு விழாவில் மாடுபிடிவீரன் சல்லிக்கட்டுக் காளையால் காயப்பட்டு இறந்துவிடுவதற்கு அதிகவாய்ப்பிருக்கின்றது. இவ்வாறு மாடுபிடிவீரன் இறந்துகொண்டிருந்தால் படிப்படியாக மனிதஇனம் முழுவதும் அழிந்துவிடுமோ என்ற சிந்தனை நாட்டுப்புறமக்களுக்குத் தோன்றிய சமயத்தில் வெட்டவெட்டத் தளிர்க்கும் மூங்கிலைப் போன்று மனிதஇனமும் ஒருவன் மறைவிற்குப் பின் இன்னொருவன் தோன்றுவான் என்ற நம்பிக்கையில் சல்லிக்கட்டு விழாவில் பச்சை மூங்கில் நாட்டுப்புற மக்களால் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதப்படுகின்றது. நாட்டுப்புறமக்கள் பச்சை மூங்கிலை மங்கலப்பொருளாகக் கருதி, சல்லிக்கட்டு விழாவில் வளமை நோக்கில் பயன்படுத்துகின்றனர்.

நாணலின் சாம்பல், அறுகம்புல், சாணம், கோமியம், பால் ஆகியவற்றை ஒன்றாகக் கலந்து ஊரின் நான்கு எல்லைப் பகுதிகளிலும் வாடிவாசலின் நான்கு புறங்களிலும் விழாக்குழுவினர் தெளித்து ஊர்த்தீட்டை விலக்குகின்றனர். எழுமலை என்னும் ஊரில் வாடிவாசலின் முன் சல்லிக்கட்டுத் தொடங்குமுன்பு பூசாரி ஒரு பூசணிக்காயைச் சமீன்தாரின் தலையைச் சுற்றிவிட்டுப் பின்பு உடைத்துவிடுகின்றார்.

இவ்வாறு செய்வதனால் சமீன்தாரின் மீதுள்ள கண்ணேறு கழிகின்றது என ஊர்மக்கள் நம்புகின்றனர்.

காளைவளர்ப்போர் தங்களின் காளைகளைச் சல்லிக்கட்டிற்குக் கொண்டு செல்லுமுன்னர் தங்களின் குலதெய்வத்தை வணங்கித் திருநீறு பூசுகின்றனர். இவ்வாறு செய்வதனால் காளைகளைச் சல்லிக்கட்டில் மாடுபிடிவீரன் பிடிக்க முடியாது என்று காளைவளர்ப்போர் நம்புகின்றனர். காளைவளர்ப்போரில் ஒருசிலர் தங்களின் காளையினைச் சல்லிக்கட்டிற்குக் கொண்டு செல்லும் முன்னர் ஊர்த்தெய்வத்தின் மீதுள்ள அழுக்கினை (பக்கு) எடுத்துக் காளையின் மீது போடுகின்றனர். இவ்வாறு செய்வதனால் ஊர்த்தெய்வத்தின் வலிமை காளைக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கையும் காளைவளர்ப்போரிடம் காணப்படுகின்றது.

கோயில்காளைக்குச் சல்லிக்கட்டில் கிடைத்த பரிசுகள் அக்காளை நேர்ந்துவிடப்பட்ட தெய்வத்திற்குச் சேரவேண்டியது என்பதனால் பரிசுப் பொருள்களை விற்றுப் பணத்தைத் தெய்வத்திற்குக் காணிக்கையாகச் செலுத்தவேண்டும் என்றும் இவ்வாறு செய்யவில்லையெனில் கோயில் காளையினைப் பராமரிப்பவரின் குடும்பத்திற்குத் தெய்வத்தின் சீற்றத்தால் தீங்கு ஏற்படும் என்றும் காளைவளர்ப்போர் நம்புகின்றனர்.

சல்லிக்கட்டில் வெற்றிபெற்றுச் சல்லிக்கட்டு வட்டத்தில் பெயர் பெற்று விளங்கும் காளைகளின் உரிமையாளர்கள் தங்களின் காளைக்குப் பிடிகாரர்கள் வசிய மை வைத்திருப்பார்கள் என எண்ணுகின்றனர். மாடுபிடிவீரனால் வசிய மை வைக்கப்பட்ட காளை சல்லிக்கட்டில் மாடுபிடிவீரனைக் குத்திக் காயப்படுத்தாது என்று எண்ணிக் காளை வளர்ப்போர் தங்களின் காளையினை வாடிவாசலுக்குக் கொண்டு செல்லும்பொழுது காளையின் மீது மனிதச் சிறுநீர் அல்லது காளையின் சிறுநீரினைத் தெளிக்கின்றனர். இவ்வாறு சிறுநீர் தெளிப்பதனால் காளையின் மீது மாடுபிடிவீரன் வசிய மை தடவியிருந்தால் அது முறிவு ஏற்பட்டுவிடும் என்று காளையின் உரிமையாளர்கள் நம்புகின்றனர்.

மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டிற்குச் சென்று காளைபிடிக்கப் போகும் முன்னர் வீட்டில் (அல்லது) ஊர்த்தெய்வத்தின் கோவிலில் பல்லி சகுனம் பார்க்கின்றனர். பல்லி சகுனம் பரர்க்கும்பொழுது இடப்புறம் நின்று ஒரு பல்லி கத்தினால் சல்லிக்கட்டில் மாடுபிடிக்கும்பொழுது தனக்குத் தீமை ஏற்படாமல் நன்மை பயக்கும் என மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர்.

மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டிற்குச் சென்று மாடுபிடிக்க வீட்டை விட்டுச் செல்லும்பொழுது தங்களின் எதிரே பெண் தலைமுடியினை விரித்தபடி வந்தால் தீயசகுணம் என்று நினைத்து மாடுபிடிவீரர்கள் சல்லிகட்டிற்குச் செல்லமாட்டார்கள். மூன்றுபேர் சேர்ந்து ஒரு காரியத்திற்குச் சென்றால் அக்காரியம் தடைப்படும் என்ற நம்பிக்கை நாட்டுப்புறமக்களிடம் பரவலாகக் காணப்படுகின்றது. இந்நம்பிக்கையினை மாடுபிடிவீரர்களும் கடைப்பிடிக்கின்றனர்.

மாடுபிடிவீரர்களில் ஒரு சிலர் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகள் தங்களைக் குத்திக் காயப்படுத்தாமல் இருப்பதற்கு மந்திரவாதிகளிடம் தாயத்து வாங்கிக் கட்டிக்கொள்கின்றனர். வசியம் செய்து காளைகளைப் பிடிக்கும் மாடுபிடிவீரர்கள் சல்லிக்கட்டு நடைபெறும் ஊரில் தனிநபர் வீட்டில் தண்ணீரோ, உணவோ சாப்பிடமாட்டார்கள். ஏனென்றால் தாங்கள் சாப்பிடும் வீடு தீட்டுக்குரிய வீடாக இருந்தால் காளைக்குத் தாங்கள் வைத்துள்ள வசியம் முறிந்துவிடும் என்று நம்புகின்றனர். காளைகளுக்கு வசியம் செய்து வைத்து மாடுபிடிவீரன் பிடித்தால் அவனின் குடும்பம் விருத்தியடையாது என்று காளைகளுக்கு வசியம் செய்யாமல் காளைகளைப் பிடிக்கும் மாடுபிடிவீரர்கள் கூறுகின்றனர்.

சல்லிக்கட்டு எந்தத் தெய்வத்திற்கு நடத்தப்படுகின்றதோ அந்தத் தெய்வத்தினை மாடுபிடிவீரர்கள் வணங்கிவிட்டு அத்தெய்வத்தின் பூசாரியிடம் திருநீறு வாங்கிப் பூசிக்கொள்கின்றனர். இதனால், தங்களுக்கு நன்மை கிடைக்கும் என்று மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர். சல்லிக்கட்டில் முதல் மாடாக சல்லிக்கட்டு நடைபெறும் ஊர்த்தெய்வத்தின் காளையினை விழாக்குழுவினர் அவிழ்த்துவிடுகின்றனர். இதனை மாடுபிடிவீரர்கள் பிடிக்க மாட்டார்கள். ஏனெனில் ஊர்த்தெய்வத்தின் காளையினைப் பிடித்தால் தெய்வக்குற்றம் தங்களுக்கு வந்துசேரும் என்று மாடுபிடிவீரர்கள் நம்புகின்றனர்.

தமிழகம் முழுவதும் தைமாதம் இரண்டாம்நாள் மாட்டுப்பொங்கல் நடைபெறுகின்றது. ஆனால், 'திருமங்கலம்' என்னும் ஊருக்கு அருகிலுள்ள 'கரடிக்கல்' என்னும் ஊரிலுள்ள மக்களும் செக்காணூரணிக்கு அருகிலுள்ள 'கீழ்ப்பட்டி' என்னும் ஊரிலுள்ள மக்களும் சல்லிக்கட்டு நடைபெறும் நாளில் மாட்டுப்பொங்கல் வைத்து இறைவனை வழிபடுகின்றனர்.

மாட்டுப்பொங்கல் வைத்த வீடுகளின் முன்னர் அடுப்புக்கரித் துகள்களைத் தூவிவிடுவதனால் இறைவனுக்குப் படைக்கப்பட்ட பொங்கல்

உணவை இறைவழிபாடு முடிவதற்குள் தீயஆவிகள் எச்சில்படுத்திவிடா என்று கரடிக்கல், கீழப்பட்டி ஆகிய ஊரிலுள்ள மக்கள் நம்புகின்றனர்.

வாழ்க்கை முற்றுப்பெறாமல் இறந்த உயிர்களே தீயஆவிகளாக அலைகின்றன என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். வாழ்க்கை முற்றுப் பெறாமல் இறந்த உயிர்களின் உடல்களைத் தீயிட்டு எரிப்பதனை நாட்டுப்புறமக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர். இதனால், தீயஆவிகள் தங்களின் உடலை அழித்தது 'தீ' என எண்ணித் 'தீக்கு' அச்சப்படுகின்றன. 'தீ' யின் குறியிடாக் கரித்துண்டு இருப்பதனால் கரித்துண்டுக்குத் தீயஆவிகள் அச்சப்படும் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர்.

'சல்லிக்கட்டு' நடத்தப்படும் தெய்வத்திற்குச் சல்லிக்கட்டு நடைபெறும் நாளில் நேர்த்திக்கடன் செய்தவர்கள் வாழைப்பழத்தைச் சூறை விடுகின்றனர். இதனை நாட்டுப்புறமக்கள் 'கனி சூறைவிடுதல்' என்று கூறுகின்றனர். சல்லிக்கட்டு நடத்தப்படும் தெய்வத்திற்கு அவ்வூர்மக்கள் மற்றும் அவ்வூரினைச் சுற்றியுள்ள மக்கள் ஏதாவது ஒரு வேண்டுதலின் பேரில் பல வண்ணத் துணிகளில் பாசிகளினால் அலங்காரம் செய்யப்பட்ட குடைகளைக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். மேலும் சல்லிக்கட்டு நடத்தப்படும் தெய்வத்திற்கு ஏதாவது ஒரு வேண்டுதலின் பேரில் நேர்த்திக்கடன்காரர்கள் சேத்தாண்டி வேசம் என்னும் நேர்த்திக்கடனையும் செய்து முடிக்கின்றனர்.

'திருவாதவூர்' என்னும் ஊரிலுள்ள சுந்தரபாண்டியன் என்பவரிடம் சோதிடர் உங்களின் மகன்களின் உயிருக்கு ஆபத்து ஏற்படவுள்ளது என்று கூறியுள்ளார். இதனைக்கேட்ட சுந்தரபாண்டியன் என்பவர் தன்னுடைய ஊரிலுள்ள பிடாரியம்மனுக்குச் சல்லிக்கட்டு நடத்தியுள்ளார். இச்சல்லிக்கட்டில் இரண்டு மாடுபிடிவீரர்கள் இறந்துவிட்டனர். மாடுபிடி வீரர்களின் இறப்பினால் சுந்தரபாண்டியனின் மகன்களுக்கு ஏற்படவிருந்த ஆபத்து விலகிவிட்டது என்று சுந்தரபாண்டியன் குடும்பத்தினரும் ஊர்மக்களும் நம்புகின்றனர்.

சல்லிக்கட்டில் நடுவர்குழு கொடுத்த துண்டினைப் பெற்றுக் கொள்ளாமல் புறக்கணிப்பது ஊர்த்தெய்வத்தினைப் புறக்கணிப்பதற்குச் சமம் என்று நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர். மேலும் ஊர்த்தெய்வத்தின் காளையினைப் பழித்துப் பேசி அதன்மீது எச்சிலைத் துப்பினால் தெய்வக் குற்றம் ஏற்படும் என்றும் நாட்டுப்புறமக்கள் நம்புகின்றனர்.

சல்லிக்கட்டில் காளை மாடுபிடிவீரனிடம் பிடிபடாமல் தொடர்ந்து வெற்றிபெறும் காளையினை மட்டுமே சல்லிக்கட்டில் ஈடுபாடு கொண்டவர்கள் மதிக்கின்றனர். சல்லிக்கட்டில் தொடர்ந்து மாடுபிடி வீரனிடம் பிடிபட்ட காளையினை உழவுத்தொழிலுக்குப் பயன்படுத்துதல் அல்லது விலைக்கு விற்றுவிடுதல் என்ற பழக்கங்களைக் காளை வளர்ப்போர் கையாண்டு வருகின்றனர்.

சல்லிக்கட்டில் கலந்துகொண்டு மாடுபிடிவீரர்களிடம் பிடிபடாமல் சிறப்பான முறையில் வெற்றிபெற்ற கோயில்காளைக்குச் சமாதி, சிலை ஆகியன எடுக்கும் பழக்கங்கள் நாட்டுப்புறமக்களிடம் இருந்து வருகின்றன. சமாதி அல்லது சிலை எடுத்த கோயில்காளைகளையும் ஊர்த்தெய்வ வழிபாட்டோடு இணைத்து நாட்டுப்புறமக்கள் வணங்கி வருகின்றனர். ஊர்த்தெய்வக்கோயில் காளைகளை வணங்குவது ஊர்த்தெய்வத்தினை வணங்குவதற்குச் சமம் என்று நாட்டுப்புறமக்கள் எண்ணுகின்றனர்.

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளைகளின் கொம்புகள் சிறியதாகவும் கூர்மையற்றும் இருந்தால் அவற்றிற்குக் காளை வளர்ப்போரில் ஒரு சிலர் தகரக்கொம்புகளைச் செருகி விடுகின்றனர். மேலும் காளைவளர்ப்போரில் ஒரு சிலர் தங்களின் காளைகளுக்குச் 'சாராயம்' என்னும் மதுவைக் கொடுத்துச் சல்லிக்கட்டில் அவிழ்த்து விடுகின்றனர்.

காளைவளர்ப்போரில் ஒரு சிலர் தங்களின் காளை சல்லிக்கட்டில் அடக்கப்பட்டுவிட்டால் தன்னுடைய ஆட்களை வைத்து மாடுபிடி வீரர்களைத் தாக்குகின்றனர். சிலநேரங்களில் மாடுபிடிவீரன் காளை வளர்ப்பவரால் கொலை செய்யப்பட்டுள்ள செய்தியும் இடம்பெற்றுள்ளது. இவ்வாறு முறைகேடான செயல்கள் ஒரு சில நேரங்களில் மட்டுமே நடைபெறுகின்றன.

சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் காளையினை மாடுபிடிவீரர்கள் பிடித்துவிட்டால் காளையின் உரிமையாளருக்குச் சல்லிக்கட்டு வட்டாரத்தில் பெருமை இழக்கப்படும் என்பதற்காகக் காளை வளர்ப்போரில் ஒரு சிலர் மாடுபிடிவீரர்களுக்குப் பணம் கொடுத்துச் சல்லிக்கட்டில் கலந்துகொள்ளும் தங்களின் காளையினைப் பிடிக்க முடியாதபடி செய்துவிடுகின்றனர்.

ஊர்த்தெய்வ வழிபாட்டின்போது ஊர்த்தெய்வ வழிபாட்டினை நடத்தக்கூடிய ஊரின் மீது பகையுணர்வு கொண்டுள்ள ஊர்மக்கள் ஏதேனும் ஒரு வகையில் தீங்கு செய்து வழிபாட்டினைத் தடுக்காமல்

இருப்பதற்குக் காவல்பணி பயன்படுகின்றது. ஊர்த்தெய்வ வழிபாட்டில் ஒன்றான 'சல்லிக்கட்டு விளையாட்டின் போது கலவரம் ஏற்படாமல் தடுப்பதற்கு ஊர்க் காவல்காரர்களாக கள்ளர், மறவர், அகமுடையர் ஆகிய இனத்தவர்களை நாட்டுப்புறமக்கள் நியமித்துள்ளனர்.

ஊர்மக்கள் சல்லிக்கட்டுக்குரிய வாடியினைப் பெரும்பாலான ஊர்களில் நிரந்தரமாகக் கட்டியுள்ளனர். ஒரு சில ஊர்களிலுள்ள மக்கள் தற்காலிகமாக வாடிகட்டிச் சல்லிக்கட்டு நடத்துகின்றனர். தற்காலிகமாக வாடிகட்டும் பணியினை ஆசாரி, பள்ளர், பறையர் ஆகிய இனத்தவர்களில் ஊர்வேலை பார்க்கிறவர்கள் செய்துவருகின்றனர்.

ஓர் ஊரில் சல்லிக்கட்டு நடைபெறவிருந்தால் அதனை அவ்வூர்மக்கள் ஊர்த்தோட்டியின் மூலம் சல்லிக்கட்டு நடைபெறும் நாளினை ஊர்த்தோட்டி தமுக்கு என்னும் இசைக்கருவியினை இசைத்துச் சந்தைகளிலும் பிற ஊரில் நடைபெறும் சல்லிக்கட்டிலும் அறிவிக்கின்றார். மேலும் சுவரொட்டி விளம்பரம், செய்தித்தாள், வானொலி ஆகியவற்றின் மூலம் சல்லிக்கட்டு நடைபெறும் நாளினை விழாக்குழுவினர் பிற ஊர்மக்களுக்குத் தெரியப்படுத்துகின்றனர்.

சிற்றூர்களில் பெரும்பாலும் மேல்சாதியினரே ஊர்த்தெய்வ வழிபாட்டினை நடத்திச் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர். ஒரு சில ஊர்களிலுள்ள மேல்சாதியினர் ஆதிதிராவிட இனத்தவர்களுக்கு முக்கியப் பொறுப்பினைக் கொடுத்துச் சல்லிக்கட்டினை நடத்துகின்றனர்.

தமிழர்களின் வீரவிளையாட்டான சல்லிக்கட்டு என்னும் விளையாட்டில் இந்து, இசுலாம், கிறிஸ்தவம் ஆகிய மதத்தினர் கலந்துகொண்டு விளையாடி வருகின்றனர்.

'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டினைச் 'சல்லிப்பயல்' விளையாட்டு என்று சல்லிக்கட்டில் ஈடுபாடில்லாதவர்கள் கூறுகின்றனர்.

சல்லிக்கட்டு என்னும் விளையாட்டிற்கான நிதியினை ஊர்ப் பொதுப்பணத்திலிருந்து விழாக்குழு எடுத்துக் கொள்வதோடு தனியார் நிறுவனங்களிடமிருந்தும் வசூலிக்கின்றது. தனியார் நிறுவனங்கள் சல்லிக்கட்டிற்கு ஓரளவு நிதியினைக் கொடுத்துவிட்டுத் தங்கள் நிறுவனங்களின் விளம்பரங்களைச் சல்லிக்கட்டு நடத்தும் இடத்தில் விளம்பரம் செய்துள்ளன.

சல்லிக்கட்டு ஒரு காலத்தில் மதுரை மாவட்டம் முழுவதும் பரவலாக நடைபெற்று வந்திருக்கின்றது. சல்லிக்கட்டினால் ஏற்படுகின்ற

கலவரத்தின் காரணமாக மதுரை மாவட்டத்தில் பல ஊர்களில் சல்லிக்கட்டு நடைபெறுவது நின்றுவிட்டது. சல்லிக்கட்டில் கொடுக்கப்படும் பரிசுப்பொருட்களின் மதிப்பினைப் பொறுத்தே காளைகளின் எண்ணிக்கையும் மாடுபிடிவீரர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கின்றன. மதுரை மாவட்டத்திலுள்ள மக்கள் ஊர்த்தெய்வ நம்பிக்கையோடு தொடர்புபடுத்திச் சல்லிக்கட்டினை நடத்திவருவதனால் மதுரை மாவட்டத்தில் சில ஊர்களில் ஆண்டுதோறும் சல்லிக்கட்டு நடைபெற்று வருகின்றது. நாட்டுப்புறமக்கள் தங்களின் ஊர்த்தெய்வங்களுக்குச் செய்யும் வழிபாட்டுச் சடக்குகள் நிறுத்தப்பட்டால்தான் சல்லிக்கட்டு என்னும் விளையாட்டும் நடைபெறாமல் போய்விடும் எனக் கருதப்படுகின்றது. நாட்டுப்புறமக்கள் ஊர்த்தெய்வ வழிபாட்டினை நடத்திவருகின்ற பழக்கம் இருக்கும்வரை 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு தமிழக மக்களால் விளையாடப்பட்டுக் கொண்டேயிருக்கும் என்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது.

மதுரை மாவட்டத்தில் முற்காலத்தில் 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு பெருமளவு ஊர்களில் நடைபெற்றுள்ளது. இக்காலத்தில் சற்றுக்குறைவான ஊர்களில் சல்லிக்கட்டு நடைபெறுகின்றது. சல்லிக்கட்டில் மாடுபிடித்து வெற்றிபெற்ற வீரனை முற்காலத்தில் தமிழக மக்கள் மதித்துள்ளனர். காளை வளர்த்துக் சல்லிக்கட்டில் அவிழ்த்து விடுவதனைக் காளைவளர்ப்போர் சிறப்பாக எண்ணுகின்றனர். சல்லிக்கட்டில் அவிழ்த்துவிட்ட காளையினைப் பிடித்த மாடுபிடிவீரனைக் காளைவளர்ப்போர் தாக்குகின்ற தரமில்லாத செயல்கள் ஒரு சில சல்லிக்கட்டுகளில் இடம்பெற்று வருகின்றன. மாடுபிடிவீரர்களில் ஒரு சிலர் காளைவளர்ப்போரிடம் கையூட்டுப் (லஞ்சம்) பெற்றுச் சல்லிக்கட்டில் காளைகளைப் பிடிக்காமல் விட்டுவிடுகின்ற தரமில்லாத செயல்களில் ஈடுபடுகின்றனர்.

சல்லிக்கட்டு என்னும் விளையாட்டில் மாடுபிடிவீரர்களும் பார்வையாளர்களும் கலந்திருப்பதனால் இருதரப்பினர்க்கும் அதிக அளவில் காயங்கள் ஏற்படுகின்றன. சல்லிக்கட்டில் பார்வையாளர்க்குத் தனி இடவசதி செய்து கொடுத்துவிட்டு மாடுபிடிவீரர்கள் மட்டும் களத்தில் நின்று மாடுபிடித்தால் காயங்கள் ஏற்படுவதனைக் குறைத்துக் கொள்ளலாம்.

தமிழர்களின் பழமையான பண்பாட்டுக்கூறு இன்றளவும் சிற்சில மாற்றங்களுடன் நிலைபெற்று இருக்கின்றது என்பதற்குச் சல்லிக்கட்டு சான்றாகவுள்ளது.

காளைகளை வளர்ப்பதில் பெண்கள் ஈடுபட்டிருந்தாலும் காளை பிடிக்கும் களத்தில் இன்றளவும் பெண்கள் ஈடுபடவில்லை என்பதனை அறிய முடிகின்றது. முல்லை நிலத்தில் தோன்றிய விளையாட்டு காலப்போக்கில் பிற நிலங்களுக்கும் பெயர்ந்திருக்கலாம் என எண்ண இடமிருக்கிறது.

கல்வி வளர்ச்சியின் காரணமாகக் கல்வியாளர்களிடத்தில் சல்லிக்கட்டு குறித்த ஈடுபாடு குறைவாகவே உள்ளது. மேலும் கல்வியாளர்களில் சிலர் விலங்குகளுக்குத் துன்பத்தையும் மனித உயிர்களுக்கு ஆபத்தையும் விளைவிக்கக் கூடிய 'சல்லிக்கட்டு' என்னும் விளையாட்டு தேவையற்றது எனவும் கருதுகின்றனர்.

சல்லிக்கட்டில் கூடுகின்ற மக்களிடத்தில் சில நேரங்களில் கருத்து வேறுபாட்டினால் சலசலப்பு ஏற்பட்டு அது ஒரு சில நேரங்களில் ஊர்க்கலவரம் அல்லது இனக்கலவரமாக மாறிவிடுகின்றது. அவ்வாறு கலவரம் ஏற்பட்ட ஊர்களில் அடுத்தமுறை சல்லிக்கட்டு நடைபெறவிடாமல் அரசு தடை செய்கின்றது.

'சல்லிக்கட்டு' என்னும் இவ்வாய்வு சல்லிக்கட்டினையே மையமாக வைத்துச் செய்யப்பட்டுள்ளது. சல்லிக்கட்டோடு பிற காளை விளையாட்டுக்களையும் ஒப்பிட்டு ஆய்வு செய்தால் மேலும் பல உண்மைகளைக் கண்டறிய வாய்ப்புள்ளது.

## துணைநூற்பட்டியல்

### நூல்கள்

1. அகோல்கர், வி.வி., சமூக உளவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1963

2. அந்தோணிமுத்துப்பிள்ளை, நா., தமிழ்மொழியகராதி ஆசியன் எஜிகேசனல் சர்வீசஸ், நியூதில்லி, 1981.

3. அமரம்பேடு குழந்தைவேல் முதலியார், கலிபரிபாலன சிகிச்சாதீபம் என்கிற மாட்டு வாகடம், தெய்வமகள், விலாச அச்சுக்கூடம் சென்னை, 1951.

4. அருட்கலை, கோ., தமிழர் பண்பாட்டில் நம்பிக்கை, அருள்நிலைப் பதிப்பகம், புதுச்சேரி, 1995.

5. அவினாசிலிங்கம், தி.சு.,(ப.ஆ.) கலைக்களஞ்சியம் தொகுதி 4, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956.

6. அறவாணன், க.ப., அற்றைநாள் காதலும் வீரமும், பாரி நிலையம், சென்னை,1978.

7. அறவாணன், க.ப., தமிழர் தடங்கல், தமிழ்க் கோட்டம், புதுச்சேரி, 1994.

8. அறவாணன், க.ப., தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழ்க் கோட்டம், புதுச்சேரி, 1994.

9. இரவிக்குமார், சு., குதிரையெடுப்பு, பாலாஜி பதிப்பகம், மதுரை,1991.

10. இராசமாணிக்கனார், மா., தமிழர் நாகரிகமும் பண்பாடும்
பாரி நிலையம்,
சென்னை, 1970,

11. இராமநாதன், ஆறு., நாட்டுப்புற இயல் ஆய்வுகள்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1979.

12. இராமநாதன், ஆறு., நாட்டுப்புறப்பாடல் காட்டும் தமிழர் வாழ்வியல்:
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம், 1982.

13. கமலையா, க.சி., நமது பண்பாடு,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை, 1973.

14. கஸ்தூரி காந்தி, உ., நாட்டார் வாழ்வியலும் பண்பாடும்,
அன்னம் (பி) லிமிடெட்,
சிவகங்கை, 1986.

15. காந்தி, க., தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1980.

16. குணசேகரன், கே.ஏ., நாட்டுப்புற மண்ணும் மக்களும்,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்,
சென்னை, 1988.

17. கேசவராஜ், வெ., நடுகல் வழிபாடு,
சர்வோதய இலக்கியப்பண்ணை,
மதுரை, 1978.

18. கேசவன், கோ., கதைப்பாடல்களும் சமூகமும்,
தோழமை வெளியீடு,
கும்பகோணம், 1985.

19. கைலாசபதி, க., நாட்டுப்புறஇயல் ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1983.

20. சக்திவேல், சு., நாட்டுப்புறஇயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1983.

21. சக்திவேல், சு., (ப.ஆ.), பொன்னிறத்தாள் கதைப்பாடல், இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம், தஞ்சாவூர் 1992.

22. சக்திவேல், சு., நாட்டுப்புறவியல் நூலடைவு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1988.

23. சண்முகசுந்தரம்,சு., நாட்டுப்புற இயல் சிந்தனைகள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

24. சண்முகசுந்தரம், சு., தமிழ்நாட்டுப்புறப்பாடல்கள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1993.

25. சரசுவதி, வி., நாட்டுப்புறப் பாடல்களில் சமூக ஒப்பாய்வு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1982.

26. சரசுவதி வேணுகோபால், களஆய்வில் சில அனுபவங்கள், தாமரை வெளியீடு, மதுரை, 1979.

27. சரசுவதி வேணுகோபால்., தமிழக நாட்டுப்புறவியல், தாமரை, மதுரை, 1981.

28. சீனிவாசன், இரா., சக்தி வழிபாடு, செயக்குமார் ஸ்டோர்ஸ், நாகர்கோவில், 1975.

29. சுசீலா கோபாலகிருஷ்ணன்., சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987.

30. சுப்ரமணியன், ச.வே., தமிழ்நாட்டுப்புற இயல் ஆய்வு, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1979.

31. செல்லப்பா, சி.சு., வாடிவாசல், (ப.இ.), சென்னை, 1959.

32. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.) புறப்பொருள் வெண்பாமாலை, கழக வெளியீடு, சென்னை, 1978.

33. சோமலெ, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், நேசனல் புக் டிரஸ்ட், புதுதில்லி, 1975.

34. ஞானசேகரன், தே., மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், பார்த்திபன் பதிப்பகம், மதுரை. 1987.

35. தமிழவன், நாட்டுப்புற நம்பிக்கைகள், சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை, 1976.

36. தட்சிணாமூர்த்தி, அ., இந்தியப் பண்பாட்டில் தமிழும் தமிழர்களும், மனிதம் பதிப்பகம், திருச்சி, 1989.

37. திருநாவுக்கரசு., க.த., தென்கிழக்கு ஆசியநாடுகளில் தமிழ்ப்பண்பாடு, உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை, 1960.

38. துர்க்காதாஸ், சாமி, எஸ்.கே., தமிழ்நாட்டுப் பழமொழிகள், வானதி பதிப்பகம், சென்னை, 1960.

39. தேவநேயன், ஞா., தமிழ்நாட்டு விளையாட்டுகள், கழகவெளியீடு, சென்னை, 1962.

40. நடராசன், வை.தி., (ப.ஆ.) — வன்னியடி மறவன் கதை, (ப.இ.), மதுரை, 1977.

41. நடராசன், வை.தி., (ப.ஆ.) — அயோத்தி கதை, இராசேஸ்வரி வெளியீடு, நாகர்கோவில், 1987.

42. நாராயணன், ஜெ., (மொ.பெ.ஆ.), — சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1964.

43. நெடுஞ்செழியன், க., — இந்தியப் பண்பாட்டில் தமிழும் தமிழர்களும், மனிதம் பதிப்பகம், திருச்சி, 1989.

44. பரமசிவனாந்தம், அ.மு., — தமிழ்நாட்டு விழாக்கள், தமிழ்க் கலைப் பதிப்பகம், சென்னை, 1956.

45. பாலசுப்பிரமணியன், இரா., — தமிழர் நாட்டு விளையாட்டுக்கள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1979.

46. பாலுச்சாமி, நா., (ப.ஆ.), — வாழ்வியற் களஞ்சியம், தொகுதி எட்டு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991.

47. பிச்சை, அ., — தமிழர் பண்பாட்டில் விளையாட்டுக்கள், கபிலன் பதிப்பகம், சென்னை, 1983.

48. பெருமாள், அ.ந., — தமிழில் கதைப்பாடல், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987.

49. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், பாரி நிலையம், சென்னை, 1980.

50. முருகானந்தம், ச., (தொ.ஆ.), நாட்டுப்புறப்பாடல்கள், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1987.

51. முருகானந்தம், ச., (தொ.ஆ.), நாட்டுப்புறவியல் சிந்தனைகள், பார்த்திபன் பதிப்பகம், மதுரை, 1987.

52. முருகானந்தம், ச., (தொ.ஆ.), தமிழக நாட்டுப்புறமக்கள் பாடல்கள், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1990.

53. முருகானந்தம், ச., (தொ.ஆ.), நாட்டுப்புறப்பாடல்களில் வரலாற்றுச் செய்திகள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

54. ரூத்பெனிக்ட்., சுப்பிரமணியன், கி.பு., பண்பாட்டுக் கோலங்கள், தமிழ் வெளியீட்டுக்கழகம், சென்னை, 1964.

55. லூர்து, தே., (ப.ஆ.), நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், தொகுதி ஒன்று, பாரிவேள் பதிப்பகம், திருநெல்வேலி, 1981.

56. லூர்து, தே., (ப.ஆ.), நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், பாரிவேள் பதிப்பகம், திருநெல்வேலி, 1981.

57. லூர்து, தே., (ப.ஆ.), நாட்டார் வழக்காற்றியல் சில ஆய்வுகள், நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மன்றம், பாளையங்கோட்டை, 1997.

58. லெட்சுமணன், கே.எஸ்., (தொ.ஆ.), தமிழகப் பழமொழிகள், செல்வி பதிப்பகம், காரைக்குடி, 1963.

59. லெட்சுமணன், கே.எஸ்., (தொ.ஆ.), வாழ்வியல் பழமொழிகள், செல்வி பதிப்பகம், காரைக்குடி, 1967.

60. வானமாமலை, நா., (தொ.ஆ.), தமிழர் நாட்டுப்பாடல்கள், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1964.

61. வையாபுரிபிள்ளை, எஸ்., தமிழர் பண்பாடு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1968.

62. ஜகந்நாதன், கி.வா., (ப.ஆ.), நாடோடி இலக்கியம், கலைமகள் காரியாலயம், சென்னை, 1965.

63. ஜகந்நாதன், கி.வா., (ப.ஆ.), மலையருவி, சரசுவதி மகால், தஞ்சாவூர், 1958.

64. ஜகந்நாதன், கி.வா., (ப.ஆ.), தமிழ்ப் பழமொழிகள், காந்தமலை, சென்னை, 1988.

### பண்டை இலக்கியங்கள்

1. சாமிநாதய்யர், உ.வே., (ப.ஆ.), சிலப்பதிகாரம், கழகவெளியீடு, சென்னை, 1968.

2. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.), குறிஞ்சிப்பாட்டு, கழகவெளியிடு, சென்னை, 1968, நான்காம் பதிப்பு.

3. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.), கலித்தொகை, கழகவெளியீடு, சென்னை, 1969.

4. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.), அகநானூறு, கழகவெளியீடு, சென்னை, 1970. முதற்பதிப்பு,

5. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.), பதிற்றுப்பத்து, கழகவெளியீடு, சென்னை, 1970, முதற்பதிப்பு,

6. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.), பெரும்பாணாற்றுப்படை, கழகவெளியீடு, சென்னை, 1979.

7. சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.), முல்லைப்பாட்டு, கழகவெளியீடு, சென்னை, 1979.

8. துரைசாமிபிள்ளை, ஔவை சு., (உ.ஆ.), புறநானூறு, கழகவெளியீடு, சென்னை, 1996.

9. துரைசாமிபிள்ளை, ஔவை சு., (உ.ஆ.), பதிற்றுப்பத்து, கழகவெளியீடு, சென்னை, 1999.

கட்டுரைகள்

1. அரவிந்தன், வீரவிளையாட்டின் மாறியமுகம், இந்தியா டுடே, பக்.36, 37. சென்னை, நாள் 14.1.1998.

2. அர்த்தநாரீஸ்வரன், பெ., எருது விளையாட்டு, கல் வெட்டு, காலாண்டு இதழ் 15, பக். 13, 14 தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, நள ஆண்டு அய்ப்பசித்திங்கள்.

3. கணேசன், சு.சி., மஞ்சுவிரட்டு,
தினமணிக்கதிர், பக். 16—19,
சென்னை, நாள் 27.3.1994.

4. கணேசன், சு.சி., கோயில்மாடு,
தினமணிக்கதிர், பக். 24—28,
நாள் 3.4.1994.

5. பொன்னுத்தாய், சி., தருப்பைப்புல் சடங்கு,
பரல்கள்—4, பக். 161—176,
மதுரை காமராசர் பல்பலைக்கழகம்,
மதுரை, 1990.

6. (ஆ.பெ.இ.), தினத்தந்தி நாளிதழ்,
பொங்கல் பண்டிகை வடநாட்டில்
எப்படி கொண்டாடப்படுகிறது.
பொங்கல் மலர், p.v,
நாள் 14.1.1997.

**ஆய்வேடுகள்**

1. கலைச்செல்வி, கா., மதுரை மாவட்ட நாட்டுப்புறக்
கதைப்பாடல்கள்,
அச்சிடப்பெறாத முனைவர்ப்பட்ட
ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 1989.

2. முத்துமாறன், இரெ., அண்ணா மாவட்ட
நாட்டுப்புறப்பாடல் காட்டும் மக்கள்
வாழ்வியல்,
அச்சிடப்பெறாத முனைவர்ப் பட்ட
ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 1991.

3. முத்தையா, ஆ., மதுரை வட்டாரத்தில் சல்லிக்கட்டும்
மஞ்சிவிரட்டும்,
அச்சிடப்பெறாத எம்ஃபில் பட்ட
ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 1981.

## அகராதிகள்

1. கதிரைவேற்பிள்ளை, நா., தமிழ்மொழியகராதி, ஆசியன் எஜுகேசனல் சர்வீசஸ், நியூதில்லி, 1981.

2. புலவர் குழு, கழகத்தமிழ் அகராதி, கழக வெளியீடு, சென்னை, 1969.

3. புலவர்குழு, தமிழ்ப்பேரகராதி தொகுதிகள் II-VI, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.

## ENGLISH BOOKS

1. Clyde Kluckon, The Meaning of Culture, Perspectives on the Social Order, MCGraw-Hill Company, Newyork, 1963.

2. Cooke, W., The Popular Religion and Folkore, Munchrarn Manoharlal, New Delhi 1968.

3. Dorson Richard, M., (Editor) Folkore and Folk life, The University of Chicago, London, 1972.

4. Dundes Alan, The Study of Folklore, Prentice Hall, INC, Englewood Cliffs, N.J., 1965.

5. Dundes Alan, Folkdore Matters, The University of Tennessee, U.S.A., 1992.

6. Francis, W., Madurai District Gazetters., Vol. I, Government Press, Madras, 1906.

7. Huntington, Susan, L., Art of Ancient India, Wetherhill Publication, Newyork, 1993.

8. Masanolcot, The Caste System of India, Perspective on the Social Order, McGraw-Hill Book Company, Newyork, 1963.

9. Ramachandran, C.E., (Editor) Aspects of Indian History Culture, Books & Books, New Delhi, 1984.

10. Sankar Sen Gupta, Folklore and Folk Life in India, A Guide to Field Study, Indian Publications, Calcutta, 1965.

11. Thurston, Edgar, Castes and Tribes of Southern India, Vol. III, Cosmo Publications, Delhi, 1975.

12. Vanamamalai, N., Studies in Tamil Folk Literature, New Century Book House, Madras, 1969.

ENCYCLOPEDIAS

1. Bhatt, S.C., (Editor), The Encyclopaedic District Garzetters of India, Gyam Publishing House, New Delhi, 1998.

2. Cayne, S., Grolier Academic Encyclopedia, Vol. III, Grolier International, U.S.A., 1983.

3. Chandrasekhara Kambar, Kannada Jaanapada Vishwa kosha, Kannada Sahitya Parishat, Bangalore, 1985.

4. Gaetz, W., (Editor) The New Encyclopaedia Britannica, Vol. II, The University of Chicago, U.S.A., 1986.

5. Genitaska, (Editor) — Kodansa Encyclopaedia of Japan, Vol. II, Kodansa Ltd., New york, 1983.

6. Mircea Eliade, (Editor) — The Encyclopaedia of Religion, Macmillan Publishing Company, Newyork, 1987.

7. Normah Dickey, — Funks Swaghalls New Encyclopaedia, Vol. V, Funks Waghalls Ltd., U.S.A. [Year nothing)

8. Editors — The Encyclopaedia Americana, Vol. 3, Americana Corporation, Newyork, 1950.



1. காளையை சல்லிக்கட்டிற்கு அழைத்து வருகின்றனர்.



2. சல்லிக்கட்டுக்குப் பரிசுகள் வாடிவாசலுக்குக் கொண்டு வரப்படுகின்றன.



3. தீயஆவிகள் நெருங்காதவாறு அடுப்புக்கரித்துண்டுகள் போடப்பட்டுள்ளன.



4. அலங்காநல்லூர் வாடிவாசலின் முகப்புத்தோற்றம்.



5. காளையினை பலர் அடக்குகின்றனர் (முறையற்றது).



6. காளையினை இருவர் அடக்குகின்றனர் (முறையற்றது).



7. காளையினை ஒருவர் அடக்குகின்றார்.(முறையானது)



8. நின்று குத்தும் காளையினை வீரர்கள் பிடிக்க முடியாத காட்சி.



9. காளையின் தாக்குதலிலிருந்து தப்பிக்கப் படுத்துக்கொள்ளும் வீரர்; திசை திருப்பும் முயற்சியில் காளையின் வாலைப்பிடிக்கும் மற்றொரு வீரர்;



10.மாடுபிடிவீரன் அழகத்தேவனுக்கு சொரிக்கான்பட்டியில் அமைக்கப்பட்டுள்ள சிலை.



11.வீரபாண்டி செல்லத்தம்மன் கோயில்காளையின் சமாதியிலுள்ள கல்வெட்டு



12. முறையூர் கருப்புச்சாமி கோயில்காளைக்குச் சிலை எடுத்து கோயில் கட்டப்பட்டுள்ளது. இதில் இறந்தகாளையின் தலையும் உள்ளது.

## தகவலாளர்கள் பட்டியல்

| எண் | தகவலாளரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்ப்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | வை.லெட்சுமணன் | மூப்பனார் | 58 | விவசாயம் | பாரைப்பத்தி | 4.6.1994 |
| 2. | பி.கம்பத்துக்கோனார் | கோனார் | 60 | விவசாயம் | பாரைப்பத்தி | 4.6.1994 |
| 3. | சா.த.சுந்தரபாண்டியன் | கள்ளர் | 45 | விவசாயம் | திருவாதவூர் | 5.6.1994 |
| 4. | அ.அய்யாவு | அகமுடையார் | 65 | விவசாயம் | அயன்பாப்பாகுடி (அவனியாபுரம்) | 11.6.1994 |
| 5. | ரா.பொன்னம்பலம் | கோனார் | 55 | விவசாயம் | அயன்பாப்பாகுடி (அவனியாபுரம்) | 11.6.1994 |
| 6. | க.கரையாண்டி | வலையர் | 37 | விவசாயம் | சோளங்குருணி | 26.6.1994 |
| 7. | ந.முத்து | வலையர் | 45 | விவசாயம் | சோளங்குருணி | 26.6.1994 |
| 8. | மு.ராமன் | வலையர் | 50 | விவசாயம் | சோளங்குருணி | 26.6.1994 |
| 9. | ப.மணி | கோனார் | 30 | விவசாயம் | சோளங்குருணி | 26.6.1994 |
| 10. | மு.சோணை | கள்ளர் | 60 | கூலிவேலை | பனையூர் | 23.7.1994 |
| 11. | மு.சப்பாணி | அகமுடையார் | 50 | தலையாரி | பனையூர் | 23.7.1994 |
| 12. | ப.முத்திருளப்பபிள்ளை | வெள்ளாளர் | 70 | நூல்பட்டறை | பனையூர் | 23.7.1994 |
| 13. | இரா.முத்துக்கருப்பன் அம்பலம் | கள்ளர் | 59 | விவசாயம் | முக்கம்பட்டி | 16.9.1994 |
| 14. | சோ.வீரணன் அம்பலம் | கள்ளர் | 65 | விவசாயம் | முக்கம்பட்டி | 16.9.1994 |

| எண் | தகவலாளரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 15. | வீ.பெரியசாமிபிள்ளை | வெள்ளாளர் | 55 | விவசாயம் | மேலூர் | 20.9.1994 |
| 16. | ச.சொக்கலிங்கம் | கோனார் | 60 | விவசாயம் | மேலூர் | 20.9.1994 |
| 17. | பெ.மாசிலாமணி | கோனார் | 52 | விவசாயம் | சத்திரப்பட்டி | 23.12.1994 |
| 18. | சொ.வெள்ளைச்சாமிக்கோனார் | கோனார் | 75 | விவசாயம் | சத்திரப்பட்டி | 23.12.1994 |
| 19. | க.சோணை | பறையர் | 60 | கூலிவேலை | சத்திரப்பட்டி | 23.12.1994 |
| 20. | ஆ.பிச்சை அரசு | கள்ளர் | 50 | பண்ணையார் | காஞ்சரம்பேட்டை | 27.12.1994 |
| 21. | ரா.மலையாண்டி (எ) அசோக் | கள்ளர் | 30 | பண்ணையார் | காஞ்சரம்பேட்டை | 27.12.1994 |
| 22. | கி.கோபாலன் | அந்தணர் | 50 | அஞ்சல்துறை | அவனியாபுரம் | 15.1.1995 |
| 23. | வே.மாயாண்டி | அகமுடையார் | 60 | விவசாயம் | அவனியாபுரம் | 15.1.1995 |
| 24. | கோ.ஸ்ரீதரன் | நாயக்கர் | 35 | விவசாயம் | அலங்காநல்லூர் | 17.1.1995 |
| 25. | ந.நல்லுப்பட்டான் அம்பலம் | கள்ளர் | 67 | விவசாயம் | அச்சம்பட்டி | 15.2.1995 |
| 26. | சு.சுப்பையா | கள்ளர் | 63 | விவசாயம் | அச்சம்பட்டி | 15.2.1995 |
| 27. | அ.சோதி சொரூபன் | அகமுடையார் | 47 | வழக்கறிஞர் (பண்ணையார்) | எழுமலை | 18.2.1995 |
| 28. | தி.கந்தசாமி | அகமுடையார் | 52 | விவசாயம் | எழுமலை | 18.2.1995 |
| 29. | அ.பாண்டி | பள்ளர் | 55 | விவசாயம் | டி.பாரைப்பட்டி (M.கல்லுப்பட்டிக்கு அருகில்) | 19.2.1995 |

| எண் | தகவலாளரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்ப்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 30. | மா.நாராயணக்கோனார் | கோனார் | 67 | விவசாயம் | சக்குடி | 19.2.1995 |
| 31. | மு.பூரணச்சந்திரன் | கள்ளர் | 58 | விவசாயம் | சக்குடி | 19.2.1995 |
| 32. | ம.மருதன் | பள்ளர் | 55 | விவசாயம் | சக்குடி | 19.2.1995 |
| 33. | ஆ.ஆறுமுகம் | பள்ளர் | 55 | விவசாயம் | சிச்சிலுப்பை | 20.2.1995 |
| 34. | அ.ராமசாமி | கள்ளர் | 50 | விவசாயம் | கீழப்பட்டி | 22.2.1995 |
| 35. | மு.முத்துராமலிங்கம் | வெள்ளாளர் | 35 | விவசாயம் | அ.புதுப்பட்டி | 10.3.1995 |
| 36. | பி.முத்தையாபிள்ளை | வெள்ளாளர் | 60 | விவசாயம் | அ.புதுப்பட்டி | 10.3.1995 |
| 37. | நா.ஆலடி | அகமுடையர் | 40 | விவசாயம் | அ.புதுப்பட்டி | 10.3.1995 |
| 38. | க.நீலமேகக்கோனார் | கோனார் | 60 | விவசாயம் | பாலமேடு | 1.3.1995 |
| 39. | இரா.குருநாதக்கோனார் | கோனார் | 55 | விவசாயம் | ரெங்கராசபுரம் | 10.3.1995 |
| 40. | ம.சாமியார் அம்பலம் | கள்ளர் | 58 | விவசாயம் | அ.புதுப்பட்டி | 10.3.1995 |
| 41. | வ.அழகர்சாமி நாயக்கர் | நாயக்கர் | 60 | விவசாயம் | உச்சப்பட்டி | 10.3.1995 |
| 42. | கு.அழகுக்குடும்பன் | பள்ளர் | 50 | விவசாயம் | உச்சப்பட்டி | 10.3.1995 |
| 43. | மு.அரிச்சந்திரன் | பள்ளர் | 45 | விவசாயம் | களிமங்கலம் | 11.3.1995 |
| 44. | கா.நசீர்முகமது | ராவுத்தர் | 50 | விவசாயம் | களிமங்கலம் | 11.3.1995 |
| 45. | வே.மருது | கள்ளர் | 60 | விவசாயம் | அனஞ்சியூர் | 11.3.1995 |

| எண் | தகவலாளரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 46. | சா.சிக்கந்தர்பாட்சா | ராவுத்தர் | 45 | விவசாயம் | அனஞ்சியூர் | 11.3.1995 |
| 47. | ம.சோமையா | கள்ளர் | 50 | விவசாயம் | உறங்கான்பட்டி | 22.3.1995 |
| 48. | மு.பெரியகருப்பன் | கள்ளர் | 55 | விவசாயம் | உறங்கான்பட்டி | 22.3.1995 |
| 49. | சி.கந்தசாமித்தேவர் | பிரமலைக்கள்ளர் | 71 | விவசாயம் | கொ.புளியங்குளம் | 24.3.1995 |
| 50. | அ.முனியாண்டி | கவுண்டர் | 55 | கூலிவேலை | கொ.புளியங்குளம் | 24.3.1995 |
| 51. | கா.சாமிபிள்ளை | பறையர் | 55 | விவசாயம் | ஆணைமலையான்பட்டி | 24.3.1995 |
| 52. | க.தங்கம் | அகமுடையார் | 60 | விவசாயம் | குலமங்கலம் | 15.4.1995 |
| 53. | ரா.முத்துராமலிங்கம் | அகமுடையார் | 60 | விவசாயம் | குலமங்கலம் | 15.4.1995 |
| 54. | ராமையா நாயக்கர் | வேடநாயக்கர் | 55 | விவசாயம் | கரடிக்கல் | 16.4.1995 |
| 55. | பொ.அய்யாவு | அகமுடையார் | 52 | விவசாயம் | கரடிக்கல் | 16.4.1995 |
| 56. | அ.அம்மாசித்தேவர் | பிரமலைக்கள்ளர் | 60 | விவசாயம் | கரடிக்கல் | 16.4.1995 |
| 57. | வி.தமிழ்ச்செல்வம் | கள்ளர் | 40 | விவசாயம் | கடச்சனேந்தல் | 2.6.1995 |
| 58. | கு.கோபால் | கோனார் | 40 | விவசாயம் | போடிநாயக்கன்பட்டி (வாடிப்பட்டியில் ஒருபகுதி) | 15.9.1995 |
| 59. | ச.ஞானசேகரப்பாண்டியன் | நாயக்கர் | 41 | விவசாயம் | போடிநாயக்கன்பட்டி (வாடிப்பட்டியில் ஒருபகுதி) | 15.9.1995 |
| 60. | ச.நல்லதம்பித்தேவர் | அகமுடையர் | 75 | விவசாயம் | நெடுங்குளம் | 16.9.1995 |

| எண் | தகவலாளரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்ப்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 61. | வெ.பழனிச்சாமி | பள்ளர் | 60 | விவசாயம் | எழும்பூர் | 17.9.1995 |
| 62. | வெ.பொன்னையா | பள்ளர் | 62 | விவசாயம் | எழும்பூர் | 17.9.1995 |
| 63. | வெ.கருப்பணன் | கள்ளர் | 77 | விவசாயம் | சேக்கிபட்டி | 8.3.1996 |
| 64. | சீ.ராசாக்கிளி | ராவுத்தர் | 35 | விவசாயம் | சேக்கிபட்டி | 8.3.1996 |
| 65. | வெ.அழகுமலை | மூப்பர் (வலையர்) | 45 | விவசாயம் | நடுவக்கோட்டை | 10.3.1996 |
| 66. | ஆ.வேலுச்சாமி | மூப்பர் (வலையர்) | 45 | விவசாயம் | நடுவக்கோட்டை | 10.3.1996 |
| 67. | கா.பரமன் | மூப்பர் (வலையர்) | 50 | விவசாயம் | நடுவக்கோட்டை | 10.3.1996 |
| 68. | பி.சண்முகச்செட்டியார் | செட்டியார் | 55 | விவசாயம் | நடுவக்கோட்டை | 10.3.1996 |
| 69. | சு.குண்டுமலை | பள்ளர் | 40 | விவசாயம் | நடுவக்கோட்டை | 10.3.1996 |
| 70. | சு.ஆண்டித்தேவர் | பிரமலைக்கள்ளர் | 60 | விவசாயம் | நடுவக்கோட்டை | 10.3.1996 |
| 71. | வெ.வெள்ளைச்சாமி | மூப்பர் (வலையர்) | 46 | விவசாயம் | செள.வலையப்பட்டி | 11.3.1996 |
| 72. | இரா.நல்லுத்தேவர் | பிரமலைக்கள்ளர் | 50 | விவசாயம் | செளடார்பட்டி | 11.3.1996 |
| 73. | அ.பழனிச்சாமி | வெள்ளாளர் | 65 | விவசாயம் | ஆ.தெக்கூர் | 5.6.1999 |
| 74. | சி.சிவலிங்கம் | வல்லம்பர் | 85 | விவசாயம் | மு.கோவில்பட்டி | 5.6.1999 |

| எண் | தகவலாளரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்ப்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 75. | கே.எஸ்.பாண்டியர் | நாயக்கர் | 45 | சமீன்தார் | தொட்டப்பநாயக்கனூர் | 16.1.2000 |
| 76. | வா.ராசசேகர் | அகமுடையர் | 43 | ஊர்த்தலைவர் | தொட்டப்பநாயக்கனூர் | 16.1.2000 |
| 77. | கு.கருப்பையா | அகமுடையர் | 45 | வேளாண்மைத் துறை அதிகாரி | தொட்டப்பநாயக்கனூர் | 16.1.2000 |
| 78. | தியாகி குருசாமி | பறையர் | 75 | விவசாயம் | தொட்டப்பநாயக்கனூர் | 16.1.2000 |
| 79. | அ.மத்தளவீரன் | வலையர் | 70 | விவசாயம் | வீரபாண்டி | 23.1.2000 |
| 80. | ந.கோபால் | கோனார் | 55 | விவசாயம் | வீரபாண்டி | 23.1.2000 |
| 81. | கி.நாராயணன் | நாயர் | 94 | விவசாயம் | வீரபாண்டி | 23.1.2000 |

### காளை வளர்ப்பவர்கள் பட்டியல்

| எண் | காளை வளர்ப்பவரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | க.நீலமேகக்கோனார் | கோனார் | 60 | விவசாயம் | பாலமேடு | 1.3.1995 |
| 2. | வ.அழகர்சாமி நாயக்கர் | நாயக்கர் | 55 | விவசாயம் | உச்சப்பட்டி | 10.3.1995 |
| 3. | கு.அழகுக்குடும்பன் | பள்ளர் | 45 | விவசாயம் | உச்சப்பட்டி | 10.3.1995 |
| 4. | இரா.குருநாதக்கோனார் | கோனார் | 60 | விவசாயம் | ரெங்கராசபுரம் | 10.3.1995 |
| 5. | லெ.அழகுமலைக்குடும்பன் | பள்ளர் | 50 | விவசாயம் | குன்னத்தூர் | 27.2.1998 |
| 6. | சோ.கதிரேசன் | பள்ளர் | 28 | விவசாயம் | குன்னத்தூர் | 27.2.1998 |
| 7. | க.கருப்பன்சேர்வை | அகமுடையர் | 50 | விவசாயம் | குலமங்கலம் | 27.2.1998 |
| 8. | ந.கருப்பு | அகமுடையர் | 25 | விவசாயம் | அழகர்கோவில் | 27.2.1998 |
| 9. | க.கண்ணன் | சக்கிலியர் | 30 | விவசாயம் | காளிகாப்பான் | 27.2.1998 |
| 10. | மு.கணேசன் | அகமுடையர் | 30 | விவசாயம் | வரிச்சியூர் | 27.2.1998 |
| 11. | மூ.கைலாசம் | நாடார் | 45 | விவசாயம் | செம்புகுடிபட்டி | 27.2.1998 |
| 12. | மு.கோபால் | கோனார் | 40 | விவசாயம் | வே.புளியங்குளம் | 27.2.1998 |
| 13. | உ.கோட்டைச்சாமித்தேவர் | பிரமலைக்கள்ளர் | 50 | விவசாயம் | அய்யனார்குளம் | 27.2.1998 |
| 14. | க.சசிகுமார் | கள்ளர் | 25 | விவசாயம் | உத்தங்குடி | 27.2.1998 |
| 15. | அ.சமையன் | வலையர் | 30 | விவசாயம் | கருப்பாயூரணி | 27.2.1998 |

| எண் | காளை வளர்ப்பவரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 16. | க.சின்னையாத்தேவர் | பிரமலைக்கள்ளர் | 55 | விவசாயம் | குளத்துப்பட்டி | 27.2.1998 |
| 17. | கோ.சுப்பையாநாயுடு | நாயுடு | 67 | விவசாயம் | அலங்காநல்லூர் | 27.2.1998 |
| 18. | பா.செயசக்திவேல் | கள்ளர் | 25 | விவசாயம் | உத்தங்குடி | 27.2.1998 |
| 19. | சி.செல்வராசு | பள்ளர் | 40 | விவசாயம் | கோட்டூர் | 27.2.1998 |
| 20. | அ.செல்வராசுக்கோன் | கோனார் | 45 | விவசாயம் | வே.புளியங்குளம் | 27.2.1998 |
| 21. | அ.சேகர் | கள்ளர் | 30 | விவசாயம் | உத்தங்குடி | 27.2.1998 |
| 22. | போ.சேகர் | கள்ளர் | 25 | விவசாயம் | உத்தங்குடி | 27.2.1998 |
| 23. | நீ.சேவுகப்பெருமாள் | வலையர் | 30 | விவசாயம் | வே.புளியங்குளம் | 27.2.1998 |
| 24. | வ.சோலைராமன் | வலையர் | 35 | விவசாயம் | எலியார்பத்தி | 27.2.1998 |
| 25. | அ.தனுக்கோடி | கவுண்டர் | 30 | விவசாயம் | குன்னைப்பட்டி | 27.2.1998 |
| 26. | மு.திருப்பதி | வெள்ளாளர் | 25 | விவசாயம் | வெள்ளையம்பட்டி | 27.2.1998 |
| 27. | சு.தீனா | அகமுடையர் | 30 | விவசாயம் | குலமங்கலம் | 27.2.1998 |
| 28. | கா.தென்னரசு | கள்ளர் | 45 | விவசாயம் | லிங்காவாடி | 27.2.1998 |
| 29. | கி.தென்னரசு | கள்ளர் | 35 | விவசாயம் | லிங்காவாடி | 27.2.1998 |
| 30. | அ.தேவராசு | கோனார் | 40 | விவசாயம் | உத்தங்குடி | 27.2.1998 |
| 31. | பொ.நகுலன் | கள்ளர் | 26 | விவசாயம் | உத்தங்குடி | 27.2.1998 |
| 32. | அ.நாராயணன் | மறவர் | 50 | விவசாயம் | காரைக்கேணி | 27.2.1998 |

| எண் | காளை வளர்ப்பவரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 33. | பெ.நாராயணன் | வலையர் | 55 | விவசாயம் | எலியார்பத்தி | 27.2.1998 |
| 34. | க.பரந்தாமன் | கோனார் | 35 | விவசாயம் | சி.புதூர் | 27.2.1998 |
| 35. | சு.பழனிச்சாமி | பிரமலைக்கள்ளர் | 40 | விவசாயம் | உத்தப்பநாயக்கனூர் | 27.2.1998 |
| 36. | வி.பழனிச்சாமி | கள்ளர் | 25 | விவசாயம் | வெள்ளையம்பட்டி | 27.2.1998 |
| 37. | சு.பாண்டி | அகமுடையர் | 65 | விவசாயம் | குன்னத்தூர் | 27.2.1998 |
| 38. | பெ.பாண்டி | பள்ளர் | 58 | விவசாயம் | கருப்பாயூரணி | 27.2.1998 |
| 39. | சி.பிச்சை | பள்ளர் | 30 | விவசாயம் | கருப்பாயூரணி | 27.2.1998 |
| 40. | க.பூமிநாதன் | கள்ளர் | 28 | விவசாயம் | சித்தாக்கூர் | 27.2.1998 |
| 41. | வீ.மகாலிங்கம் | பள்ளர் | 30 | விவசாயம் | உச்சப்பட்டி | 27.2.1998 |
| 42. | சு.மஞ்சுராசு | பள்ளர் | 50 | விவசாயம் | கோட்டூர் | 27.2.1998 |
| 43. | கெ.மணி | சக்கலியர் | 45 | விவசாயம் | ஊமச்சிகுளம் | 27.2.1998 |
| 44. | து.மணிகண்டன் | மறவர் | 35 | விவசாயம் | காரைக்கேனி | 27.2.1998 |
| 45. | அ.மலைச்சாமி | அகமுடையர் | 38 | விவசாயம் | குன்னத்தூர் | 27.2.1998 |
| 46. | நா.மாசானம் | மறவர் | 50 | விவசாயம் | காரைக்கேனி | 27.2.1998 |
| 47. | ச.மாயாண்டிசேர்வை | அகமுடையர் | 65 | விவசாயம் | தாதன்குளம் | 27.2.1998 |
| 48. | தொ.மாரியப்பன் | சக்கிலியர் | 45 | விவசாயம் | ஊமச்சிகுளம் | 27.2.1998 |
| 49. | ந.மாயத்தேவர் | பிரமலைக்கள்ளர் | 55 | விவசாயம் | அய்யனார்குளம் | 27.2.1998 |

| எண் | காளை வளர்ப்பவரின் பெயர் | சாதி | வயது | தொழில் | ஊர்ப்பெயர் | நாள் |
|---|---|---|---|---|---|---|
| 50. | கோ.முத்துச்சாமி நாயக்கர் | நாயக்கர் | 45 | விவசாயம் | உச்சப்பட்டி | 27.2.1998 |
| 51. | பா.முத்துவேலு | பிரமலைக்கள்ளர் | 55 | விவசாயம் | உத்தப்பநாயக்கனூர் | 27.2.1998 |
| 52. | சு.முருகன் | பள்ளர் | 30 | விவசாயம் | கோட்டூர் | 27.2.1998 |
| 53. | ச.முனியன் | பள்ளர் | 30 | விவசாயம் | கருப்பாயூரணி | 27.2.1998 |
| 54. | ரா.மோகன்பீட்டர் | நாடார் | 23 | விவசாயம் | காஞ்சரம்பேட்டை | 27.2.1998 |
| 55. | அ.வெள்ளைச்சாமி | பள்ளர் | 60 | விவசாயம் | கோட்டூர் | 27.2.1998 |
| 56. | ச.வீராங்கன் | வலையர் | 35 | விவசாயம் | வே.புளியங்குளம் | 27.2.1998 |
| 57. | மு.ராசாங்கம் | கள்ளர் | 24 | விவசாயம் | குன்னத்தூர் | 27.2.1998 |
| 58. | மு.ராசு | கவுண்டர் | 50 | விவசாயம் | திண்டியூர் | 27.2.1998 |
| 59. | ரா.ராசேந்திரன் | பள்ளர் | 35 | விவசாயம் | பாலமேடு | 27.2.1998 |
| 60. | சி.ராமுத்தேவர் | பிரமலைக்கள்ளர் | 55 | விவசாயம் | குளத்துப்பட்டி | 27.2.1998 |
| 61. | அ.சேசுத்தேவர் | பிரமலைக்கள்ளர் | 50 | விவசாயம் | விக்கிரமங்கலம் | 27.2.1998 |
| 62. | வே.ஊமையன் | பிரமலைக்கள்ளர் | 55 | விவசாயம் | உச்சப்பட்டி | 2.1.1999 |
| 63. | ஸ்ரீதரன் | பிரமலைக்கள்ளர் | 35 | விவசாயம் | அலங்காநல்லூர் | 2.1.1999 |

## வாடி அமைப்பு




1.உள்வாடி
2.அணைமரம்
3.வாடிவாசல்
4.வாடியின் பின்பகுதி
5.பார்வையாளர் பகுதி
6.காளை வெளியேறும் பகுதி



உ
ஜக்கம்மாள் துணை

# ஜல்லிக்கட்டு விழா அழைப்பிதழ்

இடம் : **தொட்டப்பநாயக்கனூர்**

நாள் : 17-1-2000 திங்கள்கிழமை தைமாதம் 3-ம் தேதி

நேரம் : **பகல் 1-30 மணி**



மதுரை மாவட்டம், உசிலம்பட்டி வட்டம் தொட்டப்பநாயக்கனூர் ஜமீன் தொட்டப்ப நாயக்கனூரில் 4கரை நல்லுத்தேவன்பட்டி புத்தூர் நாட்டுக்குட் பாத்தியப்பட்ட வரலாற்று சிறப்புமிக்க ஜல்லிக்கட்டு வெகுவிமரிசையாக நடைபெற உள்ளது. தொட்டப்பநாயக்கனூர் ஜமீனுக்குப் பாத்தியப்பட்ட 4கரை நல்லுத்தேவன்பட்டி புத்தூர் நாடு அனைத்து மக்களும் நலம் பெற விவசாயம் செழிப்படையவும் ஆடு, மாடுகள் பிணி நீங்கி வளம்பெறவும் இந்நிகழ்ச்சி நடைபெறுகிறது.

ஜல்லிக்கட்டில் கலந்து கொள்ளும் காளைகளுக்கும், மாடு அணையும் வீரர்களுக்கும், **T.V. மிக்ஸி, டேப் ரிக்கார்டர், அயர்ன்பாக்ஸ், சீல்டு, வெள்ளிக்காப்பு, சுவர்கடிகாரம் மற்றும் குத்துவிளக்குகள்** வழங்கப்படும் அனைத்து பொதுமக்களும் விழாவில் கலந்து கொள்ள வேண்டுமாய் அன்புடன் அழைக்கின்றோம்.

இப்படிக்கு,

ஜமீன்தார். **K.S.S. பாண்டியர்**

மற்றும்

கிராம பொதுமக்கள்

தொட்டப்பநாயக்கனூர் பஞ்சாயத்து

பாரதி அச்சகம் கம்ப்யூட்டர் & ஆப்செட், உசிலை

